# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Monday, the 16th March 1959.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

### I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Second Five-Year Plan*

* 805 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the Centre have promised the State Government to increase the capital outlay for the next two years of the Second Five-Year Plan period at the National Development Council meeting held in November 1958;

(*b*) if so, the details thereof;

(*c*) whether this State had been asked to raise the internal resources for the Plan; and

(*d*) if so, the amount to be raised?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir. In this connection, I may point out that in meetings of the National Development Council, representatives of the State Governments participate in considering issues of broad national policy, and, while the problems of particular States may be mentioned, main attention is given to points for decision or consideration at the National level.

(*b*) Does not arise.

(*c*) & (*d*) According to the estimate of resources prepared by the Planning Commission, there is a gap of Rs. 82 crores in the outlay of State Plans during the remaining two years of the Plan period. The State Governments have been requested to raise necessary additional resources to cover this gap.

So far as the Madras State is concerned, we have already exceeded the target of additional taxation and hence, this State has not been specifically asked to raise any additional resources.

SRI N. K. PALANISAMI : துண்டு விழக்கூடிய 25 கோடி 30 கோடி ரூபாயை சரிக்கட்டுவதற்கு மூலதனம் என்ன? அதை சரிக்கட்டு வதற்கு இந்த மாகாணம் ஓளவு வரி விதித்து ஏதாவது ரிசோர்ஸை அதிகப்படுத்த வேண்டும் என்று ஏதாவது விவாதிக்கப்பட்டதா?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதை வசூல் செய்வதைப பற்றி பொதுவாக விவாதிக்கப்பட்டது. சில ஸ்டேட்டுகள்தான் இதைப் பண்ண வேண்டுமென்பதைப்பற்றி ஒன்றும் விவாதிக்கவில்லை.

[16th March 1959

**SRI S. NAGARAJA MONIGAR** : திட்டங்கள் நிறைவேற்றுவதில் ஏற்கனவே வேண்டிய அளவுக்கு முடிக்கப்பட்டிருப்பதும் ஒரு வகையில் இந்த மாகாணத்தில் திறமை, வசதிகள் முதலியவைகளைப் பொருத்தது. திட்டமிட்ட காலத்திற்குள்ளாக இந்த மாகாணம் நிறைவேற்றி விட்டது என்று ஏற்கனவே ஆலோசனைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டதா, அதனால் அதிகப்படியான காரியங்களைச் செய்வதற்கு திட்டமிட்டு அதற்கு வேண்டிய ஏற்பாடுகளும் செய்யப்பட்டனவா, நம் மாகாணம் திட்டமிடப்பட்டிருக்கக் கூடிய அளவுக்கு செய்திருக்கிறோமா ?

**MR. SPEAKER** : The Education Demand is coming up later on. Let the hon. Member put this in the form of a question. If the Hon. the Minister answers the question, I have no objection.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : I could not follow the question, Sir.

**MR. SPEAKER** : Hon. Members must listen to me. When asking questions, they must put questions only, and not give information. How can the Hon. Minister follow? He says he cannot understand the question.

**SRI N. K. PALANISAMI** : திட்டம் 1952–53—ஆம் வருஷத்திய விலைவாசி அடிப்படையில் இது தயாரிக்கப்பட்ட பிறகு விலைவாசி அதிகமாகபோனதற்கு பிறகு . . . .

**MR. SPEAKER** : The Hon. Member is making a speech.

**SRI N. K. PALANISAMI** : ஆகவே திட்டச் செலவு அதிகமானதற்குக் காரணம் விலைவாசி அதிகமானது திட்ட அளவில் மூலதன செலவு அதிகமாகி இருக்கிறது. இதைக் குறைக்க சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : இதையெல்லாம் அனுசரித்துத் தான் அதற்குவேண்டிய அளவில் திட்டமிட முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டியதாக இருக்கிறது.

**SRI S. LAZAR** : இப்பொழுது 82 கோடி ரூபாய் துண்டு விழுவதாக சொல்லப்படுகிறது. அதனால் இந்த மாகாணத்தில் திட்டம் எந்த அளவிலாவது பாதிக்கப்படுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : இப்படி துண்டு விழக் கூடிய ரூபாய் 82 கோடியும் ஒரு ராஜ்யத்தைச் சேர்ந்தது மட்டும் அல்ல. இந்த ராஜ்யம் பொறுத்த மட்டில் நாம் பொதுவாக நிதியை திரட்டிக் கொண்டிருக்கிறோம் என்பதைப்பற்றி பின்னால் குறிப்பிட்டேன்.

**SRI M. P. SUBRAMANIAM** : வரி விதிப்பு பொறுத்த அளவில் இந்த மாகாணம் உச்ச வரம்பை அடைந்து விட்டதாகச் சொல்லப்படுகிறது. இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தை நிறைவேற்றுவதற்கு எத்தனையோ கோடி பற்றாக்குறை இருக்கிறது. அப்படி இருந்தால் அதை சரிக்கட்டுவதற்கு ஏதாவது ஆலோசனை உண்டா?

**THE HON. SRI C. SUBRAMANIAM.** : இதில் கவனத்தில் எடுத்துக்கொள்ளவேண்டியது என்னவென்றால், ரெவின்யூ செலவுகள் என்றால் திட்டத்தை நிறைவேற்ற வரி போட்டு வசூலிக்கப்படும். ஆனால் மூலதனச் செலவுக்காக, கடன் எழுப்ப வேண்டும் என்று பட்ஜெட்டில் யோசனை இருக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறேன். **(Expected gap)** என்ற நிலைமை நமக்கு ஏற்படும் என்று நான் நினைக்கவில்லை.

16th March 1959]

*Kalagam-Avadayarkoil road*

* 806 *Q*.—SRI R. SRINIVASA IYER: Will the Hon. the Chief Minister be pleased to state when the road from Kalagam to Avadayarkoil in Pattukottai division, Tanjore district—Miles 0 to 2 from Kalagam to Poonakuthikollai—is proposed to be metalled with granite jelly?

THE HON. SRI C. SUBRAMANIAM: The work was included in the Local Development Works Programme but it could not be taken up for execution for want of the District Board's consent to contribute 25 per cent of the cost thereof. By the time the District Board agreed to make the contribution, the allotment for the district had been fully utilised. The work cannot therefore be taken up for execution in the current year. The question of taking it up for execution in the next year is under consideration.

SRI R. SRINIVASA IYER: Sir, this is an important link of only two miles. Will the Government at least take it up in some other programme and link up this two miles of road so that buses may ply from Tanjore to Sellinbarachatram.

THE HON. SRI C. SUBRAMANIAM: If the hon. Member has any useful suggestion to make, he may put it in writing and pass it on to the concerned department.

*Oil Producers Co-operatice Society in North Arcot District.*

*807 *Q*.—SRI T. S. RAMASWAMY PILLAI (on behalf of Sri M. P. SARATHI): கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டத்தில் ஒரு எண்ணெ உற்பத்திக் கூட்டுறவு சங்கத்தில் மோசடியாக கடலைப் பற்றுக்குப் பதில் புளியங்கொட்டை முதலியவையுள்ள மூட்டைகள் காட்டப்பட்டது பற்றி புகார் சமீபத்தில் வந்ததா?

(ஆ) அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Yes, Sir.

(*b*) The non-official Secretary of the Society, who was responsible for the fraud was made to make good the bags of oilseeds, which he did. He was also removed from Secretaryship.

SRI M. P. SUBRAMANIAM: இந்த எண்ணெ உற்பத்தியாளர்கள் கூட்டுறவு சங்கங்களுக்கு கடன் எவ்வளவு கொடுக்கப்பட்டிருக்கிறது? அவற்றில் எவ்வளவு திருப்பித் தரப்பட வேண்டியதாக இருக்கிறது என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON SRI M. BHAKTAVATSALAM: அந்த விவரம் இப்பொழுது என்னிடம் இல்லை.

*Compulsory Elementary Education.*

* 808 *Q*.—SRI A. VEDARATHNAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) அகில இந்திய ஆரம்பக் கல்வி கவுன்சில் சமீபத்தில் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவிற்குள் ஆறு முதல் பதினோறு வயதிற்

குட்பட்ட சிறுவர்களுக்கு கட்டாயக் கல்வி திட்டத்தை கொண்டுவர வேண்டு மென்று செய்துள்ள சிபாரிசையொட்டி அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது ?

(ஆ) இத் திட்டம் எப்போது அமுலுக்கு வரும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) & (b) The recommendation of the All-India Council for Elementary Education regarding introduction of compulsory education has been received by Government. This recommendation is in line with the one made by the 'Legislature Committee on the White Paper on Education' to the effect that Education should be made free and compulsory for all children between the ages of six and 11 in all towns and villages of the State by the end of the year 1965–66. A scheme for implementing this recommendation, starting from 1959–60 is being drawn up.

Sir, I think I can answer the next question also.

MR. SPEAKER : Yes.

* 809 *Q*.—SRI A. VEDARATHNAM (on behalf of SRI P. G. MANICKAM): கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1959-ம் வருஷத்திலே எந்தெந்த அபிவிருத்தி பிளாக்கு களிலே கட்டாய இலவசக் கல்வியானது எலிமெண்டரி பாடசாலைகளிலே அமுலுக்குக் கொண்டுவரப்படும் ?

(ஆ) கட்டாயக் கல்வி சம்பந்தமாக எடுக்கப்படப்போகும் விதி முறை கள் யாவை?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) & (b) A detailed scheme for the introduction of free and compulsory education in the first five years of schooling is being worked out in consultation with the Director of Public Instruction. It will be finalised shortly.

SRI A. VEDARATHNAM : நம்முடைய அரசியல் நிர்ணய சட்டத்தின் பிரகாரம் 1960 க்குள்ளாக இந்நாட்டில் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் எல்லோருக்கும் கல்வி அறிவு புகுத்தப்பட வேண்டும் என்று திட்ட மிடப்பட்டிருக்கிறதே அதற்கு என்ன முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார் கள். அப்படி சாத்தியம் என்று இந்த அரசாங்கம் நினைக்கிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : சட்டம் செய்வதன் மூலம் அதை அமுல் நடத்துவது எப்படி என்பது தெரிய வந்திருக்கிறது. அப்படி நிறைவேற்ற முடியாது என்ற காரணத்தால் இந்த ஸ்டேட்டை பொறுத்த வரையில் 6 வயது முதற்கொண்டு 11 வயது வரையிலுள்ள குழந்தைகளுக்கு 1965–66க்குள் பள்ளிக்கூடத்தில் பயிற்சி கொடுக்க வேண்டும் என்று திட்டமிடப்பட்டிருக்கிறது, அதன் மூலம் அவர்களுக்கு கல்வி அறிவு புகுத்தப்பட வேண்டும் என்று திட்டமிடப்பட்டிருக்கிறது. அந்த அடிப்படையையே அகில இந்தியாவும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

SRI K. RAMACHANDRAN : ஏற்கனவே விவாதித்தபோது பஞ்சாயத்து யூனியன் ஏற்பாடு செய்கிற அந்தந்த பகுதிகளில் கட்டாயக் கல்வியை முதன் முதலாக ஆரம்பத்திலிருந்தே புகுத்த முன் வரலாம் என்ற கருத்தை தெரிவிக்கப்பட்டது. அப்படியென்றால் அப்படி புகுத்த

ஆரம்பிக்கப்பட்டிருக்கிறதா அப்படி ஆரம்பிக்கப்பட்டால் டெவலப்மெண்ட் ப்ளாக்குகளில் முதலில் இந்த திட்டத்தை நிறைவேற்றுவதற்கு இந்த அரசாங்கம் முன் வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : திட்டம் முடிவாகும் போது இதைப்பற்றி கடைசியாக கவனித்துச் சொல்ல முடியும்.

SRI A. VEDARATHNAM : கட்டாயக் கல்வி திட்டத்தை எவ்வளவு பிரதேசங்களில் இப்பொழுது உடனடியாக எடுத்துக்கொள்ள திட்டமிட்டிருக்கிறது. அது எப்பொழுதிலிருந்து ஆரம்பமாகிறது. எப்பொழுது அந்த திட்டம் அமுலுக்கு வரப்போகிறது?

THE HON. SRI C. SUBRAMANIAM : திட்டத்தைப்பற்றி இப்பொழுது ஆலோசனை நடந்துகொண்டிருக்கிறது. கூடிய சீக்கிரத்தில் அந்த திட்டம் உருவாகும். உருவாகிய அடுத்த வருஷத்திலிருந்து அது எடுத்துக் கொள்ளப்படும்.

SRI A. A. RASHEED : Sir, is the Hon. Minister aware that in some of the compulsory areas, children do not attend school regularly? If so, will the Government take any punitive action against the defaulting parents?

THE HON. SRI C. SUBRAMANIAM : It is not by taking punitive action that we would be able to bring all the children to the school. That is why we are trying to give them inducement by way of supplying midday meals also.

SRI S. PAKKIRISAMI PILLAI : கட்டாயக் கல்வியை நமது ராஜ்யத்தில் அமுலுக்குக் கொண்டு வரும்போது அதே சமயத்தில் பத்து அல்லது பதினோராவது வகுப்பு வரை படிக்கும் உயர்நிலைப்பள்ளி பிள்ளைகளுக்கு அதாவது ஏழை பிள்ளைகளுக்கு இலவசமாக பயிற்சி கொடுக்க திட்டம் சீக்கிரம் வரப்போகிறது என்று நமது முதல் அமைச்சர் அவர்கள் அவ்வப்பொது சொல்லிக்கொண்டு வந்திருக்கிறார். அது இந்த வருஷத்திலிருந்து அமுலுக்கு வருமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தக் கேள்விக்கும் முதல் கேள்விக்கும் சம்பந்தம் இல்லை.

MR. SPEAKER : கனம் அமைச்சர் கக்கன் அவர்கள் ஊரில் இல்லாததால் அவருடைய கேள்விகள் எல்லாம் 19-ம் தேதி எடுத்துகொள்ளப் படும்.

*Block Advisory Committee*

* 812 *Q.*—SRI T. VELUCHAMI : Will the Hon. the Chief Minister be pleased to State—

(*a*) whether the Government have instructed the Collector of Tirunelveli to convene a meeting of all the Non-official members of the Block Advisory Committees of all the blocks in the district once in every half year, and

(*b*) whether any such meetings have been held ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir. The Collectors of all the Districts except the Collector of Madras have been requested to convene meetings of all the non-official members of the Block Development Committees in their districts once in every half-year.

(*b*) A meeting was held on 23rd December 1958 at the office of the Collector of Tirunelveli.

SRI T. VELUCHAMI : இந்த மீட்டிங்கில் செய்யப்பட்ட ஆலோசனைகளைப்பற்றி என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டன?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்த விவரம் இப்பொழுது என்னிடம் இல்லை.

*Social Welfare Board, Tirunelveli District*

* 813 *Q.*—SRI T. VELUCHAMI : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) the activities of the Social Welfare Board in Tirunelveli district during 1957 and 1958; and

(*b*) the expenditure incurred during these years?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The following activities are carried on in the Centres opened in the Welfare Extension Project launched in Tirunelveli district :—

(1) Training in Spinning, Tailoring and Embroidery is imparted to the women who attend the Centres.

(2) Maternity Aid is provided.

(3) Balwadi Classes are conducted for the benefit of children.

(*b*)—

| | | Total expenditure. | Share of State Government. |
|---|---|---|---|
| | | RS. | RS. |
| 1956–57 | .. | 33,038 | 8,259 |
| 1957–58 | .. | 52,239 | 17,402 |

*Coconut breeding-cum-research station*

* 814 *Q.*—SRI R. SRINIVASA IYER (on behalf of SRI V. SANKARAN) : Will the Hon. the Minister for Home be pleased to state how far the proposal of the Government to start a coconut breeding-*cum*-research station either at Sholavandan or Nilakottai has been implemented?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is no proposal to start a coconut breeding-*cum*-research station either at Sholavandan or at Nilakottai.

SRI R. SRINIVASA IYER : Considering the importance of coconut cultivation and production, are the Government appointing any Research Officer for carrying on research on the availability and suitability of soil at least in the coastal areas of this State?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is no such proposal. But, Government have already sanctioned two research stations—parasite breeding stations—, one at Nagercoil and the other at Gudiyatham. There is also a proposal to re-open the parasite-breeding station at Udangudi in Tirunelveli district which was closed sometime back. The approval of the Government of India has been sought.

16th March 1959]

SRI M. D. THIAGARAJA PALLAI : தலைவர் அவர்களே, மலபார பிரதேசம் நம்முடைய நாட்டில் இருந்து பிரிந்த பிறகு இந்தத் தென்னை அபிவிருத்திக்கு ஆராய்ச்சி சாலைகளை ஏற்படுத்த வேறு திட்டம் இருக்கிறதா?

THE HON SRI M. BHAKTAVATSALAM : புதிய ஆராய்ச்சி சாலைகளை அமைக்க யோசனை இருக்கிறது.

SRI A. VEDARATHNAM : எந்த இடத்தில் இந்த ஆராய்ச்சி சாலை அமைக்க யோசனை இருந்து கொண்டிருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுதுதான் சொன்னேன். நாகர்கோவில், குடியாத்தம், திருநெல்வேலியில் உள்ள உடன்குடி ஆகிய பகுதிகளில் ஆரம்பிக்க யோசனை இருக்கிறது.

SRI P. S. K. LAKSHMIPATHI RAJ : மது விலக்கு அமுலுக்கு வந்த பிற்பாடு இந்தத் தென்னை மரத்தில் இருந்து கிடைக்கிற பொருள் அதிகரித்திருக்கிறதா என்பதை அமைச்சர் அவர்கள் கூறுவார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப் பற்றி ஒன்றும் கணக்கு எடுக்கவில்லை. அதிகரித்துத் தான் இருக்கவேண்டும். கள் இறக்க தென்னையை அதிகமாக உபயோகப்படுத்துவதில்லை.

SRI A. A. RASHEED : May I know whether coconut seedlings are distributed to the farmers at concessional rates?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. Coconut nurseries are conducted and these seedlings are distributed at concessional rates.

SRI R. SRINIVASA IYER : This question is a little dubious. I asked about coconut breeding-*cum*-research station. The Hon. Minister's reply was about parasite-breeding stations. My question was about the growing of coconut trees as such. May I know whether any research station has been set up to find out the suitability of the soil in the State and whether any research has been carried on in this respect?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir, that is also done.

*Training in Museology in West Germany*

* 815 *Q.*—SRI T. S. RAMASWAMY PILLAI (on behalf of SRI T. T. DANIEL) : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether any scholarships have been offered by the Government of West Germany to Indian Nationals for getting Training in Museology in that country ; and

(*b*) whether any person has been selected this year from this State?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) No, Sir.

SRI T. S. RAMASWAMY PILLAI : May I know the reasons as to why nobody was selected?

THE HON. SRI C. SUBRAMANIAM : One person was recommended for this scholarship, but the German Government rejected his case on the ground that he did not possess sufficient knowledge of German.

SRI M. JAGANNATHAN : What was the value of the scholarship offered by the German Government?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not have the exact figure with me just now.

*Legislation for regulating service conditions*

* 818 *Q.*—MR. SPEAKER : As the hon. Member Sri M. P. Sarathi is absent, the question and answer will be printed in the Official Proceedings.

SRI M. P. SARATHI : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) குடியரசின் அரசியல் சட்டம் 309-வது பிரிவின் கீழ் இந்த ராஜ்ய ஊழியர்கள் பற்றி சட்டம் ஏதேனும் கொண்டுவர உத்தேசிக்கப்பட்டுள்ளதா ?

(ஆ) அது எப்பொழுது சாத்தியமாகும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*Open air jails.*

* 819 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal to establish open air jails?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

There is however one Special Sub-Jail at Singanallur in Coimbatore district which is in the nature of an 'Open Prison.'

SRI A. A. RASHEED : Has the attention of the Government been drawn to the suggestion of an eminent retired Judge of the High Court regarding the necessity for opening such jails?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, the Jail Reforms Committee has made certain recommendations and this is one such recommendation. Therefore, Government have been trying to implement this recommendation. Thus, this question is linked up with the other one.

SRI K. R. NALLASIVAM : கோயம்புத்தூர் மத்திய சிறையில் உள்ள நீண்ட கால கைதிகளை, சமீபத்தில் போடக்கூடிய பரம்பிக்குளத் திட்டத்தில் ஒரு சோதனையாக வேலையில் ஈடுபடுத்திப் பார்க்கக் கூடாதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நீண்டகாலக் கைதிகளை எடுத்துக்கொள்ளுவது, குறுகிய காலக் கைதிகளை எடுத்துக்கொள்வது என்பது வேறு விஷயம். வைகைத் திட்டத்தில் இந்த மாதிரிக் கைதிகள் பயன்படுத்தப்பட்டார்கள். அவ்வாறு, எங்கெங்கு தகுதி இருக்கிறதோ அங்கெல்லாம் கவனிக்கப்படும்.

SRI V. K. KOTHANDARAMAN : திறந்த வெளி சிறைச் சாலைகளைச் சர்வாதிகார ஆட்சியில் ஏற்படுத்தி வருவதாகத்தான் நாம் அறிகிறோம். ஆகவே இந்தக் கேள்வி கேட்ட அங்கத்தினர் அவர்கள்.

MR. SPEAKER : இது பதிலில் சொல்லவில்லை.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர்கள் சொல்லுவது எனக்குப் புரியவில்லை. அது அவர்களுடைய சொந்த அபிப்பிராயமாக இருக்கலாம். சர்வாதிகார நாட்டினுடைய ஏகபோக உரிமை என்றோ ஜனநாயக ஆட்சியில் ரொம்பப் பொருத்தம் என்றோ நான் சொல்லவில்லை.

SRI A. A. RASHEED : May I know how this open-air jail is running in Coimbatore?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There, only a small number of prisoners have been asked to cultivate some land which is available and they have been carrying on.

*Admissions to Colleges*

* 820 *Q*.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state the steps taken by the Government to provide more seats in Professional and Arts Colleges in the State for the year 1959?

THE HON. SRI C. SUBRAMANIAM : The Government do not propose to take any steps to increase the number of seats in Professional and Arts Colleges in the State for the year 1959.

SRI N. K. PALANISAMI : வருஷா வருஷம் இந்த "ப்ரொபஷனல்" காலேஜ், எஞ்சினியரிங் காலேஜ், மெடிகல் காலேஜ் ஆகியவைகளில் அநேக மாணவர்கள் இடம் கிடைக்காமல் மிகவும் கஷ்டப்படுவதன் காரணமாக, அதிகப்படியான மாணவர்களைச் சேர்க்க வேறு ஏதாவது திட்டம் இருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது எஞ்சினீயரிங் காலேஜைப் பொறுத்தவரை போதுமான அளவு வசதிகளைப் பெருக்கி இருக்கிறோம். உதாரணமாக காலேஜ் ஆப் எஞ்சினீயரிங், கிண்டியில் 155 பேரை அதிகமாக எடுக்க போதிய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. கவர்ண்மெண்ட் காலேஜில் 45 அதிகம். ஏ. சி. காலேஜ், காரைக்குடியில் 20 அதிகம். பி. எஸ். ஜி. காலேஜில் 20 அதிகம். கோயம்புத்தூர் காலேஜில் 120 அதிகம். புதிய காலேஜ்கள் உருவாக இருக்கின்றன. தியாகராஜா காலேஜ், மதுரையில் 120 அதிகம்.

SRI S. LAZAR : ப்ரொபஷனல் காலேஜ்களைப் பொறுத்தவரை இப்பொழுது தேவைப்படுகின்ற அளவுக்கு அங்கிருந்த பயிற்சி பெற்ற மாணவர்கள் வெளி வருகின்றனரா ? இல்லையென்றால் எவ்வளவு குறைவு அல்லது அதிகம்?

THE HON. SRI C. SUBRAMANIAM : காலேஜைப் பொறுத்தவரை இப்போதைய தேவைக்குப் போதும் என்பது என் கருத்து. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் உருவாகும்போது எத்தனை எஞ்சினீயர்கள் வேண்டுமென்பது பற்றி இப்பொழுதிலிருந்தே திட்டமிட்டு, இன்னும் எத்தனை பேர் அதிகமாக வேண்டுமென்பதைப் பற்றி முடிவு செய்து, அதற்கான நடவடிக்கைகள் அடுத்த ஆண்டில் இருந்து எடுக்கப்படும்.

[16th March 1959

SRI N. K. PALANISAMI : இந்த மாணவர்களைத் தேர்ந்தெடுக்க ஏற்படுத்தப்பட்டிருக்கும் கமிட்டிகள் ஒவ்வொரு காலேஜிலும் ஏற்படுத்துவதாகத் திட்டம் இருக்கிறதா ?

MR. SPEAKER : இந்தக் கேள்வியில் இருந்து இது எழவில்லையே.

THE HON. SRI C. SUBRAMANIAM : ஒரே ஒரு கமிட்டி தான் வேலை செய்து வருகிறது.

SRI V. SUBBIAH : சார், இந்த நாட்டிலே விவசாய உற்பத்தி பெருக வேண்டுமென்று சொல்லக்கூடிய நேரத்திலே விவசாயப்பட்டதாரிகள் குறைவாக இருக்கிறார்கள். விவசாயக் கல்லூரிகளில் அந்தப் பட்டதாரிகள் எத்தனை பேர் அதிகப்படுத்தப்பட்டிருக்கிறார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தப் புள்ளி விவரங்கள் என்னிடம் இல்லை. அதிலும் அதிகப்பட்டிருக்கிறது என்பதைக் கனம் அங்கத்தினர்கள் உணர்ந்திருப்பார்கள்.

*Appointment of women as Block Development Officers*

* 821 Q.—SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

இதுவரை பெண்களை B.D.O.-வாக எடுத்திருக்கிறார்களா ? இல்லாவிடில் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : No Sir. If and when suitable women candidates are available their cases will no doubt be considered.

SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM : சமுதாய நலத் திட்டம் 3 லட்சம் முதல் 5 லட்சம் வரை பெண்களிடம் ஒப்படைக்கப் பட்டிருக்கிறது. திட்டவேலைகள் வெற்றிகரமாக நடந்து வருகின்றன. சமுதாய நல பி.டி.ஓ.க்கள் பதவி பெண்களுக்கும் கொடுக்கப்படுமானால் அவர்கள் அந்தப் பதவியை ஏற்று திட்டமாக நல்ல முறையில் சமுதாய நலத் திட்டங்களை நிறைவேற்றுவார்கள் என்ற காரணத்தால் அவர்களுக்கும் அந்தப் பதவியைக் கொடுக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அவர்களை அமர்த்தினால் திறமையாகச் செய்வார்கள். அதற்குத் தக்க பெண்கள் முன்வர வேண்டும்.

SRI V. K. KOTHANDARAMAN : "Women Welfare Officer"கள் ஆக தகுதியுள்ள பெண்கள் நியமிக்கப்பட்டிருக்கிற நேரத்தில் வேலூரில் சமீபத்தில் நடந்த 3 ஜில்லாக்களைக் கொண்ட சமுதாய நலக்கூட்டத்திலே பெண்கள் பி.டி.ஓ.க்களாக நியமிக்கப்படவேண்டுமென்று ஏகமனதாகத் தீர்மானம் போட்டிருக்கிறார்கள். அதைப் பற்றி உடனடியாகப் பரிசீலனை செய்யப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தீர்மானம் போடுவது வேறு. அதற்குத் தகுதியுள்ள பெண்கள் வரும்போது அவர்களை எடுத்துக்கொள்ள முடியும். தகுதியுள்ள பெண்கள் வரும்போது இதைப் பற்றிக் கவனிக்கப்படும்.

SRI A. A. RASHEED : What are the qualifications prescribed for the post of Block Development Officers?

THE HON. SRI C. SUBRAMANIAM : A separate question may be put.

16th March 1959]

SRI M. JAGANNATHAN : May I know whether so far any women applied for these posts of Block Development Officers?

THE HON. SRI C. SUBRAMANIAM : There is no question of application. As a matter of fact, Block Development Officers are selected from the existing cadres in the Revenue, Co-operation, Agriculture, etc., departments. Unless women officers are available in those departments, we cannot select them as Block Development Officers. But hon. Members may be aware that an hon. Member of this House was some time in charge of the Athur Block and that she did her duties fairly well to the satisfaction of everybody.

SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM : தலைவர் அவர்களே, தகுந்த காண்டிடேட்டுகள் வருவார்களானால் யோசிக்கப்படும் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இப்போது இருக்கக் கூடிய பிளாக் டெவலெப்மெண்ட் ஆபீஸர்களில் சில பேர்களை எஸ்.ஈ.ஓ.-க்களிலிருந்து புரோமோஷன் செய்து அமர்த்தியிருக்கிறார்கள். பெண் எஸ்.ஈ.ஓ.க்களாக பிளாக்குகளில் வேலை செய்பவர்களை பிளாக் ஆபீஸர்களாகப் போட சர்க்கார் முயற்சி செய்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதே பதிலைத்தான் கொடுக்க வேண்டியிருக்கிறது. தகுதியுள்ளவர்கள் இருந்தால் அதைப் பற்றி கவனிக்கப்படும்.

## *Educational concessions*

*825 Q.—SRI T. VELUCHAMI : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) என்.ஜி.ஓக்களின் குழந்தைகளுக்கு கல்விச் சலுகை அளிப்பதற்கான வருமான வரம்பை அதிகப்படுத்துவதற்கு ஏதேனும் உத்தேசமுண்டா ?

(ஆ) இல்லை என்றால், ஒரு குறிப்பிட்ட எண்ணிற்கு அதிகமாகக் குழந்தைகளைப் படிக்க வைக்கவேண்டிய என்.ஜி.ஓக்களுக்கான வருமான வரம்பை அதிகப்படுத்துவது பற்றி சர்க்கார் யோசிக்கிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) & (b) There is at present no income limit fixed for the grant of educational concessions to the children of N.G.Os. The children of all N.G.Os. are eligible for fee concessions without any limit as to their number.

*826 Q.—SRI T. VELUCHAMI : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

கல்விச் சலுகைகள் அளிக்கும் விஷயத்தில் எந்தெந்த சமூகத்தாருக்கு எந்தெந்த விதமாக கல்விக்கு வருமான வரம்பு கவனிக்கப்படுவதில்லை ?

THE HON. SRI C. SUBRAMANIAM : The grant of fee concessions under the Madras Educational Rules is subject to the condition that the annual income from all sources of the parents or guardians of the pupils does not exceed Rs. 1,200 in the case of schools and Rs. 1,500 in the case of college courses in respect of all eligible communities. No discrimination on communal grounds is made in the matter of income limit of parents.

[16th March 1959

SRI K. VINAYAKAM : In view of the fact that there is a big rise in the cost of living of the people, will the Government think of the possibility of raising the income limit as far as these concessions to Backward Classes are concerned?

THE HON. SRI C. SUBRAMANIAM : There is no such proposal at present.

SRI K. VINAYAKAM : Even supposing there is no such proposal, will the Government think of exploring the possibility of raising the income limit?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, when the occasion arises.

*Merger of dearness allowance with the pay of N.G.Os.*

*** 827 Q.**—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI) : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) இந்த ராஜ்ய கெஜட் பதிவில்லா ஊழியருக்கு கொடுக்கப்படும் பஞ்சப்படியை முழுவதுமோ அல்லது ஒரு பகுதியையோ சம்பளமாகவே கணக்கிடும்படி செய்ய அரசாங்கம் ஆலோசித்துள்ளதா ?

(ஆ) அது பற்றிய முடிவு எப்பொழுது வெளியிடப்பட்டு எது முதல் அமுல் செய்யப்படும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The matter will be considered by the Pay Commission recently constituted.

(*b*) Does not arise now.

*Elementary School for Kannadikulam village*

*** 830 Q.**—SRI T. VELUCHAMI : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

நெல்லை ஜில்லா ஆலங்குளம் பிளாக்கைச் சேர்ந்த கண்ணாடிக்குளத்தில் ஒரு ஆரம்பப் பாடசாலையைத் திறக்க சர்க்கார் உத்தேசிக்கிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

*Fruit Preservation Units*

*** 831-A Q.**—SRI T. S. RAMASWAMY PILLAI (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR) : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether there are any fruit preservation units in the State:

(*b*) whether they are receiving any State aid; and

(*c*) if so, the nature of such aids?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) No, Sir.

(*c*) Does not arise.

16th March 1959]

*Engineering College for Tanjore*

* 831-B *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லாவில் இன்ஜினீரிங் காலேஜ் ஏற்படுத்த பொது ஜனங்களிடமிருந்து ஏதேனும் உதவி கிடைத்திருக்கிறதா ?

(ஆ) அப்படியானுல், அதன் விவரம் என்ன ?

(இ) அரசாங்கம் இதன் பேரில் எடுத்துக்கொண்டிருக்கும் நடவடிக்கை என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No aid from the public has been received towards the opening of an Engineering College in Tanjore district.

(*b*) & (*c*) Do not arise.

SRI M. D. THIAGARAJA PILLAI : தனிப்பட்டவர்கள் என்ஜினீயரிங் காலேஜ் ஏற்படுத்த நன்கொடையாக வருஷாந்திரச் செல்வுக்காக நிலமோ அல்லது தொகையோ கொடுக்க முன்வருவார்களானுல், அதை ஏற்றுக் கொள்ளும் உத்தேசம் உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : It is a hypothetical question. When the offer comes, it will be considered on its merits.

SRI K. VINAYAKAM : In the absence of any offer from the public, at least in view of the shortage of engineers felt in our State, will the Government take it as their own concern to start an engineering college at Tanjore?

THE HON. SRI C. SUBRAMANIAM : I have already indicated the figures with reference to the increased number of admissions in the various colleges in the State and said that there is no proposal to open any new college during this year. About next year, the question will have to be considered when the occasion arises.

SRI A. VEDARATHNAM : சென்னை ராஜ்யத்தில் என்ஜினீயரிங் காலேஜ்களை அதிகப்படுத்துவதில் மத்திய சர்க்காரில் தடை ஏதேனும் இருக்கிறதா இந்த அனுமதி பெருவதில் ? இப்போது இருக்கிற என்ஜினீயர்கள் பற்றுக்குறையை அனுசரித்து இங்கே இன்னும் ஓரிரு காலேஜுகளை ஆரம்பிக்க அரசாங்கம் முயற்சி செய்யுமா ? மத்திய அரசாங்கத்தை வற்புறுத்தி அனுமதி பெருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அது அவசியமானுல், 1960–ம் ஆண்டில் அதிகமாக ஆரம்பிக்க வேண்டுமானுல், அதைப் பறறி முயறசிகள் ஏடுக்கப்படும்.

*Dairy Farms for Pallapatti and Kodaikanal*

MR. SPEAKER : The hon. Member Sri V. Sankaran is not in his place. The question and answer will be printed in the official proceedings.

* 831-C. *Q.*—SRI V. SANKARAN : Will the Hon. the Minister for Home be pleased to state how far the proposals to start Dairy Farms at Pallapatti village in Melur taluk and at Kodaikanal have been implemented?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There was a proposal to start a Dairy Farm at Pallapatti village but it had to be

dropped due to the promoters' inability to subscribe the minimum share capital required. The Dairy Farm opened at Kodaikanal in 1943 was also closed down in 1945 as it was working at a loss.

MR. SPEAKER : Question No. 831-D and the questions that follow are to be answered by the Hon. Minister for Industries who is not here. I am afraid, we may have to take them up later. The question-hour to-day is over within 25 minutes. But it is not my fault because ten questions belonging to the Hon. Minister for Works had to be postponed, after inclusion in the list of questions, since he had to leave Madras urgently on business. To substitute, we had to put in questions to be answered by the Hon. Minister for Industries, but he has not yet come—I see he is coming.

THE HON. SRI R. VENKATARAMAN : I am sorry, Sir.

*Madura Mills*

* 831-D. *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state the steps taken by the Government to settle the dispute between the workers and the management of Madura Mills in October 1958, regarding wages, workload, etc.?

THE HON. SRI R. VENKATARAMAN : The Government discussed the matter with the parties. It was agreed that a Government Officer should be appointed to enquire into the dispute and that he should submit his recommendations to the Government. The Government accordingly deputed Sri P. Sabanayagam, I.A.S., as the Special Enquiry Officer. The Officer has finished his enquiry and submitted his report. The report is under the consideration of the Government.

SRI N. K. PALANISAMI : சமர்ப்பிக்கப்பட்டிருக்கக் கூடிய ரிப்போர்ட்டில் விவரங்கள் என்ன என்று கனம் மந்திரி அவர்கள் சொல்வார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : The report is confidential.

SRI S. PAKKIRISAMI PILLAI : ஸார், ரிப்போர்ட்டைப் பரிசீலனை செய்த பிறகு, அரசாங்கம் அந்த ரிப்போர்ட்டின் நகலை அசெம்பளி முன்னால் வைப்பார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : It is not possible to place it on the table of the House.

SRI N. K. PALANISAMI : ஸார், ஏற்கெனவே வாங்கி வந்த சம்பளம், பஞ்சப்படி முதலியவைகளைக் குறைக்காமல் இருக்க சர்க்கார் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அந்த தொழிலாளர் சங்கமும், முதலாளிகளும் நேரடியாகப் பேசி என்ன முடிவுக்கு வருகிறார்களோ அந்த முடிவைத்தான் அரசாங்கம் ஏற்றுக் கொள்ளும்.

16th March 1959]

SRI T. VELUCHAMI : மதுரை மில் நிர்வாகஸ்தர்கள் வருமானத்தைக் குறைத்துக் காண்பிக்க பல முறைகளைக் கையாளுகிருர்கள் என்று சொல்லிக் கொள்கிருர்களே, அது வாஸ்தவமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : "என்க்வொயரி" ரிப்போர்ட்டில் பல விஷயங்கள் இருக்கின்றன. கனம் அங்கத்தினர்கள் ஏதாவது ஆதாரம் இருந்து கேள்வி போட்டால் நன்ருக இருக்கும். ஒரு தொழிலைப்பற்றி, தவருன குறிப்புகளைக் கேள்விகள் மூலமாகக் கேட்டால், அதனுல் தொழில் பாதிக்கப்படும். பதில் சொல்ல இயலாத காரணத்தினுல் பதில் சொல்ல முடியவில்லை.

SRI S. M. ANNAMALAI : 1958–ம் ஆண்டு ஜூலையில் ஆரம்பித்து இந்தத் தகராறுக்கு அப்போதே ஸ்பெஷல் ஆபீஸர் போட்டிருக்கிறீர்கள். இருந்தும் இவ்வளவு கால தாமதம் ஏன் ?

THE HON. SRI R. VENKATARAMAN : பிரச்னை கடுமையானது.

SRI A. A. RASHEED : May I know why the report is confidential since the Government have appointed their own officer to investigate the affairs of the Mill?

MR. SPEAKER : How can he answer it? When the Government say it is confidential, it is confidential. The hon. Member cannot ask why it is confidential.

SRI S. LAZAR : அது சம்பந்தமாக பேச்சுவார்த்தை நடத்தி முடிவு பண்ண வேண்டியது தொழிலாளர்களும், மானேஜ்மெண்டும் சேர்ந்து என்று குறிப்பிட்டார்கள். சம்பளம் குறைந்திருந்தால் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளும்? அரசாங்கம் என்ன சலுகை கொடுக்கும் ?

THE HON. SRI R. VENKATARAMAN : அரசாங்கம் எதுவும் செய்வதற்கில்லை. தொழிலாளர்களும், முதலாளிகளும் இருக்கக் கூடிய சங்கடத்தை நன்ருக உணர்ந்து இருக்கிருர்கள். அவர்களே பார்த்து முடிவு செய்து கொள்வார்கள்.

SRI K. VINAYAKAM : Since a subject like dispute between the workers and the management of a mill is a matter of public importance, how can this Government say that the report is confidential?

MR. SPEAKER : No, no. It is confidential and there the matter ends.

SRI K. VINAYAKAM : I am putting it in a different way.

MR. SPEAKER : The result is the same. (Laughter.)

SRI K. VINAYAKAM : What are the incriminating circumstances stated in the report which goad this Government to treat it as a confidential report?

MR. SPEAKER : The question is out of order.

[16th March 1959

*Starting of paper mills at Ootacamund*

9 a.m. * 831-E *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state whether any private party has approached the Government for aid to start paper mills at Ootacamund?

THE HON. SRI R. VENKATARAMAN : No, Sir.

SRI A. A. RASHEED : Has any foreign Government come forward to start a factory at Ootacamund?

THE HON. SRI R. VENKATARAMAN : I cannot understand how a foreign Government can open a mill in my country. (Laughter.)

SRI N. K. PALANISAMI : பேப்பர் மில்ஸ் ஆரம்பிப்பதற்கு செய்யப்பட்ட பரிசீலனை என்ன ஆயிற்று ? ஏன் அதை ஏற்பாடு செய்யாமல் விட்டுவிட்டார்கள் என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : யார் பரிசீலனை செய்தார்கள் ? எந்த இடத்தில் பரிசீலனை செய்தார்கள் ? எப்போது பரிசீலனை செய்தார்கள் என்கிற கேள்வி போட்டால் எல்லா விவரங்களையும் கொடுக்கிறேன்.

SRI K. RAMACHANDRAN : பேப்பர் செய்வது சிறு தொழிலாக நம் பகுதியில் கிடைக்கக்கூடிய ரா மெட்டீரியல்லை வைத்துக்கொண்டு அதாவது பனை ஓலை, மட்டை இவைகளை வைத்துக்கொண்டு செய்யலாம் என்று சொல்லப்படுகிறதே, அதைப்பற்றி பரிசீலனை செய்யப்பட்டதா ? அத்துடன் ஐந்தாறு கோடி ரூபாய் செலவில் நம் ராஜ்யத்தில் ஒரு பேப்பர் மில்லை அமைக்க ஏற்பாடுசெய்வதாக இருந்ததே, அது எவ்வாறு இருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : சிறு தொழில் மூலமாக பேப்பர் உற்பத்தி செய்யும் பிரச்சனை இப்போது ஆராயப்பட்டு வருகிறது. சமீபத்தில் ஜப்பானிலிருந்து கூட மூன்று டன் பேப்பர் உற்பத்தி செய்யக்கூடிய தொழிற்சாலையை ஆரம்பிப்பதற்கு ப்ளூ ப்ரின்ட் அனுப்பியிருக்கிறார்கள். இதைப்பற்றி இரண்டுவித அபிப்பிராயங்கள் தொழில்-பொருளாதார-நிபுணர்களிடத்திலிருந்து வருகின்றன. பேப்பர் தொழிற்சாலை ஆரம்பிப்பது என்றால் 50 டன் உற்பத்தி செய்யக்கூடிய, குறைந்தது 30 டன்னாவது உற்பத்தி செய்யக்கூடிய தொழிற்சாலையை ஆரம்பிப்பதாக இருந்தால் தான் விலைவாசி கட்டுப்படியாக இருக்கும் என்பது ஒரு அபிப்பிராயம். இரண்டாவது, சிறு தொழில்களாக வைக்க முடியும் என்கிற அபிப்பிராயம். சர்க்கார் இதைப் பரிசீலனை செய்து வருகிறது. மேட்டூரில் 5 கோடி ரூபாயில் ஆரம்பிக்கலாம் என்ற யோசனை இப்போது இருந்து வருகிறது. பண நெருக்கடிதான் இப்போது முக்கியமான முட்டுக்கட்டை.

SRI A. VEDARATHNAM : பேப்பர் மில் ஆரம்பிக்கவேண்டும் என்று எந்த இடத்தில், எப்போது, யாரால் பரிசீலனை செய்யப்பட்டது என்கிற கேள்வியைப் போட்டால் அந்த விவரங்களைச் சொல்வதாக அமைச்சர் அவர்கள் சொன்னதன்பேரில், அந்தக் கேள்வியைப் போடுவதோடு வேறு எந்த வெளிநாட்டிலிருந்து உதவி கோரப்பட்டது ? அதற்கு ஏதேனும் உதவி கொடுப்பதாக திருப்திகரமான பதில் வந்ததா என்றும் விளக்கமாகக் கூறுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI R VENKATARAMAN : இட்டாலி தேசத்தில் 5 டன் பேப்பர் உற்பத்தி செய்யக்கூடிய தொழிற்சாலையை வைத்திருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு வேண்டிய "பல்ப்" ஒரு பெரிய மில்லில் இருந்து கொடுக்கப்படுகிறது. அதனால் அவர்களுக்கு 5 டன் உற்பத்தி செய்வது சுலபமாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

16th March 1959]

அமெரிக்காவில் ஸ்டான்போர்ட் இன்ஸ்டிட்யூட்டில் இருக்கிறவர்கள் 30 டன்னுவது உற்பத்தி செய்யக்கூடிய தொழிற்சாலையாக இருந்தால்தான் விலைவாசி கட்டுபடியாக இருக்கும் என்று அபிப்பிராயம் கூறுகிறார்கள். ஜப்பானில் சிறு தொழில் மூலமாகவே பல்பும், பேப்பரும் உற்பத்தி செய்யக்கூடிய வசதி பல இடங்களில் இருக்கிறது. நமது சர்க்காரின் யோசனையில் இப்போது, ஜப்பானில் உள்ளது போல இங்கே பரீட்சார்த்த மாக ஒரு ஆலை வைக்கலாம் என்பதுதான். வெளிநாடுகளில் இருந்து பேப்பர் ப்ளான்ட் வைப்பதற்கு மெஷின், கடன் உதவி முதலியன கொடுத்து உதவுவதற்கு ஒரு கம்பெனி தயாராய் இருப்பதாக பேச்சுவார்த்தை கள் நடந்து கொண்டிருக்கின்றன. ஆனால் இன்னும் ஒன்றும் முடிவு அடையவில்லையாதலால் இதைப்பற்றி நிரந்தரமாகச் சொல்வதற்கில்லை.

SRI M. C. MUTHUKUMARASWAMY : இதுவரையில் நம் ராஜ்யத்தில் இயங்கி வரும் பேப்பர் ஆலைகள் எவ்வளவு ? அவற்றில் உற் பத்தியாகும் டன் எவ்வளவு ? அதை அதிகப்படுத்துகிற உத்தேசம் சர்க் காருக்கு உண்டா என்று அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI R. VENKATARAMAN : நம் ராஜ்யத்தில் பேப்பர் மில் கிடையாது. ஹாண்டு மேட் பேப்பர் உற்பத்தி செய்கிற தொழில் சில இடத்தில் இருக்கிறது.

*Co-operative Agricultural Banks*

* 831 F Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is any proposal to reorganise rural banks into co-operative agricultural banks in the State; and

(*b*) whether the rural banks already formed in the State, help the ryots in procuring good seeds, insecticides and agricultural implements?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Narayanaswamy Pillai Committee did recommend that rural banks should function as large-sized societies (agricultural banks) instead of as separate agencies for the issue of medium term loans. In the meanwhile the whole Co-operative Policy has come under review as a result of the resolution of the National Development Council on Co-operation and the matter is under re-examination by the Government.

(*b*) Yes, Sir. In addition to supply of credit, the rural banks undertake the distribution of seeds, fertilisers, insecticides and agricultural implements to their members.

SRI N. K. PALANISAMI : அந்தச் சிபார்சுகள் பரிசீலனையில் இருப்பதாக கனம் மந்திரி சொன்னார்கள். அந்தப் பரிசீலனை எப்போது முடியும் ? ஏற்கனவே நாஷனல் கவுன்சில் முடிவு செய்த பிரகாரம் இதை மாற்றி அமைக்கும் திட்டம் எப்போது வரும் ?

THE HON. SRI R. VENKATARAMAN : மறுபடியும் நாஷனல் டெவெலப்மெண்டு கவுன்சில் கூட்டம் நடைபெறும். அப்போது இது கவனிக்கப்படும். இன்னும் முடிவாகவில்லை.

SRI M. KANDASAMI PADAYACHI : இப்போது விவசாய பாங்குகள் நல்ல முறையில் நடந்து வருவது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? ஏன் இன்னும் அதிகப்படியான பாங்குகளைத் திறக்க முன்வரக்கூடாது ?

THE HON. SRI R. VENKATARAMAN : சென்னை ராஜ்யத்தைப் பொறுத்தவரையில் அக்ரிகல்சரல் பாங்க் மிக வெற்றிகரமாக நடந்து பயன் அளித்து வருகிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நமக்காக

ஒதுக்கப்பட்ட 300 பாங்குகளையும் நாம் ஏற்படுத்திவிட்டோம். இனிமேல் வைப்பது என்றால் வேறு ஏதாவது பாங்குகளை எல்லாம் எப்படி இணைத்துச் சேர்ப்பது என்றுதான் முயற்சிக்கவேண்டும்.

SRI R. SRINIVASA IYER : May I know how many agricultural banks are functioning in the State and the amount of private deposit with these banks?

THE HON. SRI R. VENKATARAMAN : Agricultural banks now functioning in the State will be about 280 or 285. The rest of them will be inaugurated in the course of the next two or three weeks. By the end of the financial year 1958–59 we will have 300 banks. On an average there is a deposit of over Rs. 10,000 in small banks. But there are some agricultural banks which have deposits of even a lakh of rupees.

SRI M. JAGANATHAN : May I know whether the agricultural banks have been opened in towns and cities or in villages?

THE HON. SRI R. VENKATARAMAN : I am sorry that my esteemed Friend has not cared to go and see one of these banks in which we take so much pride. They are all in villages. They are situated in the midst of three or four villages and the whole area of operation is only about five miles.

SRI M. D. THIAGARAJA PILLAI : தலைவர் அவர்களே, இந்த பாங்குகள் எல்லாம் கிராமாந்திரங்களில் நல்ல விதமாக நடக்கிறது. ஆனால் இதில் உள்ள கஷ்டம் சூப்ரவைசர்களுக்கு ஒரேவித சம்பளம் கொடுக்கிறார்கள். டி.ஏ. வைக் குறைத்துவிடுவதால் கஷ்டம் அதிகமாக இருக்கிறது. செக்ரடரிகளுக்கு கொஞ்சம் அதிகச் சம்பளத்தைக் கொடுத்து இந்த பாங்குகள் நல்லவிதமாக உதவி செய்வார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்தவிதமான குறைபாடு இருப்பதாக என் கவனத்திற்கு இதுவரையில் வரவில்லை. இப்போது பாங்குகளில் இருப்பவர்கள் இதைப்பற்றி கடிதம் எழுதினால் அதை அரசாங்கம் பரிசீலனை செய்யும்.

SRI S. M. ANNAMALAI : கிராமாந்திரங்களில் இருக்கக்கூடிய பல நோக்கு சங்கங்களை எல்லாம் கிராமாபிவிருத்தி பாங்குகளாக ஏற்படுத்திக்கொடுக்க உத்தேசம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : நமக்குக் கொடுத்த 300 பாங்குகளையும் ஏற்படுத்திவிட்டோம். மற்றபடி வேறு எவ்வாறு இதர பாங்குகளையும் இணைப்பது என்று பார்த்தால்தான் இதை அதிகப்படுத்த முடியும்.

SRI S. LAZAR : May I know whether the starting of the agricultural banks is a matter which is purely left to the local co-operative institutions like the Co-operative Central Bank or whether the Government have any hand in it?

THE HON. SRI R. VENKATARAMAN : On the recommendation of the District Central Bank the Government generally distribute the banks to deserving places.

16th March 1959]

*Coir industry*

* 831-G *Q.*—SRI T. S. RAMASWAMY PILLAI (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR) : Will the Hon. the Minister for Industries be pleased to state the number of persons engaged in Coir Industry?

THE HON. SRI R. VENKATARAMAN : About 11,000 persons.

SRI R. SRINIVASA IYER : Is there any scheme of this Government to develop the coir industry which is in a very backward way at present?

THE HON. SRI R. VENKATARAMAN : We propose to have four or five co-operative coir factories in Kanyakumari district. The training centre in Tanjore district at Pushpavanam will be converted into an industrial co-operative. Similarly, the training centre in Coimbatore district will also be converted into an industrial co-operative society.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இந்தக் கயிறு தொழில் எந்தெந்த ஜில்லாக்களில் கூட்டுறவு முறையில் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.

THE HON. SRI R. VENKATARAMAN : நம் ராஜ்யத்தில் கயிறுத் தொழில் கிடையாது. இதுவரை அதிகமாக நடந்துவந்த பகுதிகளெல்லாம் கேரளாவிற்குச் சென்றுவிட்டது. ஆகவே கன்யாகுமரி ஜில்லாவில் கூட்டுறவு முறையில் இத்தொழிலை ஆரம்பிக்கப்போகிறோம்.

SRI A. VEDARATHNAM : கேரளம் பிரிந்தபிறகு அங்கிருந்த பெரிய பாக்டரி கேரளத்திற்கு சென்று விட்டது. அதேமாதிரி பெரிய பாக்டரியை நம் ராஜ்யத்தில் அமைப்பதற்கு உத்தேசம் உண்டா ?

இங்குள்ள கூட்டுறவு சங்கம் மத்திய கயிறு போர்டு சம்பந்தப்பட்டவரை இங்கு உற்பத்தி செய்கின்ற பொருளை அவர்கள் மூலம் உற்பத்தி செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதா ? இல்லை என்றால் சர்க்கார் இதைப் பரிசீலனை செய்யுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது நம் ராஜ்யத்தில் கூட்டுறவு முறையில் கயிறு உற்பத்தி ஆரம்பிக்க இருக்கிறது. பின்னால் அந்தப் பிரச்னை எழுகின்றபோது அது கவனிக்கப்படும்.

SRI M. P. PERIASAMI : இந்தக் கயிறு விவசாயத்திற்கு முக்கியமான பொருள் என்பதை குறித்து அரசாங்கம் ஒவ்வொரு ஜில்லாவிலும் கயிறு உற்பத்தி செய்யும் தொழிலை ஏற்பாடு செய்வார்களா ?

THE HON SRI R. VENKATARAMAN : ஒவ்வொரு ஜில்லாவிலும் ஆரம்பிப்பதற்கு அங்கு உப்புத் தண்ணீர் மட்டும் அல்லாமல் நல்ல தண்ணீரும் வேண்டும். மேற்கூறிய வசதியை செய்தவற்கு எல்லா உதவியையும் செய்யும்.

SRI R. SRINIVASA IYER : Sir, want of trained hands is felt very much in this State for the development of industries. There has been a proposal that the Government should start production-*cum*-training centres. Will the Government consider the feasibility of opening such centres, wherever it is possible to do so?

THE HON. SRI R. VENKATARAMAN : We propose to have a Coir School at Ethamozhi in the Kanyakumari district. Then, the Government have started these training-*cum*-production centres

at Pushpavanam in the Tanjore district and at Chinnapalayam in the Coimbatore district. I think, these are the places where the training as well as production are going on.

*Ryots affected by the Neyveli Project*

* 831 Q.—SRI M. P. SUBRAMANIAM (on behalf of SRI A. GOVINDASAMY): கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) நெய்வேலி திட்டத்திஞல் பாதிக்கப்பட்ட புதுக்கரைப்பேட்டை விவசாயிகளுக்கு குடியிருப்புக்கு ஒரு குடும்பத்திற்கு எத்தனை செண்ட் நிலம் ஒதுக்கப்பட்டிருக்கிறது ?

(ஆ) விவசாயித்திற்கு ஒவ்வொரு குடும்பத்திற்கும் நிலம் ஒதுக்கப்பட்டிருக்கிறதா ?

(இ) அதற்காக நீர்ப்பாசன வசதிகள் செய்யப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) The people displaced from Kooraipettai village, have been rehabilitated by the Neyveli Lignite Corporation in "New Kooraipettai" village and allotted—as will be done in the other rehabilitation colonies also—house sites, free of cost, at the rate of 10 cents to each of those whose pukka houses have been acquired and 5 cents to each of those whose cutcha houses have been acquired.

(*b*) Yes, Sir. Land equal in extent to the lands acquired from a ryot subject to a maximum of 2 acres have been allotted for agricultural purposes.

(*c*) No, Sir. The lands allotted for agricultural purpose are rain-fed dry forest lands and irrigation facilities cannot be extended to these lands.

SRI M. P. SUBRAMANIAM: இந்த நெய்வேலி திட்டத்தில் பாதிக்கப்பட்ட மக்களுக்கு வீடுகட்டுவதற்கு அவர்களுக்கு கொடுக்கப்படும் நிலத்தை சீர்த்திருத்தம் செய்வதற்கு அரசாங்கம் ஏதாவது திட்டம் வகுத்திருக்கிறுர்களா என்று அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI R. VENKATARAMAN: அவர்களுக்கு சட்டபடி காம்பன்சேஷன் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதைத்தவிர கார்பொரேஷனில் ஏக்கருக்கு 50 ரூபாய் உதவி கிடைக்கிறது.

SRI T. S. RAMASWAMY PILLAI: சமீபத்தில் உயர்நீதி மன்றம் அவர்கள் கொடுக்கக் கூடிய நஷ்டயீடு சட்டப்படி செல்லாது என்று சொல்லிவிட்டார்கள். அப்படியாஞல் அரசாங்கம் இப்பொழுது என்ன கொடுக்கப்போகிறது. இதைப் பற்றி அரசாங்கம் ஆலோசித்ததா ?

THE HON. SRI R. VENKATARAMAN: இதைப்பற்றி ஹைக்கோர்ட்டு 1947 வருஷத்து மதிப்பு செய்த பிரகாரம்தான் நஷ்ட ஈடு கொடுக்கவேண்டும் என்று தீர்ப்பில் சொல்லியிருக்கிறுர்கள். அது சர்க்காரின் பரிசீலனையில் இருக்கிறது இன்னும் ஜட்ஜுமெண்ட் காபி வரவில்லை. வந்த பிறகு என்ன உதவி செய்ய வேண்டும் என்பதை ஆராயவேண்டும். கனம் அங்கத்தினர் சுப்பிரமணியம் கேள்வி சம்பந்தப்பட்டவரையில் :

The Corporation is willing to pay Rs. 50 per acre of property acquired over and above the cost of compensation payable to the property.

16th March 1959]

SRI S. M. ANNAMALAI : ஒவ்வொரு விவசாயிக்கும் இரண்டு எக்கர் நிலமும் 50 ரூபாயும் கொடுக்கப்படுகிறது. இந்த 50 ரூபாயை அதிகரிக்க பரிசீலனை செய்வார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இது அவர்களுக்கு கொடுக்கப்படும் காம்பன்சேஷனுக்கு மேலே கொடுக்கப்படுகிறது.

SRI M. JAGANNATHAN : Arising out of the reply given by the Hon. Minister that the lands given to these affected ryots are rainfed lands, may I know whether the Government will consider the desirability of giving some subsidy to those affected ryots so that they may sink wells for irrigation purposes?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, the normal facilities which are open to an agriculturist will be open to those persons also. But hon. Members would realise that all these other amenities are given over and above the compensation which has been given to them for acquisition of lands. The law presumes and we also always presume that once compensation is paid, the concerned persons should be reasonably satisfied with the money they got for the lands which they have parted with?

*Factories employing more than 20 workers*

* 831-I *Q.*—SRI S. LAZAR (on behalf of SRI P. G. MANICKAM) : கனம் கைத் தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) பிரதி தினமும் 20 தொழிலாளர்களுக்கு மேற்பட்டு வேலைக்கு வைத்துக்கொண்டிருக்கும் தொழிற்சாலைகளையும் தொழிற்சட்டத்திற்குள் கொண்டு வரப்பட வேண்டுமென்றும், தொழிலாளர்கள் என்ற பதம் இவ்வேலையாட்களுக்கும் பொருந்தச் செய்ய வேண்டும் என்றும், சென்னை ஹைக்கோர்ட்டு நீதிபதிகள் அபிப்பிராயம் தெரிவித்துள்ளவை கவர்ன்மென்டாரின் கவனத்துக்குக் கொண்டுவரப்பட்டனவா ?

(ஆ) அப்படியானுல் அதன்மீது எடுக்கப்பட்டிருக்கும் நடவடிக்கைகள் யாவை ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) The question of taking suitable legislative action in the light of the judgment referred to is under consideration.

SRI S. M. ANNAMALAI : இந்தத் தீர்ப்புகளால் சுருட்டுத் தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டது அரசாங்கத்துக்குத் தெரியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பீடித் தொழிலாளர்களுக்குப் புதிதாக சட்டம் இப்பொழுது நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

SRI V. K. KOTHANDARAMAN : இருபது கைத்தறியாளர்களுக்கு மேல் வேலை செய்யும் நெசவுத் தொழிலுக்கு இந்தச் சட்டப்படி சலுகைகள் கொடுக்கப்படவில்லை. அவர்களுக்கு இந்தச் சட்டத்தின்கீழ் கொடுக்க வேண்டிய சலுகைகள் கொடுக்கப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பாக்டரி சட்டத்தைத் திருத்தி அமைக்க வேண்டும் என்று நமது சர்க்கார் மத்திய சர்க்காருக்கு சிபார்சு செய்திருக்கிறது. பாக்டரி ஆக்டின் டெபெனிஷனை மாற்றிக்கொண்டால் எந்த விதமான தொழியும் பாக்டரி சட்டத்தின் கீழ்கொண்டுவர முடியும்.

### *Agricultural Co-operative Supply and Marketing Society*

83–J *Q.*—SRI P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

சென்னை ராஜ்ய விவசாயக் கூட்டுறவு மார்க்கடிங் சொசைட்டி ஒன்றை நிறுவுவது பற்றி எடுக்கப்பட்டுள்ள நடவடிக்கைகள் யாவை ?

THE HON. SRI R. VENKATARAMAN : The Madras State Co-operative Supply and Marketing Society was registered on 2nd January 1959 and the Society was inaugurated on 20th February 1959. The Directors have also been nominated.

SRI V. SUBBIAH : விவசாயிகள் உற்பத்தி செய்கின்ற பொருள்களை மார்க்கடிங் சொசைட்டி ஏற்றுமதி செய்வதற்கு, பிரியாரிட்டி கொடுப்பதற்கு அவர்களுக்கு அதிகாரம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அதுதான் இந்த மார்க்கடிங் சொசைட்டியின் முக்கிய நோக்கம். இந்த ராஜ்யத்திலிருந்து வெளி நாடுகளுக்கு வத்தல், வங்காயம் போன்ற பொருள்கள் ஏற்றுமதி செய்யப் படுகின்றன.

SRI K. R. NALLASIVAM : நிர்வாகஸ்தர் போர்டில் உள்ள அங்கத்தினர்கள் பெயரை கனம் மந்திரி அவர்கள் சொல்ல முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஜில்லா மார்க்கடிங் சொசைட்டி பிரசிடெண்டு இதில் இடம் பெறுகிறார். இதில் 21 அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். வேண்டுமானால் அவர்களின் பெயர்களை படிக்கிறேன்.

### *Storing of petrol by the State Transport Department*

* 831-K *Q.*—SRI T. S. RAMASWAMY PILLAI (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether petrol is being kept in barrels inside the Transport Office in general and in particular in the Nagercoil Office;

(*b*) if so, the reason therefor; and

(*c*) whether any stock register is maintained for the petrol as kept?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

(*c*) Does not arise. Stock registers are maintained in respect of petrol stored in underground tanks.

SRI T. S. RAMASWAMY PILLAI : Sir, may I know whether the Government are aware of the fact that the Estimates Committee went to the Nagercoil Garage and found that nearly 200 gallons of petrol were stored in tins, and, if so, whether this fact was brought to the notice of the concerned Minister?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I want notice of this particular question. But I can give a few details which would go to show the amount of petrol which is kept in each depot and how it is stored. For instance, in the Transport House Depot, we

16th March 1959]

have 8,634 gallons stored in underground tanks and not in loose tins. Similarly in Patulla Road, 35,880 gallons are stored in underground tanks and not in loose tins. In the Kanyakumari branch, 44,500 gallons of petrol are stored in underground tanks.

*Travel concessions to N.G.Os. in the State Transport*

*831-L Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI) : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை நகரில் ஓடும் அரசாங்க பஸ்களில் பிரயாணம் செய்ய (concessional season tickets) சலுகைக் கட்டண அனுமதிச் சீட்டுகள் வழங்கப்படுகின்றனவா ?

(ஆ) என்.ஜி.ஓ. ஊழியருக்கு பிரத்தியேக தனிச் சலுகைக் கட்டண முறை புகுத்த யோசனை உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Season tickets are being issued in some of the routes in Madras City.

(*b*) Non-Gazetted employees of the Madras State Transport Department are provided with free duty passes to travel from their residence to their place of duty and back. There is no proposal to extend any concession to other non-gazetted Government servants for their journeys in State Transport buses.

SRI S. M. ANNAMALAI : சில ரூட்டுகளில்தான் இப்படிப்பட்ட கன்ஸெஷன்கள் தரப்படுகின்றன என்று மதிப்பிற்குரிய அமைச்சர் சொன்னார். அவை எந்தெந்த ரூட்டுகளில் தரப்படுகின்றன ? அவைகளை ஏன் மற்ற ரூட்டுகளுக்கு விஸ்தரிக்கவில்லை ?

THE HON. SRI R. VENKATARAMAN : வருஷா வருஷம் சில ரூட்டுகள் வீதம் விஸ்தரித்துக்கொண்டே போகிறோம். இதுவரையில், பின் வரும் ரூட்டுகளுக்கு விஸ்தரிக்கப்பட்டிருக்கின்றன.

ரூட் 1—திருவல்லிக்கேணி—பாரிஸ்.

ரூட் 6—எம்.யு.வி.-தண்டையார்ப்பேட்டை.

ரூட் 34—கெல்லிஸ்-பாரிஸ்.

ரூட் 11—தியாகராயநகர்-பாரிஸ்.

இதற்குமேல் இப்போது பின்வரும் ரூட்டுகளிலும் கன்ஸெஷன் கொடுக்கப் படுகிறது.

ரூட் 15—பாரிஸ்-அமிஞ்சிக்கரை.

ரூட் 22—திருவல்லிக்கேணி-கெல்லிஸ்.

ரூட் 30—ஐஸ்ஹவுஸ்-மிண்ட்.

ரூட் 31—பாரிஸ்-ஹாமில்டன் பிரிட்ஜ்.

SRI T. S. RAMASWAMY PILLAI : இந்தச் சலுகை மாணவர்களுக்கும் அளிக்கப்படுகிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் எந்த ஊரிலிருந்து வருகிறாரோ அந்த ஊரில் மாணவர்களுக்கு இந்தச் சலுகையை அளித்துக்கொண்டிருக்கிறோம். இந்தச் சலுகையை சென்னையில் மாணவர்களுக்குக் கொடுக்கவில்லை. அந்த ஊரில் இந்தச் சலுகை மாணவர் களுக்குக் கொடுக்கப்படுவது வழக்கமாகிருந்ததால் அங்கே அதை மாற்றவில்லை.

[16th March 1959

*Industrial potentialities of Tiruchirappalli District.*

* 831-M Q.—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Industries be pleased to state whether there is any proposal before the Government to find out the industrial potentialities in Tiruchi rappalli district?

THE HON. SRI R. VENKATARAMAN : At the request of this Government, the National Council of Applied Economic Research is conducting a Techno-Economic Survey of this State, with a view to assessing the industrial potential of the State. The potentialities of the various districts including Tiruchirappalli also will be considered. The question of utilising the gypsum available in Tiruchirappalli district for the manufacture of sulphuric acid with cement as bye-product has also been referred to the National Council for investigation.

MR. SPEAKER : Questions are over.

[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## II.—VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1959-60—*cont.*

### DEMAND XVI—EDUCATION.

MR. SPEAKER : இப்போது 16-வது மானிய கோரிக்கை, கல்வி, விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்படும். கனம் மந்திரி அந்த மானிய கோரிக்கையை இப்போது சபை முன் பிரேரிப்பார்.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, on the recommendation of the Governor, I move—

That the Government be granted a sum not exceeding Rs. 13,61,63,000 under Demand XVI—Education.

MR. SPEAKER : எதிர்க் கட்சிகள் எல்லோரும் சேர்ந்து கனம் அங்கத்தினர் ஸ்ரீ அன்பழகன் கொடுத்துள்ள வெட்டுப் பிரேரணையை ஆதரிப்பதாகக் கூறுகிறார்கள். அவர் அந்தப் பிரேரணையை இப்போது பிரரேரிக்கலாம்.

SRI K. ANBAZHAGAN : Sir, I move—

That the allotment of Rs. 13,61,63,000 under Demand XVI—Education—be reduced by Rs. 100.

MR. SPEAKER : The Demand and the cut motion are before the House for discussion.

இப்போது கனம் அங்கத்தினர் ஸ்ரீ கே. அன்பழகன் பேசலாம். அவருக்கு 15 நிமிஷங்கள் ஒதுக்கி வைக்கிறேன். கனம் மந்திரி அவர்களுக்கு முக்கால் மணி நேரம் போதுமல்லவா ? மேலும் பேச விரும்பும் மற்ற எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் ஒவ்வொருவருக்கும் 15 நிமிஷம் அளிக்கப்படும்.

SRI K. ANBAZHAGAN : மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, கல்வி மான்யத்திற்காக ஒதுக்கப்பட்டுள்ள தொகையை வெட்டுவதற்கான இந்தத் தீர்மானத்தைக் கொண்டுவருவதன் மூலம், இந்த மாநிலத்தில் நடத்தப்படும் கல்வித் திட்டங்களில் ஓரளவு செம்மையை உண்டுபண்ண முடியும் என்ற நம்பிக்கையோடு இந்த விவாதத்தில் ஈடுபடுகிறேன். பொதுவாகவே, கோரப்படும் மானியத் தொகையை வெட்டுவதற்காகத் தீர்மானத்தைத் தரும் நேரத்தில், மானியத் தொகையை உயர்த்த வேண்டு

16th March 1959] [Sri K. Anbazhagan]

மென்ற கருத்தோடுதான் அவ்வெட்டுத் தீர்மானத்தைக் கொண்டுவருவது வழக்கம். ஆனுல், இப்போது நான் கொண்டு வந்திருக்கும் வெட்டுத் தீர்மானம் ஓரளவு பெயருக்குப் பொறுத்தமானது. ஏனென்ருல், ஹிந்தியை மாணவர்களுக்குப் பயிற்றுவிப்பதற்காக பல ஹிந்தி ஆசிரியர்களை நியமிப்பதால் ஏற்படும் அதிகச் செலவைக் குறைக்க வழி ஏற்படுமானுல், என்னுடைய வெட்டுத் தீர்மானத்தின்படி இந்த மானியத் தொகையை 100 ரூபாய் குறைப்பதுகூட ஏற்றுக்கொள்ளக் கூடியது ஆகும்.

நமது மாநிலத்தில், கல்வியைப் பொறுத்த வரையில், நீண்ட காலமாகவே ஒரு நிரந்தரமான, முறையான, வளர்ச்சி ஏற்பட்டு வந்திருக்கிறது என்பதை மதிப்பிற்குரிய கல்வி அமைச்சர் மறுப்பதற்கில்லை. கல்வியில் ஐந்தாண்டுத் திட்டத்தின் மூலமாக பெரியதொரு வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறதென்ற கருத்தை ஆளும் கட்சியைச் சேர்ந்த, மதிப்பிற்குரிய அமைச்சர்கள் அடிக்கடி நினைவூட்டி வருகிருர்கள். கல்விச் செல்வம் ஐந்தாண்டுத் திட்டத்தாலேயே பெருகியிருக்கிறது என்ற கருத்தை மதிப்பிற்குரிய அமைச்சர்கள் தெரிவித்திருக்கிருர்கள். ஆனுல் நான் மதிப்பிற்குரிய அமைச்சர்களுக்கு ஒன்றை நினைவூட்டுவேன், நமது சென்னை மாநிலத்தைப் பொறுத்த வரையில் கல்வியில் ஒரு முறையான வளர்ச்சிதான் ஏற்பட்டிருக்கிறது. இது ஐந்தாண்டுத் திட்டத்தால் ஏற்பட்டது என்று நான் சொல்ல மாட்டேன் ; வேண்டுமானுல், ஆதாரக் கல்வியை பொறுத்த வரையில் அதுவும் அதில் எண்ணிக்கையில் பெரும் வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறதே தவிர பிற வகையான கல்வித் திட்டங்களில் பெரும் வளர்ச்சி ஏற்படவில்லை என்பதை மதிப்பிற்குரிய அமைச்சர்களுக்கு நினைவூட்டுவேன். கல்வியில் ஏற்பட்டுள்ள வளர்ச்சி ஐந்தாண்டுத் திட்டங்களால் ஏற்பட்டது அல்ல என்பதற்குக் காரணம் கூறுகிறேன். குழந்தைகளுக்குக் கல்வி அளிப்பது குறித்து, இந்திய அரசாங்கத்தின் அரசியல் நிர்ணயச் சட்டத்தின்படியேகூட இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திற்குள் நிறைவேற்றப்பட வேண்டிய காரியங்கள் என்று எந்தக் காரியங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றனவோ அவைகளை நாம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்குள் நிறைவேற்ற முடியவில்லை, அவைகளை மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திற்குள்ளாவது நிறைவேற்ற வேண்டும் என்று விரும்பும் நிலையில் இருக்கிருேம். எனவே கல்வியில் ஐந்தாண்டுத் திட்டம் நிறைவேற்ற வேண்டும் என்று குறிப்பிட்ட கடமைகளை அரசாங்கம் நிறைவேற்ற முடியவில்லை. இந்தக் காரணத்தாலேயே ஐந்தாண்டுத் திட்டத்தால்தான் கல்வித் திட்தில் இந்த வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது என்று மதிப்பிற்குரிய அமைச்சர்கள் சொல்வது அவ்வளவு பொறுத்தமாக இல்லை என்று தெரிவித்துக்கொள்கிறேன். இதே மன்றத்தில், கல்வித் திட்டத்தைக் குறித்து இதற்கு முன்பு பேசியபோதும், உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் மூன்று மொழிகளைப் படிக்க வேண்டிய கொடுமையை எடுத்துக் கூறியிருக்கிறேன். அவர்களை மூன்று மொழிகளைப் படிக்கச் சொல்லுவது கொடுமை என்பதற்கு, நான் முன்பு கூறிய காரணங்கள் வேறு ; இன்றைய தினம் பிறிதொரு காரணத்தை மதிப்பிற்குரிய அமைச்சருக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். கல்வித் திட்டமானது ஒரு மொழியில் பாடம் நடத்துவதிலிருந்து பிறிதொரு மொழியில் பாடம் நடத்துவதாக மாறும்போது, பாடங்களும் வேறு மொழியில் மாறும் நிலையில், மாணவர்கள் இரண்டு மொழிகளிலும் ஆக்க அறிவும் ஆற்றலும் பெற்று பொது அறிவிலும் நாட்டுக்குத் தேவையான நல்லறிவிலும் வளர்ச்சி பெற்றிருக்கிருர்கள். இன்றைய தினம் இந்த மாநிலத்தில் ஆங்கிலத்தில் படித்த மாணவர்கள் தமிழில் படிக்க வேண்டுமென்ற நிலைமைக்கு உயர்நிலைப் பள்ளிகளில் ஏற்கனவே ஆளாகியிருக்கிருர்கள். இனி, கல்லூரிகளிலும் மாணவர்கள் தமிழில் படிக்க வேண்டிய சூழ்நிலையை உண்டாக்க வேண்டியிருக்கிறது. கல்லூரிகளிலும் கற்பித்தல் தமிழில் வர வேண்டும் என்று நாம் எண்ணும்போது மாணவர்களுக்கு ஆங்கிலத்தில் இருக்கும் அறிவின் தரம் குறைந்துவிடவோ தேய்ந்துவிடவோ கூடாது என்று விரும்புகிருேம் ; இந்த மன்றத்திலுள்ள நாம் அனைவரும் இக்கருத்தைக் கொண்டிருக்கிருேம். ஆகவே, மாணவர்களில் தேர்ச்சி ஆங்கிலத்திலும் குறையக் கூடாது, அவர்கள் தமிழிலும் தேர்ச்சி பெற வேண்டும் என்று விரும்புகிருேம். மேலும் அவர்கள் பொது அறிவையும் விஞ்ஞானத்தையும் தமிழ் மூலம் கற்ருலும், ஆங்கிலத்தில்

[Sri K. Anbazhagan] [16th March 1959

இதுவரை அவர்கள் பெற்றுள்ள அறிவையும் தேர்ச்சியையும் குறையாமல் பார்த்துக்கொள்வதுடன் மட்டுமின்றி அதிகப்படுத்திக்கொள்ளவும்வேண்டு மென்று எண்ணுகிறோம். இந்த நிலையில் உள்ள அவர்கள் பொது அறிவிலோ மொழிகளிலோ நல்ல தேர்ச்சி பெறுவதற்கு இடையூறாக இருக்கிறது ஹிந்தி. தமிழ் நாட்டுக்கு நாட்டு மொழியாக அல்லாத ஹிந்தியை எல்லா மாணவர்களும் பயிலவேண்டுமென்ற கட்டாயச் சூழ்நிலையை மதிப்பிற்குரிய அமைச்சர் இம்மாநிலத்தில் உண்டாக்கியிருப்பது நியாயமா என்று அவர் எண்ணிப் பார்க்கவேண்டும். இது குறித்துப் பேசியபோது, கல்விக்கான குழு இவ்வாறு தீர்மானித்திருக்கிறார்கள் என்று மதிப்பிற்குரிய அமைச்சர் கூறினார். இதைக் கல்விக்கான குழு அன்றி கடவுளே செய்திருந்தாலும், தவறு தவறுதான் என்பதை மதிப்பிற்குரிய அமைச்சருக்கு நினைவூட்ட விரும்புகிறேன். தமிழிலும் நல்ல வளர்ச்சி பெற வேண்டும், ஆங்கிலத்திலும் போதிய தேர்ச்சி பெற வேண்டும், மொழிகளில் ஹிந்தியும் படிக்க வேண்டும்—அதிலும் மூன்றாவது மொழியாக ஹிந்தியும் படிக்க வேண்டும்—என்ற நிலையில் மாணவர்கள் இருக்கிறார்கள். தமிழைப் படிப்பது பிற மொழிகளைப் படிப்பதைவிடக் கடினம். காரணம், தமிழ் பிற மொழிகளைவிட உயர்ந்ததாகவும், வளர்ந்ததாகவும் இருக்கிறது. ஆங்கிலத்தைப் படிப்பதும் கடினம். காரணம் ஆங்கிலம் நாளும் வளர்ந்துவரும் மொழி. இந்த இரு மொழிகளையும் கற்பதுடன் நில்லாது 'ஹிந்தி ஆர் எனி அதர் இன்டியன் லாங்க்வேஜ்' என்ற தலைப்பின்படி தாய் மொழியாகவோ, வட்டார மொழியாகவோ ஆங்கிலமோ அல்லாத மொழியாகிய ஹிந்தியை மாணவர்கள் படிக்க வேண்டும் என்ற நிலைமையை ஏற்படுத்துவது அவசியமே அல்ல. இந்த நிலையை நிச்சயமாக மாற்ற வேண்டுமென்று இந்த அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன். ஹிந்தியை நாடு முழுவதும் எல்லோரும் பயிலச் செய்வதற்கு எல்லா அரசாங்கங்களும் ஒத்துழைக்க வேண்டுமென்று மத்திய அரசாங்கத்திலுள்ளவர்கள் கேட்டாலும், ஹிந்தியை எல்லோரும் படிக்கச் செய்வதை அவர்கள் கடமையாகக் கொண்டிருந்தாலும், மாநில அரசாங்கத்தைச் சேர்ந்தவர்கள் மாநிலத்திலுள்ளவர்களில் ஹிந்தியைப் பயில விரும்புவோர்க்கு அதற்கான வாய்ப்பை அளிக்கலாமே தவிர, ஹிந்தியைப் படிக்க விரும்பாத மாணவர்களும் அதைப் படித்துத்தான் தீர வேண்டும் என்ற நிலைமையை உண்டாக்கக் கூடாது; தமிழிலும் ஆங்கிலத்திலும் மாத்திரமே தேர்ச்சி பெற வேண்டுமென்று விரும்பும் மாணவர்களும் ஹிந்தியைப் படித்துத்தான் தீர வேண்டும் என்ற நிலைமையை உண்டாக்கக் கூடாது.

வேண்டுமானால் இதற்கு கட்டாய ஹிந்தி என்ற பெயரில்லையென்று சொல்லலாம். ஆனால் இருக்கும் நிலை, கட்டாய இந்திதான். ஆகவே நான் அமைச்சரவர்களை வற்புறுத்திக் கேட்டுக்கொள்வேன், தமது கருத்தை அவர்கள் மறுபரிசீலனை செய்ய வேண்டுமென்று. இந்தி படிக்க விரும்புகிறவர்களுக்கு நான் தடை எழுப்ப விரும்பவில்லை. தமிழை சிறப்பு மொழியாக பயில்வதற்கு வாய்ப்பு இருக்கவேண்டும். எந்தக் காரணத்தை முன்னிட்டும் இந்தியைக் கற்கவே ண்டுமென்று வற்புறுத்தக்கூடாது. அடுத்து, இன்றையதினம் பள்ளி ஆசிரியர்களுக்கு குறைந்தது 35 பிள்ளைகளாவது சராசரி இருந்தால்தான் ஒவ்வொரு ஆசிரியரும் ஆசிரியராக பணியாற்றுவதற்குரிய ஊதியம் பெற முடியும் என்ற கருத்து நமது அரசாங்கத்தால் வற்புறுத்தப்படுகிறது. இது குறித்து பல தடவைகள் மாறுபாடுகள் எழுப்பப்பட்டன. முன்னால் 40 ஆக இருந்ததை இப்பொழுது 35 ஆக குறைத்துவிட்டேன் என்று அமைச்சர் அவர்கள் கூறினார்கள். ஆனால் மாணவர்கள் அட்டவணையில் 35 பேராவது சராசரி வந்திருந்தால் ஏற்றுக்கொள்ளப்படுவார்கள், "according to educational teaching qualifications" என்று தெரிவித்தார்கள். நான் அவர்களிடம் வற்புறுத்திக்கேட்டுக் கொள்வேன், 35 என்ற சராசரி எண்ணிக்கை அதிகமானது. சட்டசபை எண்ணிக்கையை ஒப்பிட்டு நோக்கினால் பத்து பேர்கள் கூட தேராது. நாம் எவ்வளவு குறைவாக வருகிறோம் என்பதோடு ஒப்பிட்டு பள்ளிக்கூடங்களைக் காட்டத் தயாராயில்லை. அதே நேரத்தில் பள்ளிக்கூட மாணவர்களும் கூட 35 பேர்கள் இருக்கும் வகுப்பில் சராசரி 25 தான் தேறும். 40 பிள்ளைகள் இருக்கக் கூடிய இடத்தில் 30 தான் தேறும்.

9.30 a.m.

16th March 1959] [Sri K. Anbazhagan]

அதிலும் கிராமங்களில், பிற்போக்கு வட்டாரங்களில் வாழ்கிற மக்களின்
குழந்தைகள் பள்ளிக்கூடத்திற்குச் செல்வதற்கு முடியாத சூழ்நிலைக்கு
ஆளாகிறார்கள், சில நாட்களில். ஆகவே சராசரி 35 என்றிருப்பதை
30 என்றாவது மாற்றியமைக்க அமைச்சர் அவர்கள் அருள் கூர்ந்து முன்
வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நியாயம் என் வாதத்தில்
இருக்கிறது என்பதையும் நான் தெரிவித்துக் கொள்கிறேன். மற்
றொரு கருத்து, மாணவர்கள் 35 பேர்கள் இருக்கவேண்டுமென்று இருந்தா
லும்கூட வகுப்புகளின் தரத்தைப் பார்த்துத்தான் தீர்மானிக்கவேண்டும்.
முதல் வகுப்பில் பிள்ளைகள் வரும்போது அங்கு 35 குழந்தைகளுக்கு
பாடம் நடத்துவது என்பது மிகக் கடினமானதொரு காரியமாகும். முதல்
இரண்டு வகுப்புகளில் 35 குழந்தைகளுக்கு பாடம் நடத்துவது என்பது
மிகவும் சிரமமான காரியமாகும். ஆனால் மூன்றாவது, நான்காவது
வகுப்புகளில் அப்படி நடத்த முடியும். ஆறு, ஏழாவது வகுப்புகளை
எடுத்துக்கொண்டால் அங்கு 40 குழந்தைகளுக்குக் கூட பாடம் நடத்த
லாம். இப்பொழுதிருக்கிற நிலையை ஒட்டிப் பார்த்தால் முதல் இரண்டு
வகுப்புகளில் 25 குழந்தைகள் இருந்தால் கூட அதை ஏற்றுக்கொள்ள
அரசாங்கம் முன்வரவேண்டும். முதல் இரண்டு வகுப்புகளில் குழந்தைகள்
எவ்வளவுக்கெவ்வளவு குறைவாகயிருக்கின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு
அடிப்படையில் கல்வியைப் பற்றிய தெளிவு குழந்தைகளுக்கு நன்கு
ஏற்பட முடியும் என்பதை நான் இங்கு தெரிவித்துக் கொள்கிறேன்.
முதல் வகுப்பில் 35 குழந்தைகளை வைத்து பாடம் நடத்துவது எவ்வளவு
கடினமானது என்பதை, இந்த சட்டமன்றத்தில் ஆரம்பப் பள்ளி ஆசிரியர்
யாராவது இருந்தால் அவர், புரிந்து கொள்வார். பத்து குழந்தைகளுக்கு
சேர்ந்து படிப்பு சொல்லிக் கொடுப்பது என்பது பெரிய, கடினமான காரிய
மாகும். ஆகவே, ஆரம்பப் பள்ளியில் முதல் இரண்டு வகுப்புகளில் 25
குழந்தைகள் இருந்தால் போதும் என்ற ஒரு ஏற்பாட்டை அரசாங்கம்
ஏற்றுக்கொள்ளவேண்டும். இன்றையதினம் கான்வென்ட் பள்ளிக்
கூடங்கள் சிறந்த முறையில் நடைபெற்று வருகிறது என்று நமது கல்வித்
துறை இலாகா தலைவர் அவர்களே அடிக்கடி பாராட்டி குறிப்பிடுகிறார்கள்.
அப்படி அவர்கள்' உள்பட பாராட்டுகிற அளவிற்கு அப்பள்ளிகள் நடப்ப
தற்கு ஒரு காரணம் என்னவென்று கேட்டால் அங்கு 25 குழந்தைகளுக்கு
மேல் முதல் இரண்டு வகுப்புகளில் அனுமதிப்பதில்லை. அப்படி, 25 குழந்
தைகளுக்கு மேல் அனுமதிக்கப்படாததால் அக்குழந்தைகளை நன்கு கவ
னிக்க முடிகிறது. வேறு சில வசதிகள் அங்கு இருக்கலாம். ஆனால்
எண்ணிக்கையும் ஒரு முக்கிய காரணமாகும். சாதாரணமாக, குடும்பக்
கட்டுப்பாட்டைப் பற்றி, குடும்பக் கட்டுப்பாடு நாட்டின் நன்மைக்காகத்தான்
கொண்டுவரப்படுகிறது என்று சொல்லும் அரசாங்கம், ஒரு குடும்பத்தில்
மூன்று குழந்தைகளுக்கு மேல் இருக்கக்கூடாது, அப்படியிருந்தால் அக்
குழந்தைகளை நன்கு கவனிக்க முடியாது போய்விடுமென்று சொல்கிற
அரசாங்கம், 35 குழந்தைகளை ஆரம்பப்பள்ளி ஆசிரியரிடம் கவனிக்க
சொல்லி ஒப்படைத்தால் அவர் இந்தக் குழந்தைகளை எப்படி கவனிக்க
முடியும் என்பதை ஏன் அரசாங்கம் எண்ணிப்பார்க்கத் தவறி விட்டது ?
ஆக, முதல் இரண்டு வகுப்புகளில் 25 குழந்தைகளுக்கு மேல் இருந்தால்
ஆசிரியர்களால் அக்குழந்தைகளை கவனிக்க முடிவதில்லை. விளையாட்டுப்
பருவத்திலிருக்கிற குழந்தைகளுக்கு விளையாட்டோடு விளையாட்டாகத்தான்
கல்வி போதிக்க வேண்டும். அப்பொழுது ஆசிரியர்களின் கவனம்
குழந்தைகளின் மேல் அதிகம் இருக்கவேண்டும். அப்படி ஆசிரியரின்
கவனம் அதிகமாக இருக்கவேண்டுமென்றால் அந்த வகுப்புகளில்
மாணவர்களின் எண்ணிக்கை 25-க்கு மேல் இருக்கவே கூடாது. ஆகவே,
இக்கருத்தை அமைச்சர் அவர்கள் மறுபடியும் ஆலோசிக்கவேண்டும்.
அதேபோல் இன்றையதினம் ஆசிரியர்களாக இருப்பவர்களின் ஊதியம்
மிகக் குறைவாயிருக்கிறது. அப்படி அவர்கள் ஊதியம் குறைந்திருப்பது
குறித்து இப்பொழுது புனர் பரிசீலனை செய்வதற்குரிய வாய்ப்பு ஏற்பட்டி
ருக்கிறது. அதையும் இப்பொழுது ஏற்படுத்தப்பட்டிருக்கிற கமிஷன்
அது குறித்து விசாரணை செய்து நல்ல முடிவினை தரக்கூடுமென்று
நான் நம்புகிறேன். இருந்தபோதிலும் ஒரு கருத்தை நான்
இங்கு குறிப்பிடுவது அவசியமென்று கருதுகிறேன். லோயர் எலிமெண்
டரி கிரேட் டீச்சர்ஸ் இன்றையதினம் பெற்று வருகிற சம்பளம் 25–35

[Sri K. Anbazhagan] [16th March 1959

ஆகும். இப்பொழுது ஐந்து ரூபாய் அதிகரித்துக் கொடுத்திருக்கிறோம் என்று சொல்லலாம். ஆனால் அவர்கள் ஆரம்ப சம்பளம் 23 ரூபாய் தான். இப்படியிருந்தால் அந்த ஆசிரியர்களுக்கு சமுதாயத்தில் எந்த அளவு மதிப்பு இருக்கமுடியும் என்று எண்ணிப் பார்க்கவேண்டும். ஹையர் எலிமெண்டரி டீச்சர்ஸ்க்கு 30 ரூபாய் சம்பளம் இருக்கிறது. செகண்டரி கிரேட் ஆசிரியர்களைப் பொறுத்த வரையில் அண்மையில் அவர்களது ஊதியம் உயர்த்தப்பட்டது. அவர்களுக்கு 45 ரூபாயில் தொடங்குகிறது. அரசாங்கப் பள்ளிக்கூடங்களிலும் லோக்கல் போர்டிலும் ஏறத்தாழ ஒரேவிதமாகத்தான் இருக்கிறது என்று சொன்னாலும் எய்டெட் பள்ளிகளில் வேறு விதமாகத்தான் இருக்கிறது. ஆக, பள்ளிக்கூடங்களை யொட்டி ஆசிரியர்களின் சம்பளங்கள் இருப்பதும், கடைநிலை ஆசிரியர்களுக்குள்ள சம்பளம் 23 ரூபாயாக இருப்பதும் மிக மிக வருந்தத்தக்கதாகும். அடுத்து, கல்லூரிகளில் உள்ள பண்டிட், முன்ஷிகள் ஆகியவர்களைப் பற்றி ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். **Detailed Statement of Expenditure** என்ற தலைப்பில் தரப்பட்டிருக்கிற விஷயத்தில், பண்டிட், முன்ஷிகள் இவர்களுக்கு என்ன சம்பளம் கொடுக்கப்படுகிறது என்று கேட்டால் அவரவர்கள் கல்வித் தரத்திற்குத் தகுந்தாற்போல் கொடுக்கப்படுகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. அவர்களது தரத்தை யார் தராசில் வைத்து நிறுக்கிறார்கள் என்று தெரியவில்லை. அவர்களின் சம்பளம் என்னென்ன என்று அந்தக் குறிப்பில் இருக்குமானால் அதிலுள்ள வேற்றுமைகள் தெரியும். பண்டிட், முன்ஷிகள் விஷயத்தில் பல குறைபாடுகள் இருக்கின்றன. உயர்தர பள்ளிகளை எடுத்துக்கொண்டால் அதில் முதல்தரமாக இருப்பவர்களுக்கு 80 ரூபாய் சம்பளம் என்றும், இரண்டாம் தரத்தினருக்கு 45லும், 60லும் தொடங்கப்படுகிறது, சம்பளம். முதல் தர தகுதியைப் பெற்றிருந்தாலும், அப்படி பெற்றிருப்பவர்களுக்கு அந்தச் சம்பளம் அளிக்கப்படுவதில்லை. சில தினங்களுக்கு முன்னர் கல்வியமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள்; உயர்நிலைப் பள்ளியில் 12 மணிநேரம் பாடம் எடுத்தால் அவர்களுக்கு ஒரு பத்து ரூபாய் சம்பளம் அதிகம் தருகிறோம் என்று சொன்னார்கள். இது எப்படி நியாயம் செய்வதாகும்? இரண்டாவது தர ஆசிரியர்கள், வித்துவான் பரீட்சை படித்து விட்டு, பண்டிட் பயிற்சி பெற்று விட்டு, எஸ்.எஸ்.எல்.சி. தேர்வும் பெற்று முதல்தர ஆசிரியருக்குள்ள தகுதி பெற்றிருந்தாலும்கூட, 12 மணி நேரம் உயர்நிலைப் பள்ளியில் பாடம் எடுத்தால்தான் இந்த பத்து ரூபாய் உயர்வு கொடுக்கப்படுகிறது. கல்வியின் தரத்தை யொட்டித்தான் சம்பளம் இருக்கவேண்டும் அல்லது எடுக்கிற வகுப்பைப் பொறுத்துத்தான் சம்பளம் கொடுக்கப்படுமென்று சொன்னால், தான் விரும்புகிற ஆசிரியர்களை மேல் வகுப்புகளுக்கும், தான் விரும்பாத ஆசிரியர்களை கீழ் வகுப்பிற்கும் போடுகிற மனப்பான்மை நிர்வாக அதிகாரிகளுக்கு ஏற்படத்தான் செய்யும். தங்களுக்கு வேண்டியவர்களுக்கு பத்து ரூபாய் அதிகமாக கொடுப்பதற்காக அவர்களை மேல் வகுப்புகளுக்கும், தங்களுக்கு வேண்டாதவர்களுக்கு அந்த பத்து ரூபாய் கொடுக்காமல் இருப்பதற்கு அவர்களை கீழ் வகுப்பிலும் போடுவதற்குள்ள சந்தர்ப்பம் இன்று நிர்வாக அதிகாரிகளுக்கு இருக்கின்றன. ஆகவே, வகுப்பு என்று பாராது, ஒரே யோக்கியதையும், தரமும் இருப்பவர்களுக்கு ஒரேவிதமான சம்பளம் அளிக்கப்படவேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன். நூறு ரூபாய்க்கு மேல் சம்பளம் பெறும் ஆசிரியர்களின் விஷயத்தில் இந்தக் கொள்கையை நீங்கள் கடைப்பிடிக்கவேண்டுமென்று நான் வற்புறுத்தவில்லை. பேராசிரியர்களுக்கு 500 ரூபாயும், துணை ஆசிரியர்களுக்கு 250 ரூபாய் என்றும் இருப்பதை மாற்றவேண்டும் என்று நான் கூறவில்லை, அப்பொழுது தகுதியின் அடிப்படையில் இல்லாது வகுப்புகளின் அடிப்படையில் கொடுப்பதுபற்றி நான் ஒன்றும் கூற விரும்பவில்லை. ஆனால் நூறு ரூபாய்க்கு கீழேயிருக்கும் ஆசிரியர்களின் விஷயத்தில் தகுதியை மாத்திரம் கவனித்து இன்ன வகுப்பில் பாடம் எடுக்கிறார், ஆகவே அவருக்கு அதிகச் சம்பளம் என்றும் கீழ் வகுப்பில் பாடம் எடுக்கிறார்கள், ஆகவே அவருக்கு குறைந்த சம்பளம் என்றும் வைக்காதீர்கள். பொதுவாக தமிழ் ஆசிரியர்கள், வித்வான்களுக்குப் படித்தவர்கள் குறைவாகப் படித்திருக்கிறார்கள் என்ற ஒரு தவறான கருத்து நிலவி வருகிறது. வித்வான் பாட திட்டத்தை

16th March 1959] [Sri K. Anbazhagan]

அமைச்சர் அவர்கள் ஒரு முறை புரட்டிப்பார்த்தால் எம். ஏ. படித்தவர்கள் எந்த அளவு தமிழ் அறிவு பெறுகின்றார்களோ, அதைவிட அதிக தமிழ் அறிவு பெறுவதற்கு அவர்களுக்கு வாய்ப்பு இருக்கிறது. காலத்தை ஒட்டியும், சூழ் நிலையை ஒட்டியும் நாட்டிலே பொது அறிவு வளர்ந்து வருகிறது. அந்தப் பொது அறிவு வித்வான்களுக்கும் கிடைக்காமல் போய் விடுமா ? வித்வானுக்கு மட்டும் படித்தவர்கள் என்ற காரணத்திற்காக அவர்களுக்குக் குறைந்த ஊதியம் இருக்கவேண்டுமென்று விரும்புவது, நாம் இந்த நாட்டை தமிழ் மொழியில் ஆளப்போகிறோம், தமிழுக்கு முதல் இடம் தருகிறோம் என்று சொல்லுகிற கருத்திற்கு மாறுபட்டது என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

மற்றொரு கருத்தையும் கூறிக்கொள்ளுவேன். கல்லூரிகளில் பிற துறைகளில் " அஸிஸ்டெண்டு ப்ரொபஸர்ஸ், அஸிஸ்டெண்டு லெக்சரர்ஸ்" என்ற பெயருடையவர்கள் 150 லிருந்து 250 ரூபாய் வரை ஊதியம் பெறுகின்றார்கள். அதே கல்லூரியில் " அஸ்ஸ்டெண்டு லெக்சரர்ஸ் இன் ஓரியண்டல் லாங்குவேஜ் " என்ற பெயரால் தமிழாசிரியர்கள் இருக்கிறார்கள். " ஓரியண்டல் லாங்குவேஜ் " என்று தமிழைக் குறிப்பிடுவது நான் அது அவசியம் இல்லாத தொடர் என்று கருதுகின்றேன். " அஸிஸ்டெண்டு லெக்சரர்ஸ் இன் டமில் " என்று சிறப்பாக கூற வேண்டும். பிரித்துக் கூறவேண்டுமென்றால், சமஸ்கிருதத்தை " ஓரியண்டல் லாங்குவேஜ் " என்று குறிப்பிடுங்கள். பிற மொழிகளை வேண்டுமானால் இந்தப் பட்டியலில் சேருங்கள். " ஓரியண்டல் லாங்குவேஜ் " என்ற பதத்தால் தமிழைக் குறிப்பிடவேண்டிய அவசியம் இல்லை. அம்மாதிரி தமிழைக் குறிப்பிடுவது பாரபட்சம் என்பதை நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். எம். ஏ. படித்திருந்தாலும், எல்லாத் தகுதிகள் இருந்தாலும், மொழித் துறை ஆசிரியர்களுக்கு ரூ. 85-லிருந்து, கல்லூரி ஆசிரியர்களுக்கு, சம்பளம் அளிக்கப்படுவது ஒரு பெரிய தவறு. மொழித் துறை ஆசிரியர்களுக்கு மட்டும் என் இந்த வேறுபாடு ? எதற்காக இந்த வேறுபாடு ? மொழித்துறை ஆசிரியர்களாக இருப்பவர்களுக்கு அறிவுக் குறைவா ? அல்லது திறமை குறைவு என்று தீர்மானமாகச் சொல்ல முடியுமா ? எந்தவிதத்தில் அவர்களை வேறுபடுத்த முடியும் ? வெள்ளையர் ஆட்சியிலே இருந்த மற்ற பல காரியங்களை மாற்றி அற்புதம் செய்த நம்முடைய அரசாங்கத்தினால் இன்றையதினம் தமிழுக்கு இழைக்கப்பட்டிருக்கிற அநீதி, தமிழ்த்துறை ஆசிரியர்களுக்கு இழைக்கப்பட்டிருக்கிற அநீதி துடைக்கப்படவில்லை. அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன், தமிழ் நாடு என்று பெயர் வைத்தால் நாட்டிற்கு லாபம் இல்லை என்றாலும், தமிழ் ஆசிரியர்களுக்கு சம்பளம் கொடுப்பதில் அவர்களுக்கு லாபம் இருக்கிறது. அதோடு தமிழுக்கு ஒரு ஆர்வம் உண்டாக்கவேண்டுமென்று அமைச்சர் அவர்கள் எண்ணிக்கொண்டு இந்த வேற்றுமையைப் போக்க வேண்டும். எல்லா ஆசிரியர்களுக்கும் சம்பளம் குறைவு என்று பொதுவாக இருந்தபோதிலும், தமிழ் ஆசிரியர்களும், மொழி ஆசிரியர்களும், ஓரியண்டல் டீசர்ஸ், என்ற பெயரால் ஊதியத்தை குறைத்துப் பெறுவதற்கு கல்லூரியில் இடம் இருக்குமானால், அது தமிழையே அவமதிப்பதாகும். இதை உடனடியாக மாற்ற வழிகாணவேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்து நான் கூறுவேன் : இன்றைக்கு கல்வி இலாகாவில், கல்வி இலாகாவினுடைய ஆண்டு அறிக்கையானது 1955-56-வது ஆண்டுக்குத் தான் கிடைத்திருக்கிறது. அதற்குப் பின்னர் ஓராண்டு காலத்திற்காவது நம்மிடையே அறிக்கை தந்திருக்க முடியும். ஒரு வேளை கல்வித் துறை இலாகா தலைவர் ஒவ்வொரு மாவட்டத்திலும் சென்று அங்கே பல நல்ல பிரசாரத்தில் ஈடுபட்டிருப்பதன் காரணமாக இந்த அறிக்கையை அளிப்பதற்கு அவர்களுக்கு ஓய்வு இல்லையோ, என்னவோ ? ஆனால், அமைச்சர் அவர்களை வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன். ஒரு ஆண்டுக்கு முன்னதாக இந்த அறிக்கை கையிலிருந்தால்தான் இந்த மான்யத்தின் மீது விவாதம் நடக்கும்பொழுது பல கருத்துக்களை எடுத்துகூற வாய்ப்பு கிடைக்கும். 1955-56-க்குப் பின்னர் இதுவரையில் அறிக்கை கிடைக்கவில்லை.

[Sri K. Anbazhagan] [16th March 1959

அதேபோல் கல்வி சீரமைப்புத் திட்டத்தில் அமைச்சர் அவர்களும், கல்வி இலாகா தலைவர் அவர்களும் மிக்க அக்கறைகொண்டு, மாவட்டம்தோறும் மகாநாடுகள் கூட்டி, பொது மக்களிடமிருந்து நன்கொடைகளைப் பெற்று பல நல்ல திட்டங்களை நிறைவேற்றுகிறார்கள். அப்படி நிறைவேற்றுகின்ற நல்ல திட்டங்கள் நல்ல நோக்கத்தோடு நிறைவேற்றப்பட்டாலும், அதிலுள்ள குறைபாடுகளை இதுவரையில் அமைச்சர் அவர்கள் உணர்ந்ததாக தெரியவில்லை என்பதை நான் வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்ளுகிறேன். நோக்கம் மிகச் சிறந்தது என்ற காரணத்தினால், காரியம் எப்படி நிறைவேற்றப்படுகிறது என்பதை கவனிக்காமல் இருந்தால், அதனால் ஏற்படும் சீரழிவு அத்தனையும் ஆசிரியர்கள் தலையில்தான் வந்து விழுகிறது. அங்கே உள்ள கல்வித் துறை தலைவர்கள், மாவட்டத் தலைவருக்குத் தெரிவிக்க, அவர்கள் அதை மாவட்ட ஆணையாளர்களுக்கு அனுப்ப, அவர்கள் தங்களுக்குக் கீழே இருக்கிற தலைமை ஆசிரியர்களுக்கு தெரிவிக்க, தலைமை ஆசிரியர்கள் உயர்நிலைப் பள்ளி, ஆரம்பப்பள்ளி ஆசிரியர்களைக் கூப்பிட்டு, பொது மக்களிடத்தில் வசூல் செய்கின்ற காரியத்தில் ஈடுபடச்செய்கின்றார்கள். பொதுமக்கள் முன்னால் ஆரம்பப் பள்ளி ஆசிரியர்கள், சாதாரண ஆசிரியர்கள், எந்த அளவு மதிக்கப்படுகிறார்கள் என்பது தெரியும். ஏற்கெனவே பல இடுக்கண் நிலைமையில் இருக்கும் ஆசிரியர்களுக்கு பொதுமக்களிடமிருந்து கட்டாயப்படுத்தி இவ்வளவு தொகை தரவேண்டுமென்ற முறையில் வசூல் செய்யும் காரியத்தில் ஈடுபடுவது மிகத் தொல்லையாக இருக்கிறது. ஆசிரியர்கள் பாடம் கற்பிக்க வேண்டிய பொறுப்பை நிறைவேற்ற முடியுமே தவிர, அவர்கள் அதிகாரம் பெற்றவர்கள் அல்ல. கல்வித்துறையிலே இருக்கிற அதிகாரிகளுக்கே போதுமான அதிகாரம் இல்லை. அப்படியிருக்கும்பொழுது கல்வித் துறையில் இருக்கிற சாமான்ய ஆசிரியர்களிடம், ஏழை ஆசிரியர்களிடம் இந்தப் பெரிய பொறுப்பை ஒப்படைத்து, இந்த மாவட்டத்தில் 3 லட்சம் 5 லட்சம் ரூபாய் வசூல் ஆகவேண்டும், இந்த சாமான்கள் தயாராகவேண்டும் என்று சொன்னால், ஏற்கெனவே சீராக நடைபெற்றுக்கொண்டிருக்கும் பள்ளிகளுக்கும் நன்கொடை, சாமான்கள், பொதுமக்களிடமிருந்து கேட்டு வாங்கவேண்டும் என்பதற்கு என்ன அவசியம் இருக்கிறது என்பது எனக்குப் புரியவில்லை. இதில் எப்படி சீரமைப்பு நிறைவேற்றமுடியும் என்று எனக்குத் தெரியவில்லை. ஏன் இதற்கு ஆசிரியர்களை அனுப்புகிறார்கள் என்பது புரியவில்லை. ஆசிரியர்கள் ஏற்கனவே ஏழைகளாக இருக்கிறார்கள். அவர்கள் பெறுகின்ற ஊதியமோ மிகக் குறைவு. அவர்கள் போய் பொதுமக்களிடம் கையேந்தி நிற்பது என்று சொன்னால் கடன்காரர்கள் என்று கருதப்படுகிறார்கள். "ஸ்மால் ஸேவிங்ஸ் ஸ்கீம்" என்பதிலே எப்படி அதிகாரிகள் தவறுகள் செய்கின்றார்களோ, அதே தவறுகளும் இன்று கல்வித் துறையிலும் புகுந்துவிட்டது. இதை நான் வன்மையாகக் கண்டிக்கிறேன். அமைச்சராக இருப்பவர்கள் பொதுமக்களிடம் போய் நன்கொடைகள் பெறலாமே, சட்டமன்ற உறுப்பினர்கள், கவுன்ஸிலர்கள் இந்த வேலையில் ஈடுபடலாமே, ஊரிலுள்ள தலைவர்கள் இந்த தொகையை வசூலிக்கலாமே. ஆரம்ப ஆசிரியர்களை இவ்வாறு பிச்சையெடுக்க அனுப்பாதீர்கள். அவர்கள் பிச்சையெடுப்பதைப் பார்த்து ஊரார் அவர்களை மிக அலட்சியமாக நடத்திக்கொண்டிருக்கிறார்கள். இப்படி தொகையை பெற்றுக் கொண்டுவந்துவிட்ட பின்னர், அமைச்சர்கள், அதிகாரிகள் வருவார்களேயானால், அந்த நன்கொடை அளித்தவர்களுக்கு மாலை கட்டிக்கொண்டு வருவதும் ஆசிரியர்கள் வேலையாக இருக்கிறது. அப்படி 25, 30 ரூபாய் சம்பளம் வாங்கும் ஆசிரியர்களுக்கு இம்மாதிரி மாலை கட்ட முடியாது.

MR. SPEAKER: If the hon. Member wants to take up more time, I have no objection. But, I would like him to note that one Member from his party, will lose his chance to that extent.

SRI K. ANBAZHAGAN: Yes, Sir.

SRI K. VINAYAKAM: He does not mind it, Sir.

MR. SPEAKER: It is for the hon. Member to say.

16th March 1959]

SRI K. ANBAZHAGAN : Yes, Sir. I have requested them.

MR. SPEAKER : All right. The hon. Member can speak for another 10 minutes.

SRI K. ANBAZHAGAN : எனவே இந்த சிரமைப்புத் திட்டத்தில் ஆசிரியர்களுக்கு இந்தப் பொறுப்பை ஏற்படுத்துவது அவ்வளவு நல்லது அல்ல. அதே நேரத்தில் பிள்ளைகளுக்கு மதிய உணவு கொடுக்கும் திட்டத்தை நிறைவேற்றுகிறார்கள். ஊரில் இருக்கிற தலைவர் யாராவது ஒருவரை நியமித்து அவர் பெயருக்குத்தான் அரசாங்கம் பணம் அனுப்பு கிறார்களே தவிர, அவருக்குத்தான் செக் அனுப்பப்படுகிறதே தவிர, தலைமை ஆசிரியர் மூலம் இந்தத் திட்டம் நிறைவேற்றப்படவேண்டுமென் பதில் கவனம் செலுத்தப்படவில்லை. பொதுமக்களுக்கு நன்மை செய்யக் கூடிய நேரத்தில், அவர்களிடமிருந்து நன்கொடையைப் பெறுவதற்கு, ஒரு வரிடம் நன்கொடையை நேரடியாகப் போய்க் கேட்டு வாங்கிவருவதற்கு மட்டும் தான் ஆசிரியர்கள் கண்ணுக்குத் தெரிகிறார்களே தவிர, அந்தத் திட்டத்தை இந்த இடத்தில் குறைபாடு இல்லாமல் நிறைவேற்றுவதற்கு, தலைமை ஆசிரியரிடமும் அவருடன் இருக்கும் மற்ற ஆசிரியர்களிடமும் அந்தப் பொறுப்பு ஒப்படைக்கப்படவில்லை. ஒருவரிடம் போய் நன்கொடை வாங்க, பிச்சையெடுத்து வர ஆசிரியர்கள் கட்டாயப்படுத்தப்படுகிறார்கள். மந்திரிகளையும் மற்றவர்களையும் வரவேற்பதற்கு, அவர்களுக்கு முன்பு நன்கொடையை திரட்டிக் கொட்டுவதற்கு, கண்காட்சி சாலை அமைப்பதற்கு ஆசிரியர்கள்தான் பயன் பட வேண்டும். உண்மையிலேயே ஆசிரியர் கள் இதை விரும்பிச் செய்தால் நான் அதை வரவேற்பேன். அவர் களுடைய பரிதாபகரமான நிலைமையில் அவர்கள் எப்படி விரும்பிச் செய்ய முடியும் ?

மற்றொன்று அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஏதாவது பொதுக் காரியங்களைப்பற்றி சொல்லுகிறபொழுது, ஊதிய உயர்வைப்பற்றி சொல்லுகின்றபொழுது, 100 ரூபாய் சம்பளம் கொடுக்க வேண்டும் என்று சொல்லுகிற பொழுது, கிராமத்தில் இருக்கிற மக்கள் எவ்வளவு தாழ்ந்த நிலையில் இருக்கிறார்கள், எவ்வளவு வறுமையில் இருக்கிறார்கள், அவர்களுடைய சராசரி வருமானம் உங்களுக்குத் தெரியுமா என்று எங்களைப் பார்த்து அமைச்சர் அவர்கள் கேட்கலாம். அவர் களுடைய சராசரி வருமானம் தெரியும். அப்படி பிற்பட்ட நிலைமையில் உள்ள மக்களிடமிருந்து நன்கொடையை கட்டாயப்படுத்தி வசூல் செய்யக் கூடிய அளவுக்கு இன்று பல ஆசிரியர்கள் வற்புறுத்தப்படுகிறார்கள். எனக்கு இதுபற்றி பல விண்ணப்பங்கள் வந்திருக்கின்றன. பல குறிப்பு கள் வந்திருக்கின்றன, அவைகளை வைத்துக்கொண்டு தான் நான் சொல்லுகிறேன். இதைச் செய்வதாக இருந்தாலும், இதைச் செய் வதற்கு வேறு முறைகளை அமைச்சர் அவர்களும், அரசாங்கமும், கல்வித்துறை தலைவர்களும் கையாள வேண்டும். ஆசிரியர்கள் தலையில் இந்த பாரத்தைப் போடாதீர்கள். அவர்கள் இன்று பரிதாபகரமான நிலையில் இருக்கிறார்கள். "ஸ்மால் ஸேவிங்ஸ் ஸ்கீமில்" சிறிய அதிகாரிகள் எப்படி மாட்டிக்கொண்டு பல தொல்லைகளுக்கு ஆளாகியிருக்கிறார்களோ, அதே நிலையில் தான் ஆரம்ப ஆசிரியர்களும் பல தொல்லைகளுக்கு ஆளாகியிருக்கிறார்கள். இந்த நிலைமையிலே ஆசிரியர்களைக் கொண்டு இம்மாதிரி நன்கொடைகளை வசூலிக்காதீர்கள். பொதுநலத் துறையிலே ஆர்வம் பெற்றவர்களைக் கொண்டு இந்தக் காரியத்தை இயன்றவரை நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

மதிய உணவு குறித்தும் சில இடங்களில் புகார்கள் இருக்கின்றன. போதுமான அளவு அது செம்மையாக நிறைவேற்றப்படவில்லை. வேண்டு மானால் இதில் கூட லாபம் சம்பாதிக்கிறார்கள் என்பதை வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்ளுகிறேன். வேண்டுமென்றே குற்றம் சாட்டப்படவேண்டு மென்ற முறையில் அல்ல இதைச் சொல்லுவது. எனவே அம்மாதிரி குறைபாடுகள் இல்லாமல் இருக்கவேண்டுமானால், அந்த பள்ளித் தலைமை ஆசிரியரிடத்தில் அந்தப் பொறுப்பை ஒப்படைக்க வேண்டும்.

இன்னும் கொஞ்சம் அதிக நிதி தர வேண்டுமானுல், அரசாங்கத்தினிட மிருந்து தந்து, பொது மக்களுடைய ஒத்துழைப்பை, நேரிடையாக ஒரு வரிடம் சென்று கேட்டு பெறுவதைவிட, அரசாங்கமே தன்னுடைய வருமானத்திலிருந்து இதற்காக ஓரளவு நிதி ஒதுக்கி இந்த மதிய உணவுத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கு முன்வரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

மற்ரெரு வேண்டுகோள் விடுகிறேன். கல்வித்துறை இலாகாவில் தான் மிகச் செம்மையாக உத்தியோக உயர்வு அளிக்கப்படவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். கல்வித் துறையில் கூட உண் மையான முழுத் தகுதி பெருத ஒருவருக்கு ஒன்று, இரண்டு ஆண்டுக்கு முன்னுல் பதவி உயர்வு அளிக்கப்பட்டிருக்கிறது. அவர் பேஸிக் டிரெயினிங் ஸ்கூல் தலைமை ஆசிரியராக இருந்தார். அவருடைய பெயரை நான் குறிப்பிட வேண்டிய அவசியமில்லை. அவருடைய தகுதி யைப்பற்றி, சென்னை பல்கலைக் கழகத் துணைவேந்தர், அவர் பேஸிக் டிரெயினிங் பள்ளிக்கு தலைமை ஆசிரியராக ஒரு ஆண்டுக்கு மேல் நீடிக்கக்கூடாது என்று தெரிவித்தார்கள்; பேஸிக் டிரெயினிங் உயர் நிலைப்பள்ளி, போஸ்ட் கிராஜுவேட் பேஸிக் டிரெயினிங் பள்ளி தலைமை ஆசிரியராக ஒரு ஆண்டுக்கு மேல் நீடிக்கக்கூடாது என்று சொல்லி விட்டார்கள். அந்தப் பதவியிலிருந்து அவரை மறுபடியும் அவர் முன்பு இருந்த பதவிக்கு அனுப்பாமல், அதைவிட உயர் பதவிக்கு அனுப்பி யிருக்கிறார்கள். அவர் இப்பொழுது டிவிஷனல் இன்ஸ்பெக்டராக கல்வித் துறையில் பணியாற்றிக்கொண்டு வருகிறார். அவருடைய தகுதி உயர்ந்தது என்று சொன்னுல் போதுமான காரணம் காட்டவேண்டும். நான் விரும்புவது யாருக்கும் பதவி உயர்வு அளிக்கக்கூடாது என்பது அல்ல. மற்றவர்களைவிட இவருக்கு தனிச் சிறப்பு இருக்குமானுல், அந்தச் சிறப்பு என்னவென்பதை அமைச்சர் அவர்கள் குறிப்பிடவேண்டும். அவருக்கு என்னென்ன விதத்தில் தகுதி மற்றவர்களைக் காட்டிலும் உயர்வாக இருக்கிறது. அவர்களுக்கு மேல் நிலையில் உள்ளவர்களுக்கு என்னென்ன விதத்தில் தகுதி குறைவு, தகுதியுள்ளவர்களுக்கு மேல் நிலைக்குப் போவதற்கு வாய்ப்பு அளித்தோம் என்ருவது தெரிவிக்க வேண்டும்; அல்லது ஐயுறுவதற்கு இடமிருக்குமானுல் பதவி உயர்வு அளித்து பின்னர் அதாவது ரிட்டயர்மென்ட் காலத்திற்கு பின்னுல் அதே பதவியில் அவர் நீடிக்காமல் இருக்க கவனித்துக்கொள்ள வேண்டும். இவ் விதம் இரண்டு விதத்தில் நீதி வழங்கியிருக்கலாம். கல்வித்துறையில் இருக்கின்ற அனுபவத்தை கணக்கிலெடுக்கும்பொழுது அவருக்கு சிறப்பாக கல்வி தகுதி இருக்குமானுல் ரிட்டயர்மென்ட் ஆகும் போது உயர்வுக்கான வழி வகுத்து கொடுக்கலாம். அல்லது இவ்விதம் பதவி உயர்வு கொடுப்பதற்கு வேறு காரணங்கள் இருக்கின்றன. அல்லது தகுதியும் நேர்மையும் இருக்கிறது என்று அமைச்சர் அவர்கள் எடுத்துக் காட்டுவார்களானுல் அதை நான் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறேன்.

9-50 a.m.

மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் கொடுக்கப்படும் விஷயத்தில் சாதாரணமாக ஜூலை மாதத்தில் கொடுக்கவேண்டிய உபகாரச் சம்பளம் மார்ச்சு மாதத்தில் கொடுக்கப்பட்டு வருகிறது. இவ்விதம் தாமத மாவதற்கு மத்திய சர்க்காரும் காரணம் என்பதை நான் அறிவேன். இவ்விதம் கொடுக்கப்படுகின்ற உதவி சரியான காலத்தில் கொடுக்க வேண்டும். உதவிகள் எப்போதுமே காலா காலத்தில் செய்யவேண்டும். அப்போது தான் உதவியாக இருக்கும். ஆகவே இதை காலா காலத்தில் கொடுத்தால் மாணவர்களுக்குப் பயனுள்ளதாக இருக்கும். அதைப் போலவே ஒராசிரியர்கள் பயிற்சி பெற்று திரும்பி வந்தவர்கள் வேலை கிடைக்காமல் இருந்து கொண்டிருக்கிறார்கள். மேலும் அவர்களில் ஸெக்கண்டரி கிரேட் ஆசிரியர் பதவிக்கு அவர்கள் தகுதியுள்ளவர்களாக இருந்தாலும் அவர்களுக்கு சரியான படி பதவி உயர்வு கொடுப்பதில்லை. இவ் விதம் தகுதி பெற்றவர்கள் ஹையர் கிரேட் ஆசிரியர்களாகவே இருந்து வருகிறார்கள். ஸெக்கண்டரி கிரேட் தகுதியிருந்தும் அவர்களை அதற்கு கீழே உள்ள பதவியில் அனுப்புவது என்றுல், ஏற்கனவே மூன்று ஆண்டு

16th March 1959] [Sri K. Anbazhagan]

காலம் பயிற்சி பெற்று, அதன் பின்னல் இரண்டு ஆண்டுகள் பயிற்சி பெற்று திரும்புகிறவர்களுக்கு சரியான படி பதவி கொடுக்கவில்லை என்றால் உண்மையிலேயே கல்வித்துறை மிகவும் சீர்கேடு அடையும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்., ஆகவே அவர்களுக்கு—தகுதி பெற்றிருக்கிற வர்களுக்கு—தகுந்த முறையில் பதவி உயர்வு அளிக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக நான் எடுத்துக் காட்ட விரும்புகிறேன்—இன்றையதினம் தனியார் (மானேஜ்மெண்ட்) களுடைய பள்ளிக்கூடங்களை ஏற்றுக்கொள்ளும் படியான நிலை ஏற்படுகிறது என்றால் எனக்கு அதில் மறுப்பு இல்லை. அவ்விதம் தனிப்பட்டவர்களின் பள்ளிகளை அரசாங்கமே ஏற்றுக்கொள்ள முன் வராத நிலையில், திடீரென்று அவர்களுக்கு கொடுக்கப்பட்டு வந்த தொகையை மாற்றுவது என்கின்ற நிலை வருமானல் உண்மையிலேயே கல்வித்துறையில் சீர்குலைவு தான் ஏற்படும். இன்றைய தினம் தனிப் பட்டவர்கள் அவர்களுடைய சூழ்நிலைக்கேற்ப அவர்களுக்குத் தகுந்த வாறு திட்டங்களை வகுத்து சில வசதிகளோடு பள்ளிக்கூடங்களை நடத்தி வருகிறார்கள். ஆனல் இவற்றையெல்லாம் அரசாங்கம் தனது பொறுப் பில் எடுத்துக்கொள்ளுமானல் உண்மையிலேயே பாதுகாப்பு இருக்கும் என்று நாம் உணரலாம். எற்கனவே அரசாங்கம் தனிப்பட்டவர்களை இந்த விஷயத்தில் ஆதரித்து வந்திருக்கிறார்கள். இவ்விதம் ஆதரித்து வந்திருப்பதன் மூலமாகவும் மாணவர்களுடைய சம்பளத்தைக்கொண்டும் பலவிதத்தில் அவர்கள் பணம் பெற்றும் அவரவர்கள் பள்ளிக்கூடங்களை நடத்திக்கொண்டிருக்கிறார்கள். இந்த நிலையில் திடீரென்று அவர்களுக்கு மாற்றம் ஏற்படுமானல் அது கல்வித் துறையில் தீங்கிழைப்பதாகவே இருக்கும். வேண்டுமானல் ஒன்றிரண்டு ஆண்டு காலம் கழித்து இந்த மாற்றத்தைக் கொண்டு வந்தால் அதில் ஏற்படக்கூடிய கஷ்டங்களை படிப்படியாக உணர்ந்து அதற்கு தகுந்தவாறு மாற்றங்களை செய்யலாம். அல்லது அரசாங்கமே அதை ஏற்றெடுத்துக்கொள்ள முன் வரவேண்டும். இவ்விதமில்லாமல் உடனடியாகவே இந்த காரியத்தில் ஒரு தீவிரமான மாறுதலுக்கு விட்டுவிடக்கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன்.

அதையடுத்து இன்றைய தினம் சில மாவட்டங்களில் ஆரம்ப ஆசிரியர் களுக்கு மூன்று மாதகாலமாக சம்பளம் கொடுக்கப்படவில்லை என்று குறைகள் வந்து கொண்டிருக்கின்றன. திருச்சிராப்பள்ளி மாவட்டத் திலுள்ள ஒரு ஆசிரியர் எனக்கு அனுப்பியிருக்கின்ற கடிதத்தில்........

"நாங்கள் எல்லாம் பட்டினி கிடந்தபடியே பணியாற்ற வேண்டுமா? மூன்று மாதகாலமாக சம்பளம் தராது செயல்புரியும் இந்தச் செப்படி வித்தை செய்யும் அரசாங்கத்தை என்னவென்று அழைப்பது"

என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இவ்விதம் செப்படிவித்தை என்று நினைக்கிற அளவுக்கு அவர்களுடைய நிலைமை இருந்து கொண்டிருக்கிறது. ஆகவே அவர்களுக்கு உடனடியாக சம்பளம் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கடைசியாக ஒரு வேண்டு கோள்—அதாவது இன்றையதினம் கல்வி துறையில் இருக்கும் ஆசிரியர் களை தேர்வாளராக பொறுக்கியெடுக்கிற காரியத்தில் இப்போது அங்கங்கே இருக்கின்ற தலைமை ஆசிரியர்களின் சிபார்சின்படி தான் பொறுக்கி யெடுக்கப்பட்டு வருகிறார்கள். இதில் சில வேறுபாடுகளும் வகுப்பு உணர்ச்சிகளும் காண்பிக்கப்பட்டு வருவதாக தெரிகின்றது. ஆகவே இந்த முறையை மாற்றி அமைப்பதற்காக கல்வித்துறை தலைவரே இந்த தேர்வாளர்களை பொறுக்கியெடுப்பதாக இருக்கவேண்டும். கல்வித்துறை தலைவர்களுக்குத் தான் இவ்வளவு பேர்கள் இன்னின்ன மாவட்டங்களில் இருக்கிறார்கள், அவர்களுடைய தகுதி எந்த அளவுக்கு இருக்கிறது என் பதையெல்லாம் அறிந்து கொள்ள முடியும். ஆகவே கல்வித்துறை தலைவரே தேர்வாளர்களை பொறுக்கி எடுக்கின்ற முறையை ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இன்றையதினம் இந்த முறை இல்லாததின் காரணமாக 10 வருடங்களாக அனுபவம் பெற்றிருக்கிற வர்களில் ஒரு சிலருக்குத் தான் இந்த பதவி கிடைத்திருக்கிறது. அது மட்டுமல்ல, சில இடங்களில் பதிது புதிதாக ஒவ்வொரு ஆண்டுக்கும் பல

பேர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள். இது விரும்பத் தக்க காரியமல்ல, இந்த முறை கல்வித் துறையில் புகக்கூடாது. இன்றைய தினம் சில இடங்களில் கல்வித்துறையில் புகுந்திருக்கிறது, அவற்றையெல்லாம் தடுப்பதற்கு அமைச்சர் அவர்கள் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, நான் கொடுத்திருக்கும் வெட்டுத் தீர்மானத்தை முன்மொழிகின்றேன்.

**Mr. SPEAKER :** இந்த மான்யத்தின் மீது அமைச்சர் அவர்கள் பேசுவதற்கு முன்னால் கனம் சின்னதுரை அவர்கள் பேசுவார்கள். அதற்கு முன்னால் இதன் பேரில் பேசுவதற்கு 15, 16 அங்கத்தினர்கள் விரும்புகிறார்கள். ஆதலால் ஒவ்வொரு அங்கத்தினரும் 10 நிமிட நேரம் பேசலாம். அதற்கு மேல் பேசிக்கொண்டிருந்தால் கடைசியில் சில அங்கத்தினர்களுக்கு பேசுவதற்கு நேரம் கிடைக்காமல் போகும். மணியடித்தவுடன் நிறுத்திவிடவேண்டும். மணியடித்த பின்னாலும் பேசிக் கொண்டே போனால் மற்ற அங்கத்தினர்களுக்கு பேசுவதற்கு வாய்ப்பு இல்லாமல் போய்விடும். ஆகவே தயவு செய்து எல்லா அங்கத்தினர் களும் குறிப்பிட்ட 10 நிமிட நேரத்திற்குள் பேசி முடித்துவிட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இப்போது கனம் அங்கத்தினர் லாஸர் அவர்கள் பேசுவார்கள்.

**Sri S. LAZAR :** கனம் சபாநாயகர் அவர்களே, கனம் கல்வி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கின்ற கோரிக்கையை ஆதரித்தும், கனம் எதிர்கட்சி அங்கத்தினர் அவர்கள் கொண்டு வந்திருக் கும் வெட்டுத் தீர்மானத்தை எதிர்த்தும் சில விஷயங்களை சொல்ல ஆசைப்படுகிறேன். வெட்டுத் தீர்மானத்தை கொண்டு வந்து பேசின அங்கத்தினர் அவர்கள், ஏதோ வழக்கமாக அவர்கள் பாடும் பல்லவி பாடுகின்ற முறையில், அல்லது குறிப்பிட்ட ஒரு மொழியின் மீது அவர் களுக்கு இருக்கக்கூடிய வெறுப்பின் காரணமாக பேசியிருந்தாலோ நான் குறிப்பிட்டிருக்கமாட்டேன். அல்லது அவர்களைப் பற்றி அல்லது அவர்களை சார்ந்தவர்களைப் பற்றி பேசியிருந்தாலும்கூட நான் குறிப்பிட்டிருக்கமாட் டேன். அதற்குப் பதிலாக தமிழகத்திலுள்ள குழந்தைகளுக்கு, மாணவ மாணவிகளுக்கு இரண்டு மொழிகளுக்கு மேல் மூன்றாவது மொழியை பயிலுவதற்கு தகுதியில்லை என்ற முறையில் குறிப்பிட்டதை நான் கண்டிக்கிறேன். காரணம் பல சந்தர்ப்பங்களில் பல இடங்களில் அறிஞர் கள் உட்பட புரிந்து கொண்டிருக்கிறார்கள். அதாவது நம் தமிழகத்தி லுள்ள மாணவ மாணவிகள் வேறு எந்த பகுதியிலும் இல்லாத அளவுக்கு மொழிகளை பயிலுவதில் அதிகப்படியான திறமை பெற்றவர்கள் என்பதை பலர் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அந்த முறையில் பார்க்கின்றபொழுது இன்றைக்கு மேற்கத்திய நாடுகளில் எல்லாம் மூன்றாவது மொழியை கட்டாய பாடமாக சொல்லிக்கொடுக்கின்றார்கள். பல மொழிகளிலும் பயிற்சி பெற்றிருக்கிறார்கள். கிழக்கத்திய நாடுகளிலும் மூன்று மொழி சொல்லிக்கொடுக்கக்கூடிய முறையில்தான் பாட திட்டங்களை வகுத்திருக் கிறார்கள். ரஷ்யா நாட்டிலும் சீனா நாட்டிலும் இதைத்தான் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே தமிழ் நாட்டிலும் மூன்று மொழி பயிலுவதற்குரிய வசதி இருக்க வேண்டும். ஆகவே அதற்கான முயற்சி யில் அரசாங்கம் ஈடுபட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**(Sri V. K. Kothandaraman in the Chair).**

அடுத்தபடியாக இந்த மான்யக் கோரிக்கையைப்பற்றி எடுத்துக்கொண் டால், சட்டக் கல்லூரியைப் பொறுத்தவரையில் அந்த கல்லூரியிலிருந்து வருவாய் அதிகமாக கிடைத்தும் கூட அந்த கல்லூரிக்கு, மற்ற கல்லூரி களுக்கு கிடைக்கும் சலுகைகளை விட குறைவாகவே இருக்கிறது என்பதை பார்த்து நான் வருந்துகிறேன். சட்டக் கல்லூரியிலிருந்து ஆண்டு ஒன்றுக்கு 40 ஆயிரம் ரூபாய் வருவாய் வருகிறது என்று தெரிகிறது. அவர்களுக்கு அதிகப்படியாக செலவு செய்வது ஒரு லட்சத்து அறுபத்து நாலு ஆயிரம் ரூபாய் என்று தெரிகிறது. ஆனால் மற்ற கல்லூரிகளை எடுத்துக்கொண் டால் இன்றைக்கு இன்ஜினிரிங் கல்லூரியை எடுத்துக்கொண்டால் சுமார் 3 லட்சம் ரூபாய் வருவாய் வருகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. அங்கு

செலவு செய்யப்பட்டு வருவது சுமார் 33 லட்சமாக இருக்கிறது. இதைப் பற்றி நான் குறிப்பிட்டதின் நோக்கம், சட்டக்கல்லூரியில் ஏழை எளிய மாணவர்கள் அதிகமாகப் படித்து வருகிறார்கள். குறைவான அளவில் சம்பள விகிதம் இல்லை. இதனால் பல மாணவர்களுக்கும் கஷ்டங்கள் இருக்கின்றன. அதோடு ஏனைய கல்லூரிகளில் படிக்கும் மாணவர்களுக்கு ஹாஸ்டல் வசதியிருக்கிறது. ஆனால் சட்டக்கல்லூரியில் படிக்கும் மாணவர்களுக்கு இதுவரை ஹாஸ்டல் வசதி கிடைக்கவில்லை. சமீபத்தில் அமைச்சர் அவர்கள் கூறினார்கள். மெடிக்கல் காலேஜ்-மாணவர்களுககு கட்டப்படும் ஹாஸ்டலில் அவர்கள் மாறினதும் சீக்கிரமாக சட்டக்கல்லூரி மாணவர்களுக்கு புதிய ஹாஸ்டலை கொடுக்காமல் மெடிக்கல் காலேஜ் மாணவர்கள் காலி செய்யக்கூடிய ஹாஸ்டலை கொடுக்கலாம் என்று குறிப்பிட்டிருப்பது வருந்ததக்க அம்சமாகும். இந்தத் துறையை நன்றாக பரிசிலனை செய்து, அதிக காலமாக ஹாஸ்டல் வசதி யில்லாமல் கஷ்டப் பட்டு வந்திருக்கும் மாணவர்களுக்கு ஹாஸ்டல் வசதி செய்து கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். மேலும், அவர்களுக்கு இருக்கும் சம்பள விகிதத்தையும் குறைக்க தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

10 a.m.

அடுத்தபடியாக, அரசாங்கத்தின் நோக்கம், கூடிய வரைக்கும் கல்வியைக் கட்டாயமாகவும் இலவசமாகவும் செய்ய வேண்டுமென்பது. ஆரம்ப கட்டமாக, ப்ரைமரி ஸ்கூல்களில் வருகிற ஆண்டில் ஆரம்பிக்கப் படும் என்று கேள்வி நேரத்தில் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள். இந்த சந்தர்ப்பத்தில், இலவசக் கல்வி கட்டாய முறையிலே சொல்லிக் கொடுக்கக்கூடியதை நான் முழுமனதோடு ஏற்றுக்கொள்கிறேன். அதே நேரத்தில், ஏழை மாணவர்களுக்குக் கொடுக்கப்படும் வசதி எப்பொழுது கிட்டுமோ என்ற நிலைமையில் இருக்கிறார்கள். அவர்களுக்கு அரசாங்கத் தின் சலுகைகள் கிடைத்து வருகின்றன. அது சரியான நேரத்தில் கிடைக்காத காரணத்தினால் அவர்கள் கஷ்டப்படும் நிலையில் இருக் கிறார்கள். இப்பொழுது எட்டாவது படிவம் வரையில் ஏழை மாணவர் களுக்கு கல்வி கிடைக்கக்கூடிய முறையிலே அரசாங்கம் உதவி வருகிறது. அதை 10-வது படிவம் வரை உயர்த்த ஏற்பாடு செய்ய வேண்டும். அதன் பிறகு, நிதி நிலை சீரியாக ஆகும் போது, அவர்களுக்கு கல்லூரிக் கும் வசதி செய்து கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இந்த எல்லாத் துறைகளினும் இலவசக் கல்வி கிடைக்கக்கூடிய நட வடிக்கையை சர்க்கார் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளு கிறேன்.

இப்பொழுது, டிபெக்டிவ் சில்ட்ரன், அதாவது, அங்கக் குறைப்பட்ட குழந்தைகளுக்கு சர்க்கார் சலுகைகள் அளித்து வருகிறார்கள். அதற்கான ஒரு சில பள்ளிகள் வசதிகளையும் உதவியையும் பெற்றுவருகின்றன. அப்படியுள்ள ஒரு சில கல்வி மன்றங்களிலே, திருச்சியில் உள்ள குருடர்களுக்கு என்ற விடுதி ஒன்று. அவர்கள் கடந்த இரண்டு ஆண்டு களாக அரசாங்கத்தினிடம் உதவி கோரி வருகிறார்கள். ஏதோ சட்டத் தடை காரணமாக அவர்களுக்கு இன்று வரை உதவி கிடைக்காத நிலை இருக்கிறது. ஆனால், இதன் காரணமாக பல குருடர்கள் தொழில் கல்வி முதலான வசதிகள் பெற்றுவருகிறார்கள். ஆகவே இதற்கு வேண்டிய உதவியைக் கொடுக்க சர்க்காரும், கல்வித்துறை அதிகாரி யும் தகுந்த ஏற்பாடுகளைச் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். உதவி வரும், உதவி வரும் என்று அவர்கள் எதிர்ப்பார்த்து நிற்கிறார்கள். ஆகவே, சட்டத்தில் இருக்கும் தடையை அகற்றி, இது போன்ற பள்ளி களுக்கும் உதவி செய்ய சர்க்கார் முன் வர வேண்டும், அவர்கள் கூட இந்த உதவியைப் பெறும் வாய்ப்பை பெற வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இப்பொழுது வெளியிடங்களிலே, மொபசல் ஸ்கூல்களில், பார்த்தால் கிராமத்தில் இருந்து வரும் மாணவர்கள் வெளி நகரங்களில் தங்கு வதற்கு தக்க இடவசதி யில்லாமல் கஷ்டப் படுகிறார்கள். ஏழை, பிற்பட்ட மாணவர்களுக்கு பொருள் உதவி செய்ய சர்க்கார் முற்பட்ட போதிலும், அவர்களுக்கு தங்க இடமில்லாமல் ரூம்கள் இல்லாமல், தவிக்கிறார்கள்.

உயர் நிலைப் பள்ளிகளுக்கு இந்த வசதி மிகமிகத் தேவைப்படுகிறது. கல்லூரிகள் இருக்கும் இடங்களில் இது இன்னும் அதிகமாகத் தேவைப் படுகிறது. ஏறக்குறைய 40, 45 சதவிகித மாணவர்கள், அவரவர்கள் வீடுகளில் இடவசதியிருந்தாலும், பல இடங்களிலே மற்றவர்களுக்கும், இவர்களுக்கும், தங்க வசதியில்லாத நிலைமை இருக்கிறது. ஆகவே, இந்த ஏனைய மாணவர்கள், தனிப்பட்ட வீடுகளிலுல், ரூம்களிலும் தங்க வேண்டிய நிர்ப்பந்தம் இருக்கிறது. அவர்களுக்கு வேண்டிய இடம் கிடைக்காமல் மிகமிக அவதிப்படுகிறார்கள். ஆகவே, பல இடங்களிலும், நல்ல வீடுகளைக் கட்டிக்கொடுத்து, குறைந்த கட்டணத்தில் அவர்கள் அங்கே வசிக்கக்கூடிய ஏற்பாட்டை அரசாங்கம் செய்ய வேண்டியது அவசியம்.

ஒரு சில ப்ரொபெஷனல் காலேஜ்களில் கூட, ஆர்ட்ஸ் காலேஜ்களிலும் கூட, மாணவர்களும், மாணவிகளும் சேர்ந்து படிக்கும் நிலைமை இருக் கிறது. பலவிடங்களிலும் கூடியவரை அவர்கள் தனித்தனியாகப் படிப்பதே மேல். மெடிகல் காலேஜில் கூட, இப்பொழுது இருக்கும் முறையை மாற்றி, தனியாக மெடிகல் காலேஜ்கள் அதிகமாக இருக்கிற காரணத் தால், பெண்களும், ஆண்களும் தனியாகப் படிக்கும் முறையைக் கையாள வேண்டும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

பே கமிஷன் ரிபோர்ட் சீக்கிரம் சமர்ப்பிக்கப்படும் என்று எதிர்பார்க்கப் படுகிறது. ஆசிரியர்களுக்கு சம்பள விகிதத்தில் உயர்வு கொடுக்கப்பட்டி ருந்த போதிலும், பல பிரைவேட் மேனேஜ்மெண்டு பள்ளிகளில், அந்தச் சலுகை கொடுக்கப்படவில்லை. கூடிய வரைக்கும், அதைச் சீக்கிரம் அமல் நடத்தச் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri V. K. KRISHNAMURTHY** : அவைத் தலைவர் அவர்களே, கல்வி வளம் பெருக செல்வவளம் கோரும் கல்வி மான்யக் கோரிக்கை யைப் பாராட்டி வரவேற்கிறேன். தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சிக்குழு அமைத் திருப்பது மகிழ்ச்சிக் குரியது. தாய் மொழி—தாய்மொழிக்கல்வி—தாய் மொழி இலக்கியம் என்பதை நாகரீகத்திற்கும் பண்பக்கும்—வாழ்வியலுக் கும் அடிப்படை என்பதை உணர்ந்து பிறமொழியினர் நம் தமிழகத்தை விட்டுப் பிரிந்த பின்னர் தாய்மொழியை அரசியல் மொழியாக்கி அலுவலக மொழியாக்கி—மாமன்ற மொழியாக்கி—கட்டாய மொழியாக்கி தமிழுக்கு உயர்வு தந்ததோடு அல்லாமல் உயர்நிலைப்பள்ளி பாடமொழியாக்கி இருப்ப துடன் பல்கலைக்கழக பாடமொழியாக்க முனைந்திருக்கும் முயற்சிக்கு எல்லாக் கட்சிகளின் ஒத்துழைப்பையும் திரட்டித் தருமாறு வேண்டுகி றேன். பிறமொழியைப் பயின்று—அந்தப் பிறமொழியால் பொருளையறிய வேண்டுமென்ற அநாகரிகமான நிலை தமிழகத்தில்தான் இருக்கிறது. இந்நிலை மாறும் நாள் எந்நாளோ அந்நாளே தமிழ் மொழி தகவு எய்தும் பொன்நாளாகும்.

தமிழ்ப் பெரும் புலவர்கள் செய்யும் தமிழ் ஆராய்ச்சியைத் தமிழில் வரைந்து பட்டம் பெறக்கூடாதென்றும் ஆனால் ஆங்கிலத்தில்தான் வரைந்து பட்டம் பெறவேண்டுமென்றும் இருக்கும் அநாகரிக கேவல நிலை மாறி தமிழில் வரைய சென்னைப் பல்கலைக்கழகம் உத்திரவிடவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

கடந்த ஐயாயிரமாண்டுகளுக்கு முன்பிருந்திலங்கும் ஒல்காப்புகழுடைத் தொல்காப்பியத்தை உரைநடையில் வரைந்தவர்கள் மூவர். (1) திரு. ராகவ அய்யங்கார், (2) திரு. கா. சுப்பிரமண்யப் பிள்ளை, எம்.ஏ., எம்.எல்., (3) அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர் திரு. வெள்ளைவாரணன். திரு. வெள்ளைவாரணனின் தொல்காப்பிய ஆராய்ச்சி நூல் மிகச் சிறந்ததுமட்டுமின்றி உவமையற்றும் உலவுகிறது. இதற்கு பல்கலைக்கழகம் பட்டம் கொடுக்கலாம். ஆனால் ஆங்கிலத்தில் இல்லை. இது மாறி ஒழிய வேண்டும். தமிழ் இலக்கியம் உலக இலக்கியங் களுள் தொன்மையுடையதும் தலையாயதும் எனில் பிழையில்லை. உலகை உலகாகக் கண்டவர்கள் தமிழர்கள்—வாழ்க்கையை வாழ்க்கையாக்கக் கண்ட வர்கள் தமிழர்கள். இவை தான் தமிழன் கண்ட சங்க இலக்கியம்.

16th March 1959] [Sri V. K. Krishnamurthy]

பாத்திரங்களைப் படைத்து—நிகழ்ச்சிக்கிரையான பாத்திரங்கள் பெறும் உணர்ச்சியைப் படிப்போரும் உணர்ச்சி பெறும் இயல்பில்லாமல் வாழ்வை வாழ்வாக விளக்கி இல்லற வாழ்வே நல்வாழ்வென்ற குறிக்கோளுடன் விளங்கும் இலக்கியமே தமிழ் இலக்கியம்.

தமிழ் நாகரிகம் தலைசிறந்த நாகரிகம். இன்று நாம் விரும்பும் வர்க்கமற்ற—சாதியற்ற சமுதாயம் தமிழ் இலக்கியத்தில் இலங்குகின்றன. உடையவர்களுக்கும்—இல்லாதவர்ர்களுக்கும் பகைமையை மூட்டி ஏற்படு கின்ற அவலத்தைத் துணையாக்கி பொருளைப் பங்கிடுவது போலல்லாமல் வள்ளுவன் கூறிய பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பும் என்ற முறையும் ஊருணி நீர் நிறைந்தற்றே—பேரறிவாளன் திரு என்ற நெறியும் கம்பர் கூறிய "எல்லோரும் எல்லாப் பெருஞ்செல்வம் எய்தலாலே உடையாரு மில்லை இல்லாருமில்லை" என்றதால் தமிழ் இலக்கியமே வர்க்கமற்ற சமுதாயத்திற்கு அன்றே ஆவன அறைந்தமை மகிழ்தற்குரியது.

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்ற அறிவுரையும், "யாவரும் கேளீர்" என்ற உயர் உரையும் பெற்ற தமிழ் சமுதாயத்தில் "ஜாதி" என்ற தமிழ் அல்லாத சொல் எப்படியோ நுழைந்தது. ஆரிய நாகரிகம் அலை போல் தலைதூக்கித் தமிழகத்தில் நுழைந்தமையால் வருணபேதம் ஏற்பட்டு உயர்வு தாழ்வு தலை விரித்தாடிக்கொண்டிருக்கின்றன. தொல் காப்பியர் முதல் மறைமலை அடிகள் ஈறுக வரைந்த ஏனைய தமிழ் நூல் களில் "ஜாதி" என்ற சொல் இல்லை. ஆனால் விலங்கினத்தில் நீர் வாழ் உயிர் இனங்களாகிய மீன்களின் பிரிவை உணர்த்த சாதி என்ற சொல் தொல்காப்பியத்தில் காண்கிறோம். நீர் வாழ் விலங்கினத்திலிருந்து மண் ணுலகு நுழைந்து தமிழ் மக்களிடை நுழைந்து சமுதாயம் சரிந்ததற்கு ஆரிய வருண ஜாதி முறையாதலால் இதையகற்ற இராமலிங்க அடிகள் வள்ளலார் இராமலிங்க அடிகள் "நால்வருண ஆசிரம ஆசார நவின்ற கலை சரிதமெல்லாம் பிள்ளை விளையாட்டே" என்று மிகவும் வன்மையாகக் கண்டித்தார்.

உயரிய ஒழுக்கம்—கட்டமைந்த ஒழுக்கம் கற்பு தமிழன் கண்ட—தலை யாய நாகரிகம். "உயர்திணை என்மனார் மக்கட்சுட்டே" என்றார் தொல் காப்பியர் ; உயரிய ஒழுக்கமே மனிதப் பண்பு என்றார்.

ஒரு மனிதனின் நகையணிந்த குழந்தை உறங்கும்பொழுது மற்றொரு மனிதன் அந்நகையை களவாடுகிறான். ஆனால், அந்த வீட்டு நாய் திருடுகிறவனைக் குலைத்துத் தடுக்கிறது. மனிதனைவிட பல மடங்கு மேலாகி மனிதப் பண்பை நாய் பெற்றிருத்தலாலே மக்கட்சுட்டு என்றார். வள்ளு வரும் "உறுப்பொத்தல் ஒப்பன்று" பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு" என்றார். "ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்" என்றார் வள்ளுவர். கற்பு உயிரினும் நாணம் சிறந்ததென்றார் தொல்காப்பியர். ஆதலால் "செறி வும் நிறைபும் செம்மையும் செப்பும் அறிவும் அருமையும் பெண்பாலன" என்று பெண்களுக்கிலக்கணம் கூறினார் தொல்காப்பியர். மாணவர்கள் அறிவறிந்து, பண்ணெய்தி, ஒழுக்கப்பியர்புகளாகவும் விளங்கும் முறை யில் பாடத் திட்டத்தை அமைக்க வேண்டும். மாணவர்கள் படித்தால் என்ன, பட்டம் பெற்றாலென்ன, ஒழுக்கம் இல்லை எனில் ? மாணவிகள் படித்தாலென்ன, பட்டம் பெற்றாலென்ன, கற்பில்லை எனில் ? மனிதன் மனிதனாக வேண்டும் முறையில் கல்வி மன்றம் இயங்கவேண்டும். காந்தியடிகள்கூட கல்வி பயின்று மாணவர்கள் ஒழுக்கம் பெறவில்லை யானால், மாணவிகள் கற்புபெற வில்லையானால், படிப்பின் விளைவு பாழ் என்று கதறினார். ஆதலால் தமிழ் இலக்கியம் நன்கு பயின்று நல் வாழ்வில் நம்பிக்கை பெற ஆவன புரிய அமைச்சர் அவையை வேண்டு கின்றேன். முதற்பொருள், உரிப்பொருள், கருப்பொருள் ஆகிய இவை தான் தமிழ் நாகரிகத்தின் கருவூலம்.

தெய்வமுணலே மா மரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
யல்வகை பிறவுங் கருவென மொழிப. (தொல்.)
அளபிறந்துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழி இசையொடு சிவணிய
நரம்பின் மறையவென்மனார் புலவர். (தொல்.)

[Sri V. K. Krishnamurthy] [16th March 1959

எழுத்தோசைக்கும், இசைக்கும் யாழி யின்றியமையாத காரணமாதலால் தமிழ் நாகரிகத்தின் உட்பொருள் எனில் பிழையில்லை.

சங்ககாலத்தில் பேரியாழும், செங்கோட்டியாழும், சிலப்பதிகார மணிமேகலை காலத்தில் மகரயாழும், சகோடயாழும், கல்லாடர் காலத்தில் நாரதப் பேரியாழும், கீசக யாழும் இருந்தன. கடந்த ஆயிரமாண்டுகளாக இசை வளர்த்த யாழ் மறைந்தொழிந்தது. இசையைத் தெய்வமாகத் தமிழர்கள் போற்றியது மன்றி யாழையும் தெய்வமாகப் போற்றினர்கள். யாழ் தொழுது வாங்கப்பெற்றதை இளங்கோ அடிகள் கூறுவதாலும் மருதக்கவியிலே யாழ் தெய்வமாகப் போற்றி இருப்பதை அறிகிறோம். ஆயிரமாண்டுகள் கழிந்த பின்னர் அருட்திரு விபுலாநந்தர் ஏனைய யாழையும் கண்டுபிடித்து அவைகளைச் செய்யும் முறையை விரித்து யாழ் நூலையருளியுள்ளார். அமைச்சர் அவர்கள் அன்பு கூர்ந்து யாழைப் புதுப்பிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். உடனிருந்து உதவிபாயிரமளித்து திரு. வெள்ளைவாரணனும் இருக்கிறார்.

வழக்கொழிந்த கிரேக்கமொழியும்
வழக்கொழிந்த ஆரியமொழியும்
காலன் வாய்ப்பட்ட கிரேக்க ஆரிய இலக்கிய வாழ்வும்

உலகப் புகழ்எய்தினும், வழக்கொழியா தமிழும் தமிழ் இலக்கிய வாழ்வும் உலகப்புகழ் எய்த வில்லை. கிரேக்கர் புகழும் ஆரியர் புகழும் நாகரிகங்களைப் பிழைப்பிக்க உதவா என்றாலும், தமிழர் மனம் வைத்தால் தன்னாகரிகத்தைப் பிழைப்பிக்க இயலும், என்றதற்கு யாழ் நூலே சான்றாதலால் தமிழை ஆதரிக்க வேண்டுகிறேன்.

**Sri K. APPAVOO PILLAI :** கனம் தலைவர் அவர்களே, சென்னை மாகாணத்திலேயே மிகவும் பெரிய ஜில்லாவானது சேலம் ஜில்லா. அந்த ஜில்லா கல்வித் துறையில் மிகவும் பிற்போக்காக இருக்கிறது. சேலம் ஜில்லாவிலேயே பெரிய தாலூகா ஒசூர் தாலூகா. அதுவும் ரொம்பவும் பிற்போக்காக இருக்கிறது. ஆகவே கம்பல்சரி எடுகேஷன் அந்த தாலூகா பூராவும் பரவ வேண்டும் என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன். கன்னியாகுமரியில் இருப்பது போன்று, கம்பல்சரி எடுகேஷன் இருக்கும் இடங்களிலெல்லாம் பள்ளிக்கூடங்களுக்கு இருக்கக்கூடிய கட்டிடங்கள் எல்லாம் ரெண்ட் ப்ரீ கட்டிடமாக இருக்க வேண்டும். அங்கே இருப்பவர்கள் குடியிருக்க வசதி இல்லாமல் இருக்கிறார்கள். கட்டிடம் கட்டிக்கொள்ள அவர்களால் இயலவில்லை. அதனல் சர்க்காரிலேயே அவர்களுக்கு எல்லாம் கட்டிடம் கட்டிக்கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படி கட்டிடம் கட்டிக்கொடுத்து விட்டு பள்ளிக்கூடங்களை ஆரம்பிக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அங்கே தெலுங்கர்கள் அதிகமாக இருக்கிறார்கள். ஆகவே அங்கு இருக்கக் கூடியவர்களை மைனாரிடிகள் என்று எடுத்துக்கொண்டு அவர்களுக்கு வேண்டிய சலுகைகளைக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அங்கே மூன்று மொழிகள் பேசப்படுகின்றன. அவை யாவன தமிழ், தெலுங்கு, கன்னடம். அங்கே நடைமுறையில் நடப்பதைப் பார்த்தால் தெலுங்கர் பள்ளிக்கூடத்தில் தமிழ் உபாத்தியாயர்களை நியமிக்கிறார்கள். தமிழ் பள்ளிக்கூடங்களில் தெலுங்கு உபாத்தியாயர்களை நியமிக்கிறார்கள். அதனல் அங்கே பள்ளிக்கூடங்கள் சரிவர நடைபெறாமல் இருக்கின்றன.

அது மாத்திரம் அல்ல, சில இடங்களில் பள்ளிக் கூடங்களை திறந்து வைத்திருப்பதாகவே தெரியவில்லை. அதைத் தவிர டிபுடி இன்ஸ்பெக்டர் ஆப் ஸ்கூல் கொடுத்திருக்கக் கூடிய கிராமப் பெயர்களைப் பார்த்தால் ஒன்றுமே தெரியவில்லை. சில ஊர்களில் பட்டியலில்தான் பள்ளிக்கூடங்கள் இருக்கும். பள்ளிகள் இருப்பது போல் டிஸ்டிரிக்ட் போர்டில் மாணவர்களைப் போடுவார்கள். ஆனல் அங்கே போய் பார்த்தால் அந்த அட்ரெஸ் உள்ள கிராமமே இருக்காது. அங்கே போய் கேட்டால் அட்ரெசும் தெரிவதில்லை, போஸ்டாபீசும் இருப்பதாகத் தெரியவில்லை. அங்கு ஒன்றுமில்லையே என்று வந்து கேட்டால், " இன்ஸ்பெக்டர் கிராமங்களின் பெயரை

16th March 1959] [Sri K. Appavoo Pillai]

எழுதிக்கொடுத்தார், நாங்கள் போட்டோம், அவ்வளவுதான் எங்களுக்குத் தெரியும்" என்று சொல்லிவிடுகிறார்கள். அதே மாதிரி உத்தியோகங்கள் கொடுப்பதிலும் இருக்கிறது. உபாத்தியாயர்களைப் போட்டு விடுகிறார்கள். ஆனால் அவர்கள் போய் உத்தியோகத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றால் அப்படிப்பட்ட ஊர்கள் இருப்பதாகவே தெரியவில்லை. அதனால் அவர்களும் திரும்பி வந்து விடுவதாக இருக்கிறது. இப்படிப்பட்ட நிலைமை ஓசூர் தாலூகாவில் இருக்கிறது. அப்படி திரும்பி வந்து டிஸ்ட்ரிக்ட்போர்ட் ஆபீசில் பார்த்தால் அங்கே இருக்கிறவர்களுக்கும் அப்படிப்பட்ட கிராமங்கள் இருப்பதாகவே தெரியவில்லை. இன்ஸ்பெக்டர் எழுதிக்கொடுத்தார், அதன் படி உத்தரவுகள் போடப்பட்டிருக்கிறது என்று சொல்லி விடுகிறார்கள். அவைகளை சர்க்கார் சரிவர கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இதைத் தவிர சில பள்ளிக்கூடங்களில் இரண்டு உபாத்தியாயர்கள் தேவையாக இருந்தால் மூன்று நான்கு உபாத்தியார்களை நியமிக்கிறார்கள். அதேபோன்று சில பள்ளிக்கூடங்களில் மூன்று நான்கு உபாத்தியாயர்கள் தேவையாக இருந்தால் இரண்டு உபாத்தியாயர்களை மட்டும் தான் நியமிக்கிறார்கள். இம்மாதிரியாக பல சிக்கல்கள் இருக்கின்றன. இவைகளையும் கவனிக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஓசூர் தாலூகாவில் இருக்கக்கூடிய உபாத்தியாயர்கள் இன்ஷூரன்ஸ் ஏஜெண்டாகவும் வேலை பார்த்து வருகிறார்கள். அவர்கள் பல சிவில் விவகாரங்களிலும் ஈடுபட்டு வேலை செய்து வருகிறார்கள். அதனால் அவர்களால் சரிவர வேலை செய்ய முடிவதில்லை. அதிகாரிகள் அங்கே இருக்கக் கூடிய பள்ளிக்கூடங்களுக்கு ரெகக்னிஷனை வித்ட்ரா செய்து விட்டால் அங்குள்ள 200 அல்லது 300 மாணவர்கள் இருக்கக்கூடிய மிஷன் ஸ்கூல்களில் சேர வேண்டியதாக இருக்கிறது. அப்படி அங்கே போயும் அவர்களால் சேர முடியவில்லை. அதற்குக் காரணம் அப்படி அங்கே போய் சேர்ந்தால் அவர்களை கிருஸ்தவ மதத்தில் சேர்த்து விடுவார்களோ என்ற பயம் அவர்களிடத்தில் ஏற்பட்டிருக்கிறது. அதனால் அங்கேயும் போய்ச் சேருவதற்கு பயப்படுகிறார்கள். இதைப்பற்றி இரண்டு மூன்று வருஷங்களாக அதிகாரிகளுக்கு எழுதியும் தெரிவித்தும் இது வரையிலும் எந்த விதமான நடவடிக்கையும் எடுத்துக்கொண்டதாகத் தெரியவில்லை. ஆகவே உடனடியாக இதை கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஹையர் எலிமென்டரி ஸ்கூல்களில் ஐந்தாவது வகுப்பு வரையில் படித்து விட்டு பாஸ் செய்து விட்டு முதல் பாரத்தில் சேரவேண்டும் என்று வந்தால் அந்த மாணவர்களுக்கு மறுபடியும் பரீட்சை வைத்து பாஸ் பண்ண வேண்டும் என்று சொல்கிறார்கள். அப்படி பாஸ் செய்யவில்லையானால் மறுபடியும் ஐந்தாவது வகுப்பிலேயே தான் படிக்க வேண்டும் என்றும் சொல்லுகிறார்கள். அப்படிச் சொன்னாலும் சில சமயங்களில் படிக்க இடம் இல்லை என்றும் சொல்லி விடுகிறார்கள். இதனால் பல மாணவர்கள் பாதிக்கப்படுகிறார்கள். ஆகவே இந்தக் கஷ்டத்தைப்போக்க ஏதாவது நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஹோசூர் தாலூகாவில் இருந்த தெலுங்குப் பள்ளிக்கூடங்களுக்குத் தேவையான ட்ரெயினிங் டீச்சர்ஸ் இல்லாத காரணத்தால் ஒரு தெலுங்கு ட்ரெயினிங் ஸ்கூல் எக்மூரில் திறக்கப்பட்டது. முதலில் மோகனூர் தெலுங்கு மாணவர்களையெல்லாம் மோகனூரில் போய் ட்ரெயினிங் ஸ்கூலில் சேரவேண்டுமென்று உத்தரவு பிறப்பித்தார்கள். 8, 10 நாட்களுக்குள்ளாக எக்மூரில் போய்ச் சேரவேண்டும் என்று உத்தரவு இடப்பட்டது. இங்கு வந்து சேர்ந்தும் அவர்களுக்கு வாத்தியார் இல்லாத காரணத்தால் அவர்கள் பல மாதங்களாகப் பள்ளிக்கூடத்திற்கு வருவதும் போவதுமாக இருந்துக்கொண்டிருந்தார்கள். அங்கிருந்த தமிழ் வாத்தியார்கள் அவர்களைப் பார்த்து "நீங்கள் எல்லாம் அட்டென்டன்சில் கையெழுத்துப் போட்டு விட்டு ஆடிப்பாடிக் கொண்டிருங்கள்" என்று சொல்லி விட்டார்கள். இதைப் பற்றி நான் கல்வி அமைச்சர் அவர்களிடம் கூடத்

தெரிவித்தேன். இப்பொழுது தெலுங்கு உபாத்தியாயர் போடப்பட்டிருப்ப தாகத் தெரிய வருகிறது. ஆயினும் இங்கு 30, 34 பேருக்குத் தான் ட்ரெயினிங் கொடுக்கப்படுகிறது. நூற்றுக்கணக்கான பள்ளிக்கூடங்களுக்கு ட்ரெயினிங் டீச்சர்ஸ் தேவையாக இருப்பதால் ஒரு ட்ரெயினிங் ஸ்கூலை ஹோசூர் தாலூகாவில் உடனடியாகத் திறக்கவேண்டும் என்று தாழ்மை யாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

நல்ல திறமையான உபாத்தியாயர்கள் நமக்குக் கிடைக்கவேண்டுமானால் அவர்களுக்குக் கொஞ்சம் அதிகமாகச் சம்பளம் கொடுக்கவேண்டும். அப்படிக் கொடுத்தால் தான் திறமையான உபாத்தியாயர்கள் வருவார் கள். நாம், "பாக்வர்ட் பார்வர்டு, என்று வெள்ளைக்காரன் காலத்தில் பிரித்திருந்ததைப் போல் இப்பொழுது நம்முடைய காங்கிரஸ் அரசாங்கத்தில் வைத்திருப்பது நல்லதல்ல. இதனால் மிகவும் பணக்காரர்கள் தான் சலுகைகள் பெறுகிறார்களே தவிர, நியாயமாகச் சலுகைகள் பெறவேண்டி யவர்களுக்குச் சலுகைகள் கிடைப்பதில்லை. ஜாதி இல்லை என்ற நிலையில் இதை உடனடியாக மாற்றி எல்லோருக்கும் ஒரே விதமான சலுகைகளைத் தரவேண்டுமென்று நான் தாழ்மையாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

செகண்டரி ஸ்கூல் எஜுகேஷன் ரூல்ஸ் 30–43ல் ஒரு கேள்வித் தாளைத் திருத்தினால் அதனால் நல்லது கெட்டது எது இருந்தாலும் திரும்பவும் திருத்தவேண்டுமென்பதில்லை. பார்வையிடவேண்டுமென்று மேலதிகாரி களிடம் சொன்னால் "நாங்கள் தலையிட முடியாது, ரூல்ஸ் அந்த மாதிரி இருக்கிறது" என்று சொல்லுகிறார்கள். சேலத்தில் சின்னசாமி என்பவரு டைய குமாரன் ஷண்முகசுந்தரம் என்பவருக்கு 5-ம் பாரத்தில் எல்லாப் பாடங்களிலும் நல்ல மார்க்குகள் கிடைத்திருந்தாலும் ஏதோ தமிழில் குறைவாக எடுத்திருந்ததைப் பற்றி ஹெட்மாஸ்டர் மேலதிகாரிகளுக்குத் தெரிவித்தபோது ரூல்ஸ்படி அவர்கள் தலையிடமுடியாதென்றும் அவர்கள் அரசாங்கத்திற்குத் தெரிவித்திருப்பதாகவும் கேள்விப்பட்டேன். இதைப் பற்றி ரீஜனல் இன்ஸ்பெக்டர் அல்லது டைரக்டர் ஆப் பப்ளிக் இன்ஸ்ட்ரக் ஷன் இதில் தலையிட்டு இந்த ரூல் 30-ஐத் திருத்தவேண்டுமென்று கேட்டுக் கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

* **Sri M. KANDASAMI PADAYACHI** : அவைத் தலைவர் அவர்களே, நமது கல்வியமைச்சர் கொண்டு வந்திருக்கும் மானியத்தை ஆதரித்துச் சில வார்த்தைகள் பேச ஆசைப்படுகிறேன்.

நம்முடைய மாநிலத்தில் கல்வித்துறையானது ரொம்பவும் பிற்போக்குத் துறையில் இறங்கியிருக்கிறது என்பது நம் எல்லோரும் தெரிந்த விஷயம். கிராமங்கள்தோறும் கல்வி கற்பிக்கப்படவேண்டுவது அவசியம். கல்வி விஷயத்தில் கிராமங்கள் முன்னேறவில்லை என்பது எல்லோரும் அறிந் ததே. 60 லட்சம் ரூபாய் மானியமாக ஒதுக்கி இருப்பது காணாது என்பது என் கருத்து. மேலும் கல்விக்காக அதிகமாக மானியத்தை ஒதுக்கி ஒவ்வொரு கிராமத்திலும் ஆரம்பப் பள்ளிகளைத் துவக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். ஆரம்பக் கல்வியை மக்களுக்கு ஊட்டவேண்டுமானால் கட்டாயக் கல்வியாக மாற்றவேண்டும். நம் மாநிலத்திலுள்ள ஒவ்வொரு கிராமத்திலும் ஆரம்பப் பள்ளிகள் இருக்கவேண்டும். 300 ஜன சங்கியை உள்ள ஒரு ஊரில் ஒரு ஆரம்ப பள்ளிக்கூடம் ஆரம்பிக்கப்படும் என்று கல்வியமைச்சர் அவர்கள் கூறியிருக்கிறார்கள். அதன்படி எல்லாக் கிரா மங்களிலும் பள்ளிகள் அமையவில்லை என்பது என் கருத்து. என்னுடைய மாவட்டத்தில் 300 ஜனசங்கியை கொண்ட எல்லா இடங்களிலும் பள்ளி இல்லை. ஒவ்வொரு கிராமத்திலும் இதை ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

பள்ளி ஆசிரியர்களுக்குச் சரியான ஊதியம் கிடைக்காத காரணத்தால் பிள்ளைகளுக்குப் போதுமான அளவில் சரியானபடி கற்றுக்கொடுப்பதில்லை. ஆசிரியர்களில் சிலருக்கு சரியான பயிற்சி இல்லாத காரணத்தாலும் அவர்களால் சரியானபடி சொல்லிக்கொள்ள முடிவதில்லை. குறைந்தது ஒவ்வொரு பள்ளியையும் கண்காணிப்பாளர்கள்—டிபுடி இன்ஸ்பெக்டர்கள் —ஒவ்வொரு மாதமும் இரண்டு முறை அவசியம் பார்வையிடவேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதற்குத் திட்டம் இருக்கவேண்டும்.

16th March 1959] [Sri M. Kandasami Padayachi]

பஞ்சாயத்து யூனியனிடம் இந்தப் பள்ளிகளை கொடுக்கவேண்டுமென்று நாம் திட்டமிட்டிருக்கிறோம். அதன்படி அவர்கள் சரியான முறையில் நடக்கிறார்களா என்பதைக் கண்காணிக்க இப்பொழுது இருக்கும் ஒவ்வொரு ப்ளாக்கிலும் எக்ஸ்டன்ஷன் ஆபீசர்கள் இருக்கிறார்கள். அவர்கள் சரியான முறையில் கண்காணிக்க வேண்டும். நேஷனல் எக்ஸ்டன்ஷன் ஆபீசர்கள் இதை நல்ல முறையில் திட்டவட்டமாகச் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

வெள்ளை அறிக்கையின்படி கல்வி கற்க ஆரம்பிக்கும் பிள்ளையின் வயது 6 என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. நல்ல முறையில் கற்க வேண்டுமானால் பிள்ளைகள் மூன்று வயதிலேயே பள்ளிக்குச் செல்லும் பழக்கத்தைக் கைக்கொள்ள வேண்டும். அவர்களுக்கு 3 வயதில் இருந்தே நல்ல பழக்கத்தைக் கற்றுக் கொடுக்கவேண்டும். ஒரு ஆயாவை நியமித்து அவர்களை அழைத்துச் செல்ல, மறுபடியும் கூட்டிக்கொண்டுவரச் செய்யவேண்டும். இப்பொழுது நகரங்களில் இந்த மாதிரிப் பள்ளிக்கூடங்கள் நிறுவி 3 வயதில் இருந்தே பிள்ளைகள் பள்ளிக்குச்செல்லும் பழக்கத்தை மேற்கொள்ளச் செய்யவேண்டும்.

10-30 a.m.

ஆதாரப் பயிற்சி கொடுக்கக்கூடிய பள்ளிக்கூடங்களில் திட்டமாக இப்போது பகல் உணவு அளிக்க வசதி செய்து இருக்கிறார்கள். அது நல்ல திட்டம். அதனால் தான் அதிகமான ஏழை மாணவர்கள் படிப்பதற்கு வசதி ஏற்படுகிறது. அதோடு ஏழை மாணவர்களுக்கு சரியான புஸ்தகம் கிடையாது. இந்த வசதிகளை எல்லாம் திட்டவட்டமாகப் பணம் ஒதுக்கி அதிக அளவில் செய்து தரவேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக உயர்நிலைப் பள்ளிக்கூடம் இருக்கிற இடங்களிலாவது எட்டாவது வரையில் இருக்கக் கூடிய பள்ளிக்கூடங்களுக்கு அவசியம் இல்லை. ஐந்தாவது வரையில் ஆரம்பப்பள்ளியில் படித்துவிட்டு 6-வது வகுப்பே உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்து விடுவதற்கு வசதி செய்து கொடுத்துவிட்டால் போதுமானது. காரணம் ஆரம்பப் பள்ளியில் 8-வது வரையில் படித்தாலும் உயர்நிலைப் பள்ளியில் மேல்வகுப்பில் சேரப்போகும் போது பரீட்சை நடத்தி அதே வகுப்பில் சேர்ந்துகொள்ளக் கூடிய நிலைமையும் இருக்கிறது. ஆகவே 11-வது படிவம் வரையில் உள்ள உயர் நிலைப் பள்ளிகள் உள்ள ஊர்களில்—ஐந்தாவது வகுப்பு வரையில் உள்ள ஆரம்பப் பள்ளிகளை மட்டும் வைத்தால்—இருக்கும்படி செய்தால் மிகவும் சௌகரியமாக இருக்கும் என்று தெரிவித்துக்கொள்கிறேன். அதோடு உயர்நிலைப் பள்ளிகள் உள்ள பல இடங்களில் அந்தப் பள்ளிகளைச் சேர்ந்த ஹாஸ்டல் கிடையாது. வெளி ஊர்களில் இருந்து அநேகம் பிள்ளைகள் வந்து படித்துவிட்டு அன்றாடம் திரும்பித் திரும்பிச் சென்று வரவேண்டி யிருக்கிறது. ஆகையால் பாடங்களைப் படிப்பதற்கு வசதி இல்லை. ஆகவே உயர்நிலைப் பள்ளி உள்ள இடங்களில் எல்லாம் ஒவ்வொரு ஹாஸ்டலையும் ஏற்படுத்துவதற்கு திட்டமிட்டால் நன்றாக இருக்கும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

இன்னொன்று சொல்ல ஆசைப்படுகிறேன். உயர்நிலைப் பள்ளிகளில் மாண வர்களுடைய எண்ணிகைக்கு ஏற்ப அதிகமான இட வசதி செய்து கொடுப்பது இல்லை. இந்தப் பள்ளிக்கூடங்களில் இடத்தை விஸ்தரிப்பதற்கு கீற்றுக் கொட்டகையாவது போட்டுக்கொடுக்க வசதி செய்து தரப்படவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

ஆதாரப் பள்ளிகளை—இந்த ஆண்டில் 16 அதிகப்படுத்துவதாகச் சொல்லி யிருக்கிறார்கள். முக்கியமாக கிராமாந்திரங்களுக்கு இது மிகவும் உதவிகர மாக இருப்பதன் காரணமாக அதிகமான ஆதாரப்பள்ளிகளை ஏற்படுத்து வதற்கு அரசாங்கம் முன்வர வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இப்படி கல்வித்துறையில் பலவிதமான நல்ல காரியங்களைச் செய்வதற்காகக் கோரப்பட்டிருக்கும் மானியத்தை ஆதரித்து, பேசுவதற்கு அனுமதி கொடுத்த தலைவருக்கும் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

[16th March 1959

SRI S. NAGARAJA MONIGAR : கனம் தலைவர் அவர்களே, " கல்வி கரையில, கற்பவர் நாள்சில ". எல்லா சாதனங்களும் இருந்தாலேயே மனிதனுக்கு நாள் சில என்பது தெரிந்த பொருள். அப்படி இருக்க நமக்குச் சாதனங்களும் குறைவாக இருக்குமானால் கல்வி யை அடைவதில் நாம் எவ்வளவு பின் தங்கிவிடுவோம் என்று சொல்லத் தேவையில்லை. நம் அரசாங்கம் அத்தகைய குறைபாடு ஒன்றையும் வைக்கவில்லை. வெகுநாட்களாகப் பின் தங்கி இருந்துவிட்டோம். ஆகவே எவ்வளவு காலம் பின் தங்கியவர்களாக இருந்துவிட்டோமோ அதற்கு ஏற்றவகையில் இப்போது எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாக, எவ்வள வுக்கு எவ்வளவு அவசரமாக நாம் பல காரியங்களைச் செய்கிறோமோ அவ்வளவுக்கு அவ்வளவுதான் அதிகமாகவும், அவசரமாகவும் நம் மக்கள் எல்லோரும் கல்வி அறிவைப் பெறுவார்கள். ஆகவே இந்த ஆண்டில் சுமார் பதிமூன்று கோடியே அறுபது லட்சம் சொச்சம் பணத்தை இந்தத் துறைக்காக ஒதுக்கியிருப்பதானது—இதற்கு முன்னால் இருபது இருபத் தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் செலவிட்டிருப்பதோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது மிகமிக அதிகமான அளவு காரியங்களை செய்து வருகிறோம் என்பதைக் காட்டுகிறது. இந்தத் துறையில் நம் அமைச்சர் கடந்த எட்டு ஆண்டுகளாகத் தொடர்ந்து பணியாற்றிவருகிறார் என்று சொன்னால் அதைப் பாராட்டாமல் இருக்க முடியாது. எனக்கு முன்பு பேசியவர்கள் அதைப்பற்றிச் சொன்னபோது உண்மையிலேயே பெருமைப்பட்டுச் சொன்னார் களா, மனப்பொறாமையினால் சொன்னார்களா என்பது எனக்குத் தெரிய வில்லை. வருஷத்திற்கு மூன்று தடவை அதிகாரச் சக்கரம் மாற வேண்டுமென்பது அவர்கள் கருத்தோ என்னவோ தெரியாது. அடிக்கடி மாறக்கூடிய நிலைமை கல்வித் துறையில் இருப்பதானது என்ன ஆகும் என்பது நமக்குத் தெரியும். ஆகவே தொடர்ந்து எட்டாண்டுகளாக நமது அமைச்சர் அவர்கள் அத்துறையில் இருப்பது கல்வித்துறையில் சீரான வளர்ச்சியை நாம் பெற்றிருப்பதற்குக் காரணம் என்பதைப் பெருமையாகச் சொல்லிக் கொள்ளலாம்.

இத்துறையில் இன்றைக்கு ஆயிரக்கணக்கான பணம் செலவிட்டபோதிலும் கூட விலைவாசிகளின் உயர்வு காரணமாக அதிகமான தொகை வீண் விரயம் ஆவதாகக் குறிப்பிடலாம். நாம் போடுகிற திட்டங்களுக்குப் பணம் செலவாகிறதே தவிர நன்மை பொதுமக்கள் அளவு எட்டவே இல்லை என்று வாதிக்கலாம். இப்படி நல்ல மனது இல்லாமல் இந்தச் சபையில் ஜனங்களுடைய பிரதிநிதியாக வந்தவர்கள் பேசினார்கள். இதை என்ன வென்று சொல்வது ? முழுப் பூசணிக்காயை சோற்றில் மறைப்பது போலத்தான் என்றாலும்கூட இப்படி பண்பாட்டை, கலாசாரத்தை, ஒழுக்கத்தை விட்டுப் பேசுவது முறையாகுமா என்பதைச் சிந்திக்க வேண்டும். எங்கள் மாவட்டத்தில் முன்பு 700 ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் இருந்தன, இப்போது இரண்டாயிரம் ஆரம்பப்பாடசாலைகள் , வைத்திருக் கிறார்களே என்று சொன்னால் இப்படி எண்ணிக்கை பெருகிப்பயனில்லை என்று சொல்கிறார்கள். ஆனால் இன்றையதினம் எத்தனை பள்ளிகள் ஏற் பட்டிருக்கின்றன. எத்தனை அதிகமான மாணவர்கள் படிக்கிறார்கள் என் பதையெல்லாம் கொஞ்சங் கூட கவனித்துப் பார்க்காமல் உண்மைக்கு மாறாக, வள்ளுவரைச் சொல்லி, நேர்மை, பண்பு, நியாயம் என்பதாக தாராளமாகப் பேசுவது மனதிற்குக் கஷ்டமாக இருக்கிறது.

இன்றைக்குப் பல பள்ளிக்கூடங்கள் ஏற்பட்டிருக்கின்றன. பைலட் ப்ரா ஜெக்ட் போட்டு கல்வி அபிவிருத்தி மகாநாடுகள் கூட்டி நல்லமுறையில் முன்னேற்றத்தை எடுத்துக் காட்டி—உங்களுக்கு எடுத்துச் சொல்வதற்காக இல்லாவிட்டாலும்—இந்த நாட்டின் முன்னேற்றத்திற்கு, எல்லோரும் இத்து றையில் எவ்வளவு ஒற்றுமையாக வேலைசெய்கிறோமோ அந்த அளவுக்கு அதிகமான முன்னேற்றம் உண்டாகும் என்பதை விளக்கியும் வருகிறார்கள். அந்த அந்த மாவட்டங்களில் லட்சக்கணக்கான பணம் அந்த நேரத்தி லேயே வசூலாகிக்கொண்டிருக்கிறது. அமைச்சர் அவர்களும், கல்வி இலாகா டைரெக்டரும் காட்டி வருகிற ஊக்கம் பலருக்கு ஊக்கத்தை உண் டாக்கக் கூடியதாக இருந்து வருகிறது. நான் கூட அரிசிப்பிச்சை எடுத் திருக்கிறேன். இப்படி இருக்கிற நிலையில் ஆசிரியர்களிடத்திலே அந்தப்

16th March 1959] [Sri S. Nagaraja Monigar]

பொறுப்பை ஒப்படைக்கவில்லையே, அவர்களிடத்தில் அவநம்பிக்கையா என்கிற இல்லாத புதுப்பிரச்சினையை உண்டாக்குவது இத்திட்டம் வெற்றி கரமாக நடக்கிறதே என்கிற மனப் புழுக்கம் தான் காரணமாக இருக்க முடியும். திட்டம் புதிது. இரண்டொரு ஆண்டுகள் போகட்டுமே. வேண்டு மானுல் பின்னுல் இந்தப் பொறுப்பை ஆசிரியர்களிடத்திலே ஒப்படைக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம். இன்றைக்கு ஆசிரியர்களுடைய சம் பளத்தையும் உயர்த்தியிருக்கிருர்கள். அவர்களுக்கு பென்ஷன் முறை இருக்கிறது. இன்னென்று, ஆசிரியர்கள் கோபித்துக்கொண்டாலும் சரி, கல்வி அமைச்சர் அவர்களும் மற்றவர்களும் நான் இப்படிச் சொல்வதை விரும்பாவிட்டாலும் கூட இன்றைக்கு அதிகமான ஓய்வு ஆசிரியர்களுக்கு இருக்கிறது. கல்லூரி ஆசிரியர்கள் என்ருல் மூன்று மாதம், உயர்நிலைப் பள்ளிகளில் 2 மாதம் ஓய்வு கிடைக்கிறது. வேறு சர்க்கார் சிப்பந்திகள் யாருக்கும்—காலை எட்டு மணி முதல் இ வு எட்டு மணி வரையில்வேலை செய்யக்கூடிய நிலைமை இருக்கிறதே தவிர ஓய்வு இல்லை. இப்படி இருக்கும் போது இவர்களுடைய பெருந்தன்மையையும் நாம் குறைத்து விடாது ஆசிரியர்களுக்கு வேண்டிய பலவசதிகளைச் செய்து கொடுத்து வருகிறோம். பெண் ஆசிரியர்களுக்கு வீடு கட்டும் திட்டத்தைக்கொண்டு வந்திருக்கிறோம். இப்படிப் பல காரியங்களைச் செய்து வரும்போது ஆசிரி யர்களை நாம் அலட்சியப்படுத்துவது போன்று இங்கே பேசுவது சரி யாகாது. மகாத்மா காந்தியின் தலைமையில் உலகம் எல்லாம் கண்டு வியக்கும்படி அகிம்சா முறையில் போராடி, இன்றைக்கும் பஞ்ச சீலக் கொள்கையை வகுத்துக்கொண்டு உலகத்திற்கு, வழிகாட்டியாக நாம் இருந்துகொண்டிருக்கும்போது—நமது பழம்பெருமை கலாசாரம், பண்பு எல்லாவற்றையும் உதறிவிடுகிற நிலைமையில்—கல்வித்துறையில் பின்தங்கி இருக்கும் நிலையைப்போக்க அரசாங்கம் எல்லாவிதமான நடவடிக்கை களையும் மேற்கொண்டு இயங்கிவரும்போதே நாம் உண்மைக்கு மாருகப் பேசுவது சரியாகாது.

அப்படி இருக்கின்றபோது பள்ளிக்கூட சம்பளங்கள் குறைத்துக் கொடுக்கப்படுகின்றன. ஆரம்பப் பள்ளிகளைப் பொறுத்தவரை பெற்றோர்களிட மிருந்து ஒரு அணு இரண்டு, அணு வாங்கப்படுகிறது. தவிர இப்பொழுது பள்ளிக்கூடங்களில் புஸ்தகங்களை மிகவும் அதிகமாக்கியிருக்கிருர்கள். இந்தப் பள்ளிக்கூட கட்டடங்களை எடுத்துக் கொண்டால் மிகவும் மோசமான நிலையில் இருக்கின்றன. இதைப்பற்றிச்சொன்னுல் எல்லாம் ஆல மரத் தடியில் இருந்து பள்ளி நடத்தலாம் என்று சொல்லுகிருர்கள். தர்ம புரியில்கூட பள்ளிக்கூடம் மூடப்பட்டது. அந்தப்பள்ளிக்கூடக் கட்டடத்தை சீர்ப்படுத்த மறுபடியும் திறக்கும்படி சர்க்காரைக் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த விஷயத்தில் பொதுமக்கள் பணஉதவி செய்ய முன்வருவார்கள் என்று நான் சர்க்காருக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அதைத் தவிர கல்வித் தரத்தை சொல்லக்கூடிய காலத்தில் "நான் அந்தகாலத்திலே படிக்கும்போது அந்தக் கல்வி உயர்ந்தது இப்பொழுது தரம் குறைந்து விட்டது" என்று சொல்லிக்கொள்வார்கள். ஆனுல் இப்பொழுது கொடுக்கப் படுகின்ற கேள்வி போன்ற விஷயத்தை எல்லாம் சரிப்படுத்தி அதைத் தக்க முறையில் அமைக்கவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்ளு கிறேன்.

அடுத்தபடியாக ஆங்கிலத்தை திடீரென்று ஒழித்துவிட முடியாது. அது சரியல்ல சற்று தாமதித்துதான் செய்யவேண்டும். அதேமாதிரியாக இந்தியையும் திடீரென்று புகுத்திவிடமுடியாது. இந்தியா முழுதும் ஒரு பொதுபாஷை என்ற முறையில் குழந்தைகள் மூன்று பாஷை படிக்க வேண்டுமென்று சொல்வது சரியல்ல. பள்ளிக்கூடங்களில் ஆங்கிலமும் தமிழும் இருக்கவேண்டும். எப்பொழுதும் நமது ராஜ்யம் நமது நாட்டின் ஒரு பகுதி என்ற கருத்தையும் ஒழுக்கத்தையும் பிள்ளைகளுக்கு போதிக்க வேண்டுமென்று சொல்லவிரும்புகிறேன். அரசியல் சட்டத்தின் கீழ் பிர மாணம் எடுத்துக்கொண்டு அதே சட்டசபையில் உடனடியாக ஒழிக்க வேண்டுமென்று சொல்வது அவ்வளவு சரியல்ல என்று சொல்லவிரும்பு கிறேன். அதற்கு அனுமதி கொடுக்கவில்லை.

[Sri S. Nagaraja Monigar] [16th March 1959

மானேஜ்மெண்ட் பள்ளிக்கூடங்களைப்பற்றி ஒருசில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இப்பொழுது 250 பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. சமீபத்தில் அவர்களுக்கு அசிஸ்டெண்ட் கொடுத்திருக்கிறார்கள். அப்படி கொடுத்தும் அவர்களுக்கு இன்னும் வேலை அதிகமாக இருக்கிறது. ஆகவே இன்னும் ஆசிரியர்களை அதிகமாக்குவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ள விரும்புகிறேன். மேலும் அங்கே ஒரு டெபுடி இன்ஸ்பெக்டரைப் போட்டால் நலமாக இருக்கும்.

அடுத்தபடியாக கிருஷ்ணகிரி தாலுக்காவில் பல பள்ளிக்கூடங்கள் மூடப்பட்டிருக்கின்றன. ஒரு தெலுங்கு பள்ளிக்கூடம் கூட மூடப்பட்டிருக்கிறது. அந்தப் பள்ளிக்கூடத்தை திரும்பவும் திறப்பதற்கு சர்க்கார் முயற்சி எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI K. RAMACHANDRAN : தலைவர் அவர்களே, இந்தக் கல்வி மானியத்தில் $13\frac{1}{2}$ கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பதைக் குறித்து நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். இதிலே இந்த ஆரம்பக்கல்வியைப் பொறுத்தவரையில் $6\frac{1}{2}$ கோடி ரூபாய் சர்க்கார் ஒதுக்கியிருக்கிறார்கள். ஆரம்பக் கல்வி ஆசிரியர்களின் சம்பளத்தை உயர்த்தினால்தான் அவர்களின் தரம் உயர்ந்திருக்கும். மத்தியான உணவைப்பற்றி பள்ளிக்கூடங்களில் செய்திருக்கும் ஏற்பாடு மிகவும் பாராட்டத்தக்கது. கட்டாயக்கல்வி 1960-வது வருஷத்திலே வருவதாக குறிப்பிடப்பட்டிருந்தது. அரசாங்கம் கொடுத்த வெள்ளையறிக்கையிலும் கட்டாயக்கல்வியை 7வது வகுப்பு வரையிலும் புகுத்த முடியும் என்று குறிப்பிடப்பட்டிருந்தது. இதைப் பூராவும் இந்த ஆரம்பக் கல்விக்காக செலவழிக்கும்போது இந்தக் கட்டாயக் கல்வியை ஏழாவது வகுப்புவரை விஸ்தரிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

பஞ்சாயத்தின் கீழ் இந்தக் கல்வி நிர்வாகத்தை ஒப்படைத்திருப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது. அப்படியில்லாமல் சமுதாய நலதிட்டத்தின் கீழ் இந்த ஆரம்பக்கல்வியைப் புகுத்திவிட்டால் எந்தவிதமான நஷ்டமும் இல்லை என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். சர்க்கார் இந்த விஷயத்தில் ஆலோசனை செய்து அதை மாற்றி அமைக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அடுத்தபடியாக நம் ஆதாரக்கல்வியை எடுத்துக்கொண்டால் ஆதாரக்கல்வி பள்ளிக்கூடங்களிலே நூல் நூற்புத்தொழில் பல இடங்களிலே புகுத்தமுடியவில்லை. காரணம் அதற்குச் போதிய பஞ்சு கிடைப்பதில்லை. பல தொழில்களை புகுத்த முடியவில்லை.

அடுத்தபடியாக, ஸ்கூல் இம்ப்ரூவ்மெண்ட் கான்பெரென்ஸ் சம்பந்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. நாம் 6,55,00,000 ரூபாய் ஆதாரக் கல்விக்காக எலிமெண்டரி எஜுகேஷனுக்காகச் செலவழித்தாலும் இந்தத் திட்டத்தின் மூலம் இன்று நடந்திருக்கும் திட்டங்களையெல்லாம் பார்த்தால் கிட்டத்தட்ட 1 கோடியே 65 லட்ச ரூபாய்க்கு அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது என்ற குறிப்பு நம் கையில் இருக்கிறது. இது உண்மையிலேயே பாராட்டத்தக்க விஷயம்தான். இதைப் பொறுத்தவரையில், எனக்கு முன்பு பேசிய ஸ்ரீ. அன்பழகன், ஆசிரியர்கள் பிச்சை எடுக்க வேண்டிய நிலைமை இன்று ஏற்படுத்தப்பட்டிருக்கிறது என்று சொன்னார். நான் அவர் கூறியதை ஒத்துக்கொள்ளவில்லை. உண்மையிலேயே ஆசிரியர்கள் பொது மக்களுடன் சேர்ந்துபழகக்கூடிய பண்பை நிலைநாட்டுவதற்கான வழிவகைகளை வகுப்பதற்கு நல்ல சந்தர்ப்பம் இதனால் ஏற்பட்டிருக்கிறது என்பது குறித்து சந்தோஷப்படுகிறேன். ஒரு கூட்டத்தைப் பார்க்கக்கூடிய சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது. இது அவசியமான திட்டம். ஆனால் இதில் கொஞ்சம் அதிகார வர்க்கத்தின் நெளி தென்படுகிறது. நான் ஒரு வட்டாரக் கூட்டத்திற்குச் சென்றிருந்தேன். அந்தக் கூட்டத்தைப் பொறுத்தவரையிலும் அந்தப் பகுதி சட்டசபை மெம்பர்களை அவர்கள் கலந்தாலோசிக்கவில்லை. ஒருவேளை என் தொகுதியில்தான் அந்த மாதிரி நடந்ததோ என்னமோ, தெரியவில்லை. எனக்கு எந்த விதமான தகவலும் முன்கூட்டி வரவில்லை. கடைசி நேரத்தில், கூட்டத்திற்குவரும்படி என்னைக் கூப்பிட்டார்கள். நானும் கூட்டத்திற்குப் போனேன். எதிர்க் கட்சிகளைச் சார்ந்த அங்கத்தினர்களைப் பொறுத்தவரையில்தான் இவ்வாறு செய்யப்படுகிறதா அல்லது எல்லோருக்குமே இம்மாதிரியான நிலைமைதானா

16th March 1959] [Sri K. Ramachandran]

என்று அறிய விரும்புகிறேன். இம்மாதிரியான சீர்திருத்தங்கள் நடக்கும் இடங்களிலெல்லாம் மற்றவர்களேயும் கலந்துகொண்டால் நல்லது என்று நினைக்கிறேன். பள்ளிக்கூடங்கள் அபிவிருத்தி அடையவேண்டும், பிள்ளைகள் நன்றாக வாசிக்கவேண்டும் என்பதைப் பொறுத்தவரையில் யாருக்கும் கருத்து வேறுபாடு இருக்காது. எனவே எல்லோரையும் கலந்தாலோசிக்கவேண்டும். இத்திட்டம் நல்ல திட்டம். ஆனல் மக்களின் ஒத்துழைப்பு அதிகமாகக் கிடைக்கக்கூடிய விதத்தில் திட்டம் வகுக்கப்படவில்லை. மக்களின் ஒத்துழைப்பு இன்னும் அதிகமாகக் கிடைக்கக்கூடிய விதத்தில் இதை வகுத்திருக்கலாம். உபாத்தியாயர்கள் பிரம்மாண்டமான சாமான்களை வாங்கிக் கொண்டு வந்தார்கள். மற்றவர்களின் ஒத்துழைப்பு இல்லாமல் அவர்களாகவே இவ்வளவு செய்திருந்ததைப் பாராட்டத்தான் வேண்டும். பரமக்குடி வட்டாரத்தைப் பொறுத்த வரையில் உபாத்தியாயர்களின் கான்பெரென்ஸ் அங்கே நடந்தது, அதாவது அது பரமக்குடியில் நடக்கவில்லை. காரணம், இந்த வட்டாரத்திலேயே அதற்கு இடம் கிடைக்கவில்லை என்று சொன்னார்கள். இது ஆச்சரியமாக இருக்கிறது. உண்மையிலேயே, மற்றப் பிரதிநிதிகளைக் கலந்தாலோசித்திருந்தால் அந்த வட்டாரத்திலேயே இடம் கிடைத்திருக்கும், உபாத்தியாயர்கள் வண்டிகளைக் கட்டிக்கொண்டும் சாமான்களை எடுத்துக்கொண்டும் 20–25 மைல் தூரம் வந்திருக்க வேண்டாம். ஸ்கூல் இம்ப்ரூவ்மெண்ட் கான்பெரென்ஸில் சட்டசபை அங்கத்தினர்களும் மற்றப் பிரதிநிதிகளும் கலந்துகொள்வதற்கு வகை செய்ய வேண்டும். இந்த கான்பெரென்ஸ் நடத்துவது நமது மாநிலத்திலேயே சிறந்த திட்டம்.

அடுத்தபடியாக கம்பல்ஸரி எஜுகேஷனைப் பற்றிப் பேச விரும்புகிறேன். ப்ளாக் டெவலப்மெண்ட் பிரதேசங்களில் ட்ரைவ்கள் நடத்தப்படுகின்றன. 1959–60-ல் ஜூன் மாதத்தில் ஒரு ட்ரைவ் நடத்தலாம். அதற்கு வேண்டிய சிப்பந்திகள் ப்ளாக் டெவலப்மெண்ட் பிரதேசத்தில் இருக்கிறார்கள்.

மத்தியான உணவுத் திட்டம் பல இடங்களில் சரியாக நடக்கவில்லை என்று சொன்னல் கனம் அமைச்சர் கோபப்படுவார். அருமையான திட்டம். இதற்கு மக்களும் "காண்ட்ரிப்யூஷன்" கொடுக்கிறார்கள். ஆனல் இது நடைமுறையில் சரியாக நடக்கவில்லை. அதிகாரிகளும் மந்திரிகளும் வரும்போது நன்றாக நடத்துகிறார்கள். பிறகு சரியாக நடத்துவதில்லை. ஒருசில பள்ளிக்கூடங்கள்தான் எப்போதும் நன்றாக நடத்துகின்றன. நான் பார்த்தவரையில் கிராமங்களிலும் சரி, நகரங்களிலும் சரி இத் திட்டம் சரிவர நடப்பதில்லை. பசியால் வாடும் ஏழைக் குழந்தைகளுக்காக நடத்தப்படுவது இத் திட்டம். இதைத் சீர்திருத்த ஆவன செய்யவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

**Sri S. NAGARAJA MONIGAR** : இத் திட்டம் நன்றாக நடக்க வேண்டுமென்று விரும்பிய கனம் அங்கத்தினர் இது நன்றாக நடப்பதற்கு சர்க்காரின் உதவியை எதிர்பார்க்கிறார். நாம் செய்ய வேண்டிய காரியங்களைச் செய்துவிட்டோமா என்று கனம் அங்கத்தினரைக் கேட்கிறேன்.

**Sri A. VEDARATHNAM** : மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, இந்தக் கல்வி மானியக் கோரிக்கையை முழுமனதோடு ஆதரிக்கும் முகத்தான் சில வார்த்தைகள் கூறவிரும்புகிறேன். "இனி ஒரு விதி செய்வோம், அதை எந்த நாளும் காப்போம்" என்று பாரதியார் சொன்னார். அதற்கிணங்க நமது அரசியல் நிர்ணய சபை, இந்த நாட்டில் 1960-ம் ஆண்டிற்குள் கல்வி அறிவு இல்லாதவர்களே இல்லாது செய்துவிட வேண்டுமென்று திட்டமிட்டிருந்தது. அவ்விஷயம் நீங்கலாக மற்ற எத்தனையோ விஷயங்களில் வகுத்த திட்டத்தை திட்ட காலத்திற்கு முன்பே நிறைவேற்றிய நாம் இந்தக் கல்வி விஷயத்தில் மாத்திரம் குறித்த காலத்திற்குள் திட்டத்தை நிறைவேற்றத் தவறிவிட்டோம். ஆனல் இன்று காலையில் இவ்விஷயமாக நமது கனம் கல்வி அமைச்சர் கூறிய பதில் நமக்கு ஓரளவு திருப்தி அளிப்பதாக இருக்கிறது. இத் திட்டத்தை 1960-ம் வருஷத்திற்குள் நிறைவேற்ற முடியாது போய்விட்டாலும் கூட, 1965-ம் வருஷத்திற்குள் நிறைவேற்றுவதற்காக கட்டாய ஆரம்பக் கல்வித்

[Sri A. Vedarathnam] [16th March 1959

திட்டம் அமலுக்குக் கொண்டுவரப்படும் என்று அவர் கூறினார். இது பெரு மகிழ்ச்சியை அளிக்கிறது. இதை தவருமல் நிறைவேற்ற வேண்டு மானல் திட்டவட்டமான நடவடிக்கை எடுக்க வேண்டும். இப்போது எல்லாப்பயிற்சிப் பள்ளிகளேயும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத் திற்குள் ஆதாரப்பயிற்சிப் பள்ளிகளாக மாற்றுவதற்கு திட்டவட்டமாகத் திட்டமிட்டு அதன்படி எவ்வாறு தவருமல் நடத்தி வந்திருக்கிருேமோ அவ்வாறே இந்த விஷயத்திலும் திட்டமிட்டுச் செயலாற்ற வேண்டும். 1965-ம் ஆண்டுக்குள் முடிக்க வேண்டுமானல் வேலேகளே ஆறு பங்காகப் பிரிக்க வேண்டும், ஆறு வருடங்களுக்குப் பிரிக்க வேண்டும். ஏனென்றல் இப்போதிருந்து ஆறு வருடங்களில் 1965-ம் வருடம் வந்துவிடும். எனவே ஆரம்பக் கல்வித் திட்டத்தை ஒவ்வொரு ஜில்லாவைப் பொறுத்த வரையிலும் ஆறு பகுதிகளாகப் பிரித்து ஒவ்வொரு வருடத்திலும் ஒரு பகுதியை நிறைவேற்ற வேண்டும். அவ்வாறு செய்தால்தான் 1965-ம் வருடத்திற்குள் இத்திட்டத்தை நிறைவேற்ற முடியும். இல்லாவிட்டால் 1965-க்குப் பிறகு இன்னும் 5 வருட காலத்திற்கு திட்டத்தைத் தள்ளிப் போட வேண்டியிருக்கும். இலங்கை போன்ற நாடுகளில்கூட எழுத்தறி வற்றவர்களே இல்லாமல் செய்திருக்கிருர்கள். நம் நாடு பெரிய நாடு, ஜனத்தொகையிலும் பெரிய நாடு, வறுமையில் முதல் பரிசு பெறத்தக்க நாடு. சுதந்திரமடைந்துள்ள இந்த நாடு இந்த ஐந்து ஆண்டுகளுக்குள்ளா வது நாட்டில் எல்லோரும் கல்வியறிவு உடையவர்களாக இருக்கும்படி செய்ய வேண்டும். அது இந்த நாட்டு அரசாங்கத்தின் தலேயாய கடமை. கட்டாயக் கல்விமுறையைக் கொண்டுவரும்போது, இப்போதைய கல்வி முறைப்படி கட்டாயக் கல்வியைப் புகுத்தி அதற்குப் பிறகு அதே கல்வியை பிற்காலத்தில் ஆதாரக் கல்வியாக மாற்றுவதைக் காட்டிலும் ஆரம்பிக்கும் போதே ஆதாரக் கல்வியாகத் துவக்கிவிடலாம். அவ்வாறு செய்தால் பிற்காலத்தில் அதை ஆதாரக் கல்வியாக மாற்ற வேண்டிய, ஆதாரக் கல்வி முறைக்குக் கொண்டுவர வேண்டிய, சிரமம் இருக்காது என்றும் சொல்ல விரும்புகிறேன்.

ஏனெனில் நம் நாட்டில் மாத்திரமல்ல, அகில இந்தியா முழுவதும் நமது எதிர்காலத் கல்வித்திட்டம் ஆதாரக் கல்வி என்று வந்த பிறகு நாம் இன்னும் பழைய முறையை, புதிதாகத் துவங்கும் பள்ளிக்கூடங்களில் புகுத்தினல் அது நமது லட்சியத்தை அடைவதற்கு உபயோகமாக இருக் காது என்பதை நான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். ஆதாரக் கல்வி யைப் பற்றி நான் ஒன்றிரண்டு வார்த்தைகள் கூற விரும்புகிறேன். ஆதாரக் கல்வியைப் பற்றி குறை கூறும்போது, ஆரம்பப் பள்ளியில் அது திருப்திகரமாக, எதிர்பார்த்தளவு நல்லமுறையில் நடைபெறவில்லே என்ற குறை இருக்கத்தான் இருக்கிறது. அதில் ஓரளவு உண்மையிருக்கிறது என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆகவே, ஆரம்ப பள்ளிகளில் ஆதாரக் கல்வி முறையில் நல்ல பயிற்சி கொடுப்பதற்கு வேண்டிய வகைகள் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஆகவே, கல்வி இலாகா இதில் கொஞ்சம் கூடுதல் கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நமது கல்வி இலாகா டைரக்டர் அவர்கள் தொழில் மூலம் கல்வியைப் பெறும் காலத்தில் அவர்கள் செய்யும் தொழில், சுயதேவை அடிப்படையில் அந்த லட்சியத்தை அடையவேண்டு மென்பதற்காக குறைந்த பட்ச அளவு வருமானம் எவ்வளவு இருக்க வேண்டுமென்று ஒரு திட்டம் வகுத்திருக்கிருர்கள். முதல் வகுப்பில் ஒரு மாணவன் மாதம் ஒரு அணுவாவது பெற வேண்டும், எட்டாவது வகுப்பை அடையும்போது மூன்று ரூபாயாக இருக்கவேண்டுமென்று திட்டத்தில் கூறப் பட்டிருக்கிறது. சராசரி ஒரு மாணவனுக்கு மாதம் ஒரு ரூபாய் வருகிறது என்றிருந்தால் அந்த வகுப்பில் 30 மாணவர்கள் படிக் கிருர்கள் என்றல் மாதம் 30 ரூபாய் வருமானம் வருகிறது, மாணவர் களிடமிருந்து. அப்படி மாணவர்கள் கல்வி பெறும்போதே தொழில் மூலம் இந்த வருமானத்தை அடைய முடிகிறது. இதுதான் ஆதாரக் கல்வியிலுள்ள ஒரு சிறந்த அம்சம். மற்றவர்களின் தயவை எதிர் பார்க்காமல் தானே தன் காலில் நிற்க முடிகிறது. இதுதான் இதிலுள்ள ஒரு சிறந்த அம்சம். உலகத்தில் எந்த நாட்டுக் கல்வித் திட்டத்திலும் இல்லாத ஒரு சிறந்த அம்சம் இந்த ஆதாரக் கல்வித்

11 a.m.

திட்டத்தில் இருக்கிறது. இதைக் குறை கூறுகிறவர்களுக்கு நான் ஒரு சான்று கூற முடியும். மேலே நாட்டார் இதைப் பாராட்டிப் பேசியிருக்கிறார்கள் என்று சொல்வதில், மேல் நாட்டார் சொல்லிவிட்டால் அது சிறப்பாகத்தான் இருக்கும் என்ற பெருமையை நான் அவர்களுக்கு கொடுக்க தயாராயில்லை. மஹாத்மா காந்தியடிகள் எவ்வளவு அடக்கம் உள்ளவர் என்பதைப் பற்றி நான் இங்கு சொல்லித் தெரிய வேண்டியதில்லை. ஆனால் அவர் கூறியிருக்கும் ஒரு வாசகத்தினால் இந்த ஆதாரக் கல்வியின் சிறப்பை புரிந்து கொள்ள முடியும். காந்தியடிகள் எவ்வளவோ மகத்தான காரியங்களை செய்திருந்தபோதிலும் கூட, தனக்கு திருப்தியளிக்கும் ஒரு காரியத்தை இந்த நாட்டில் செய்திருக்கிறார்கள் என்றால், அது எது என்று அவர்கள் குறிப்பிடுகிறார்கள் என்று கேட்டால், இந்த நாட்டில் ஆதாரக் கல்வி முறையைப் புகுத்தியதைத் தான் இந்த நாட்டிற்கு சுதந்திரம் தேடித்தந்ததைவிட ஒரு சிறந்த தொண்டாக நான் கருதுகிறேன் என்று மஹாத்மா அவர்களே கூறியிருக்கிறார்கள். ஆகவே, இந்த ஆதாரக் கல்வித் திட்டத்தைப் பற்றி குறை கூறுகிறவர்களுக்கு நான் பதில் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. இந்த கல்வித் திட்டம் பிற மாகாணங்களை விட நமது மாகாணத்தில் நன்கு, சிறந்த முறையில் நடக்கிறது என்று இருந்தபோதிலும்கூட அதைக்கண்டு நாம் திருப்தி அடைந்துவிடுவதற்கில்லை. அது எந்தளவு நன்கு நடக்க வேண்டுமோ அந்தளவு நடப்பதற்கு நாம் போதிய ஊக்கம் செலுத்த வேண்டும். எந்தளவு பயிற்சிப் பள்ளிகளில் நாம் இந்த ஐந்து ஆண்டுகளில் ஒரு முன்னேற்றக் கட்டத்தை எட்டிப் பிடித்திருக்கிறோமோ அந்தளவு ஆரம்பப் பள்ளிகளில் ஆதாரக் கல்விமுறை பரப்பப்படவில்லை. ஆகவே, இதில் கல்வி இலாகா மேலும் அதிக கவனம் செலுத்த கடமைப்பட்டிருக்கிறது. அதுவும் கூட விரைவில் செய்தாக வேண்டும். இந்த நாட்டிலிருக்கும் நூற்றுக்கு நூறு பேரும் எழுத்தறிவு பெற்றவர்களாக விளங்கவேண்டுமென்ற லட்சியத்தை நாம் வைத்துக்கொண்டிருக்கும்போது பழையமுறையில் கல்வியைப் புகட்டுவது என்பதை நாம் பெருக்கிக் கொண்டு போனால் இன்றுள்ள வேலையில்லாத் திண்டாட்டம் என்ற பூதம் நம்மையே விழுங்கிவிடக்கூடும் என்பதில் யாருக்கும் ஒருவித ஐயமும் இருக்க முடியாது. எம்ளாய்மெண்ட் எக்ஸ்சேன்சில் போய் பார்த்தால், இரண்டு மூன்று வருடங்களாக அப்ளிக்கேஷன்ஸ்-ஐ புதுப்பித்துக் கொண்டிருக்கும் பேர்கள் மூன்று, நான்கு டிஜிட்களுக்கு மேல் இருப்பதைப் பார்க்க முடியும். அப்படி வேலையில்லாத் திண்டாட்டம் நம் நாட்டில் பெருகியிருக்கும்போது, நாம் பழைய முறைக் கல்வியை மேலும் கையாண்டுகொண்டிருந்தால் அதைவிட வேறு ஒரு தீமை நமக்கு வேண்டியதில்லை. ஆகவே, அந்நிலை ஏற்படாமல் இருக்க ஆதாரக் கல்வியைத் தவிர வேறு ஒன்றுமே கிடையாது; என்பதை நான் இங்கு வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். இப்பொழுது கிராமத்திலுள்ள, ஒரு கிராமவாசி தான் சம்பாதிக்கிற நாலு அணாவை விட அதே குடும்பத்தில் உள்ள கல்வி பயின்ற ஒருவன் நாலேகால் அணா இன்று சம்பாதிப்பதற்கு பழைய கல்வி முறை அவனுக்கு உபகாரப்படுவதில்லை. நாலு அணாகூட சம்பாதிக்கமுடியாது சக்தியற்ற நிலையில்தான் கொண்டு விடுகிறது, விவசாயக் குடும்பத்தில் கல்வி பயின்றிருக்கும் ஒருவனது நிலை. ஆகவே பழைய கல்வி முறையை இன்னும் விருத்தி செய்துகொண்டு, அதை கட்டாயமாக்கினால் அது இந்த மாகாணத்திற்கு கெடுதலைத்தான் உண்டுபண்ணும்.

ஒன்றிரண்டு முக்கியமான விஷயங்களைப் பற்றி மட்டும் சொல்லிக் கொண்டு முடித்து விடுகிறேன். ஆரம்பக் கல்வியை ஆதாரக் கல்வியாக மாற்ற வேண்டும். ஹைஸ்கூலில் எட்டாவது வகுப்பு வரை சீனியர் பேஸிக்காக மாற்றவேண்டுமென்று திட்டமிருக்கிறது, ஆனால் அது இன்னும் அமுலுக்குவரவில்லை. அதை அமுலுக்குக் கொண்டு வர வேண்டும். பி. டி. ஆசியர்களின் பற்றுக்குறை இருப்பதால் ஒவ்வொரு பி.டி. கல்லூரியிலும் ஆதாரக் கல்வியை ஆப்ஷனல் சப்ஜெக்டாக பயில்வதற்கு இடம் கொடுக்கப்படவேண்டும். ஒரத்தநாட்டில், பீ.டி. கல்லூரியில் அங்குள்ள மாணவர்களுக்கு ஸ்டைபண்ட் கொடுக்க வேண்டும், விவசாயம் கற்றுக்கொள்ள நிலம் இல்லை, ஆகவே அதற்கு உடனடியாக நிலம் கொடுக்கவேண்டும், அங்கு கட்டிடங்கள் இல்லை, அதற்கு கட்டிடங்கள்

கட்டிக் கொடுக்கவேண்டும். அடுத்தபடியாக, கல்வி இலாகா டைரக்டர் அவர்கள் பல கூட்டங்களில் பேசி வந்திருக்கிறார்கள், ஹைஸ்கூல்களில் இப்பொழுது இருக்கும் செலக்ஷன் எக்ஸ்ஸாமினேஷனை ஒழித்துவிடப் போவதாக. அதை இந்த வருடத்திலிருந்தே, என் இப்பொழுதிருந்தே ஒழித்துவிட்டால் நன்றாயிருக்கும். செலக்ஷனில் செலக்ட் செய்வர்களில் 50 சதவீதம் கூட தேறுவதில்லை. செலக்ஷன் கிடைக்காமல் இருப்பவர்களுக்கு ஒரு பரீட்சை வைத்தால் அதில் 10 சதவீதம் ஆவது தேறுபவர்கள் இல்லையென்று சொல்ல முடியாது. ஆகவே, செலக்ஷன் எக்ஸ்ஸாமினேஷனை உடனடியாக நீக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இன்னும் பேசுவதற்கு எவ்வளவோ விஷயங்கள் இருந்தபோதிலும்கூட அவகாசம் இல்லாத காரணத்தினால் இந்தியைப் பற்றி மட்டும் ஒரு வார்த்தை கூறிக்கொண்டு முடித்துவிடுகிறேன். பேரறிஞர் அன்பழகன் அவர்கள் தன் கட்சிக் கொள்கைக்காக பேசியிருப்பார்கள் என்று நினைக்கிறேன்; எப்படியிருந்தபோதிலும் கட்சிக் கொள்கையை வைத்துக்கொண்டு பார்த்தாலும்கூட, அவர்களின் திராவிட நாட்டின் எல்லைக்குள் இருக்கிற கேரளம், ஆந்திரா, மைசூர் இந்தப் பகுதிகளில் இந்தியை கட்டாய பாடமாக்கியிருப்பதோடு மட்டுமில்லாமல், மைசூரை எடுத்துக்கொண்டால் அங்குள்ள அரசாங்க உத்தியோகஸ்தர்கள் எல்லோரும் " மத்தியமா " வாவது தேறினால் ஒழிய சர்க்கார் உத்தியோகம் கிடையாது என்று சொல்லும் அளவிற்கு இந்தியை துரிதமாக நடத்திப்போகிறபோது நமது தமிழ் நாட்டில் மட்டும் இந்தி விஷயத்தில் பின்தங்கியிருந்தால் இன்று தாங்கள் கூறுகிற திராவிட நாட்டின் எல்லைக்குள்ளேயே இந்த வித்தியாசம் இருக்கலாமா என்று அவர்கள் உன்னிப்பார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இந்தி வேண்டாமென்று கட்சிக்கொள்கை காரணமாக சொன்னபோதிலும், ஒரு காலத்தில் நாம் படிக்கவேண்டிய காலத்தில் இந்தி படிக்காமல் விட்டு விட்டோமே என்று அழுது கண்ணீர் வடிக்கிற நிலை வந்தே தீரும். அந்தப் பாவத்திற்கு இவர்கள் ஆளாகாமல் இருக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, எனது அவகாசம் முடிந்து விட்ட காரணத்தினால் இந்த கல்வி மான்யக் கோரிக்கையை முழு மனதோடு நான் ஆதரித்துக்கொண்டு எனது பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

* SRIMATHI **KOLANTHAI AMMAL** : தலைவர் அவர்களே, இன்று இந்த அவையில் நிதியமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கிற கல்வி மான்யத்தை ஆதரித்து ஒரு சில கருத்துக்களை நான் சொல்ல விரும்புகிறேன். இன்று நம் நாட்டில், நாம் சுதந்திரம் அடைந்து குறைந்த ஆண்டுகளானாலும் உண்மையிலேயே எல்லாத் துறைகளிலும் நாம் நல்ல முன்னேற்றத்தைக் கண்டிருக்கிறோம். கல்வித் துறையிலும் நாம் நல்ல முன்னேற்றத்தைக் கண்டிருக்கிறோம். அதற்குக் காரணம், நாம் திட்டம் போட்டு செய்கிற வேலைகள் என்ன என்பதைக் குறிப்பிட்டுக் கொண்டு ஐந்தாண்டுத் திட்டத்தில் ஓரளவு நல்ல முன்னேற்றம் பெற்றிருக்கிறோம். இப்பொழுது குறிப்பிட்ட முன்னேற்றத்தை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பெற முடியாவிட்டாலும் 1965-ம் ஆண்டிற்குள் நாடு முழுவதும் கட்டாயமாக எல்லோரும் எழுத்தறிவு படைத்தவர்களாக விளங்க வேண்டுமென்று திட்டம் வெற்றி பெறுவதற்கு நாம் அனைவரும் ஒத்துழைக்க வேண்டுமென்ற முறையில் குறிப்பிடப் பட்டிருப்பதை பாராட்டுவதோடு கூட, எனக்கு முன் பேசிய எதிர்க்கட்சி அங்கத்தினர் ஒருவர் குறிப்பிட்டதொரு கருத்து பற்றி நான் எனது கருத்தைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

எனக்கு முன்பு எதிர்க்கட்சியிலே பேசிய ஒருவர் ஏதோ ஒரு திட்டத்தைப் போட்டு முன்னேறிவிட்டதாக பாராட்டிக்கொள்ளுகிறார்கள், ஆங்கிலேயர் காலத்தில் நம் நாட்டில் கல்வி அபிவிருத்தி அடைந்தது என்று குறிப்பிட்டார்கள். ஆங்கிலேயர்கள் நம்முடைய நாட்டை ஆண்டுவந்த காலத்திலே மிகக் குறைந்த அளவுதான் மக்கள் கல்வி அறிவு பெற்றிருந்தார்கள். நம்முடைய நாட்டில் இப்பொழுது கட்டாய இலவசக் கல்வித் திட்டம் பரவிவருவதற்குக் காரணம், இப்பொழுது இருக்கும் மத்தியான உணவுத் திட்டம். அதோடுகூட, மாணவர்களுக்கு புத்தகம் முதலியவை வாங்கிக்

16th March 1959] [Srimathi Kolanthai Ammal]

கொடுப்பதன் காரணமாகவும் ஓரளவுக்கு அதிகம் பேர்கள் படிப்பதற்கு முன்வருகிறார்கள் என்பதைத் தான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே, நாம் போட்டிருக்கிற திட்டம் நல்ல திட்டம் என்பதை அவர்கள் ஒப்புக்கொண்டுதான் இருக்கிறார்கள். அதற்கு மேல் நான் ஒன்று வற்புறுத்திக்கூற விரும்புகிறேன். எஸ்.எஸ்.எல்.ஸி. வகுப்பு வரையிலும் நம்முடைய நாட்டிலே " பாக்வேர்டு, பார்வேர்டு " என்று பிரித்து " பாக்வேர்டு " வகுப்பினருக்கு இலவசக் கல்வி அளிப்பது என்பது கூடாது. குறைந்த வருவாய் பெறுகின்றவர்களுக்கு இலவசக் கல்வி அளிக்கப்படவேண்டும், அது ஜாதிமத அடிப்படையில் இருக்கக்கூடாது என்பதை நான் வற்புறுத்திக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். " பாக்வேர்டு" கம்யூனிடியைச் சேர்ந்தவர்கள் ஓரளவுக்கு வருமானம் படைத்தவர்களாக இருந்தாலும், அரசாங்கம் அவர்களுக்கு உதவி செய்கிறது என்ற நிலைமை இருக்கக்கூடாது.. அவர்களை விடக் குறைந்த வருமானம் படைத்த, வறுமையால் பீடிக்கப்பட்டவர்கள், அவர்கள் " பார்வேர்டு " கம்யூனிடி என்ற காரணத்தினால் தங்களுடைய கல்வியைப் பெறமுடியாத அளவுக்கு வருந்துகிறார்கள். இந்த நிலைமை உயர் நிலைப்பள்ளி, கல்லூரிகளிலும் வருகின்ற ஒரு நிலைமை இருக்கின்ற காரணத்தினால், வருமான அடிப்படையில் இந்தக் கட்டாயக் கல்வியை உயர்நிலைப்பள்ளி வகுப்பு வரைக்கும் அமைக்க வேண்டும். அதற்குரிய திட்டம் வகுக்க வேண்டும் என்பதை அமைச்சர் அவர்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன். நாம் ஜாதி அடிப்படையிலே இன்று நாட்டிலே எந்த விதத்திலும் காரியத்தைச் செய்யாவிட்டாலும், இந்தக் கல்வியைப் பரப்புகின்ற முறையிலே அதில் ஜாதியும் இல்லை என்பதை நாம் பல இலக்கியங்கள் மூலம் படித்திருக்கிறோம். ஜாதி முறையில் இலவசக் கல்வியை பரப்பாமல், எஸ்.எஸ்.எல்.ஸி. வரை ஆண், பெண் இருபாலாருக்கும் பொருளாதார அடிப்படையில், குறைந்த வருவாய் படைத்த குடும்பத்தில் இருக்கிற எல்லா மாணவர்களுக்கும் கட்டாய இலவசக் கல்வி அளிக்க வேண்டும் என்ற திட்டத்தை நாம் கொண்டுவரவேண்டும் என்பதை நான் மிகவும் வலியுறுத்துகிறேன்.

அடுத்தபடியாக, ஆரம்ப ஆசிரியர்களைப்பற்றி ஒரு சில வார்த்தைகள் கூறிக்கொள்ளுகிறேன். சிறப்பாக பெண் ஆசிரியர்களுக்கு வீடு கட்டும் திட்டத்தை அமைத்திருக்கிறார்கள். பெண் ஆசிரியர்களுககு இவ்வளவு சலுகை கொடுத்ததற்கு, பெண் அங்கத்தினர் என்ற முறையில் என்னுடைய பாராட்டுதலைத் தெரிவித்துக்கொள்ளுவதோடு, ஆண் பெண் என்ற வேறுபாடு இல்லாமல் ஆரம்ப ஆசிரியர்கள் நிலையிலே ஓரளவு நல்ல சம்பளம் இல்லை என்பதை நாம் உறுதியாகத் தெரிந்துகொண்டிருக்கிறோம். ஆகவே, ஆரம்ப ஆசிரியர்கள் என்றப் முறையில் எல்லோருக்கும் அந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக பணத்தைப் நல்ல முறையில் செலவழித்து அவர்களுக்கு சலுகை காட்ட வேண்டுமென்று நான் இங்கே ஞாபகப்படுத்த விரும்புகிறேன். எனக்கு முன்பு பேசிய அங்கத்தினர் ஆரம்ப ஆசிரியர்கள் கல்விச் சீரமைப்புத் திட்டத்தின் கீழே பொருள் சேகரிப்பதற்காக பிச்சை எடுக்கிறார்கள் என்றெல்லாம் குறிப்பிட்டார்கள். அது மிகவும் தவறுடையது என்பதை நான் இந்தச் சபையில் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். ஏனென்று கேட்டால், என்னுடைய வட்டாரத்தைப் பொறுத்த வரைக்கும் ஆசிரியர்களோடு நாங்களும் சென்று பல பொருள்களைக் கேட்டிருக்கிறோம். அவர்களும் இயன்ற அளவுக்கு உதவி செய்து கொண்டு வருகிறார்கள். ஏதோ ஆசிரியர்கள் வற்புறுத்தி நன்கொடை கேட்பதாக இவர்கள் கனவு காண்பது போல் சொல்லுகிறார்கள். உண்மையிலேயே பொருள் வளம் படைத்தவர்கள், கொடுக்கவேண்டுமென்ற மனப்பான்மை கொண்டவர்கள், கல்வித்துறையில் மக்களுக்கு உதவி செய்யவேண்டுமென்ற நல்லெண்ணம் படைத்தவர்கள் இவர்களிடம் சென்று தான் குறிப்பாக கேட்கிறோம்.

(Mr. Speaker in the Chair.)

அதிலே ஆரம்ப ஆசிரியர்களோடு மற்ற அங்கத்தினர்களும் பங்கு கொள்கிறார்கள். அதை நல்ல முறையில் செய்யவேண்டுமென்று கருதி, ஆங்காங்கு வட்டாரத்தில் இருக்கிற எம்.எல்.ஏ.க்களும், மற்ற உறுப்பினர்

களும் பங்கு கொண்டு நல்ல முறையில் தான் இந்தத் திட்டம் நடந்து கொண்டு வருகிறது என்பதை இங்கே ஞாபகப்படுத்த விரும்புகிறேன். ஆரம்ப ஆசிரியர்கள் கௌரவிக்கப்படவில்லை, மதிக்கப்படவில்லை என்று இவர்கள் மிகைப்படுத்திச் சொல்லுகிறார்கள் என்பதை இந்த இடத்திலே சுட்டிக்காட்ட விரும்புகிறேன். ஆரம்ப ஆசிரியர்கள் கிராமப்புறங்களிலே கேவலமாகக் கருதப்படுகிறார்கள் என்று நினைப்பது தவறு என்பதை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

அதற்கு மேல், இன்று நம்முடைய இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் ஒவ்வொரு பஞ்சாயத்து என்று சொல்லக்கூடிய இடத்திலே, 10,000 ரூபாய் செலவழிக்கப்படுகின்ற இடங்களிலே இந்தத் திட்டத்திற்கு மேலும் பணம் கொடுப்பது நிறுத்தப்பட்டிருக்கிறது. அதிலும் இன்னொரு 300 பேர்களுக்கு பாடசாலைகள் வேண்டுமென்ற முறையில், ஆரம்பக் கல்வியை அபிவிருத்தி செய்கிறோம் என்று சொன்னால், கல்வியைப் பொறுத்த வரைக்கும் இந்த சட்டம் தளர்த்தப்பட வேண்டும் என்று நான் பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன். ஏழை மக்கள் வாழ்கின்ற இடத்திலே 1½ மைல், 2 மைல் தூரம் சென்று படிக்கவேண்டுமென்று விரும்பினால், அது முடியாமல் இருக்கிறது. ஆகவே, ஆரம்பக் கல்வியைப் பரப்ப வேண்டுமென்று சொன்னால், எல்.டி. வொர்க்ஸ் வேலை நடக்கும் இடத்தில் கட்டாய இலவசக் கல்வியைப் பரப்புவதற்காக ஆரம்ப பாடசாலைகளைக் கட்டுவதற்காகவாவது வேண்டிய தொகையை ஒதுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதுமாத்திரமல்ல, எதிர்க்கட்சியில் ஒருவர் சம்பளச் சலுகையைப் பற்றி குறிப்பிடும்பொழுது, அதிகமாக பணக்காரர்கள்தான் இந்தச் சலுகையைப் பெறுகிறார்கள் என்று உண்மைக்கு மாறாக ஒரு கருத்தைத் தெரிவித்தார்கள். மாணவர்கள் சம்பளச் சலுகை பெறுவதானால், பணக்காரர்கள்தான் பெறுகிறார்கள் என்ற எண்ணம் மிகத் தவறுடையது என்பதை ஞாபகப்படுத்த விரும்புகிறேன். ஏழை மாணவர்கள்தான் அதிகமாக இந்தச் சலுகையைப் பெறுகிறார்கள். ஏதோ ஒரு சில மாணவர்கள் செல்வம் படைத்தவர்கள் இம்மாதிரி சலுகைகளை பெற்றிருக்கலாம் என்பது தான்.

அதற்கு மேல், தமிழ் ஆசிரியர்களைப்பற்றி பல முறை நான் இந்தச் சபையிலே குறிப்பிட்டிருக்கிறேன். அதை மீண்டும் இப்பொழுது வற்புறுத்த விரும்புகிறேன். உயர்நிலைப் பள்ளியில் வேலை பார்க்கும் தமிழ் ஆசிரியர்களுக்கு சம்பள விகிதம் குறைவு. செகண்டரி கிரேடு டிரெயினிங் ஆசிரியர்களுக்கு ஆரம்ப சம்பளம் ரூ. 45 அதே சம்பளம்தான் தமிழ் ஆசிரியர்களுக்கும் கொடுக்கப்படுகிறது. அவர்கள் பண்டிட் டிரெயினிங் படித்தவர்களானால் 85 ரூபாய் கொடுக்கப்படுகிறது. ஆனால் ஒரு உயர்நிலைப் பள்ளியிலே 3 தமிழ் ஆசிரியர்கள் வைக்கக்கூடிய அளவுக்கு தமிழ் வகுப்புக்கள் இருந்தாலும்கூட, ஒரு உயர் நிலைப்பள்ளியில் ஒரு பண்டிட் டிரெயினிங் படித்த தமிழ் ஆசிரியரை வைத்துக்கொண்டு 2 தமிழ் ஆசிரியர்களுக்குப் பதிலாக ஒரு அன்டிரையினிங் வித்வானையும், ஒரு செகண்டரி கிரேடு வாத்தியாரையும் வைத்துக்கொண்டு எப்படியாவது தமிழைச் சொல்லிக்கொடுத்து விடலாம் என்ற அளவுக்கு உயர்நிலைப் பள்ளிகளிலே பல இடங்களிலே செய்து வருகிறார்கள். நல்ல தமிழைப் படித்த தமிழ் ஆசிரியர்கள் பாடம் சொல்லிக் கொடுத்தாலேயே சில மாணவர்களுக்கு அவ்வளவு தூரம் தமிழ் அபிவிருத்தி அடைவது கிடையாது. ஆகையினாலே முதல் பாரத்திலிருந்து எஸ்.எஸ்.எல்.ஸி. வரைக்கும் தமிழ் பாடத்தை எடுக்கக்கூடியவர்கள் டிரெயினிங் பெற்ற தமிழ் ஆசிரியர்களாக இருக்க வேண்டும். அவர்களுக்கு 85 ரூபாய் கொடுக்க வேண்டும். நான்கு ஆண்டு பல்கலைக் கழகத்தில் தமிழ் பயிற்சி பெற்று உயர்நிலைப்பள்ளியில் ஆசிரியராக இருக்கக்கூடிய தமிழ் ஆசிரியர்களுக்கு, அம்மாதிரி பயிற்சி பெறாத ஆசிரியர்களுக்கு அளிக்கப்படும் 45 ரூபாய் சம்பளம் அளிக்கப்படுமானால் நாம் தமிழ் ஆசிரியர்களுக்கு தீங்கு விளைவிக்கக்கூடியவர்களாக இருக்கிறோம் என்பதையும் இந்த இடத்தில் ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.

16th March 1959] [Srimathi Kolanthai Ammal]

இதற்கு மேல், கல்லூரிகளை எடுத்துக்கொண்டாலும், கல்லூரி தமிழ் ஆசிரியர்களிடையேயும் பல வேறுபாடுகள் இருக்கின்றன. அதாவது முதல் கிரேடு லெக்சரர், இரண்டாவது கிரேடு லெக்சரர் என்றெல்லாம் பிரிக்கப்பட்டு பாகுபாடு இருக்கிறது. அவர்களுக்கு பாடம் சொல்லிக் கொடுக்கும்பொழுது தமிழ் வித்வானாக இருக்கக்கூடியவர் எம்.ஏ. வகுப்பு வரைக்கும் தொல்காப்பியம் சொல்லிக்கொடுக்கக்கூடிய தகுதி இருக்கிறது. அதே மாதிரி தான் பி.ஏ., பி.ஓ.எல். படித்தவர்களுக்கும் தொல்காப்பியம் சொல்லிக்கொடுக்கும் தகுதி இருக்கிறது. அவர்களுக்கு மட்டும் சம்பளம் ரூ. 75 அல்லது 85-ஆக இருக்கிறது. ஏன் இந்த நிலைமை இருக்கிறது என்றால், பி.ஏ., பி.ஓ.எல். படித்த தமிழ் வித்வான்களுக்கு எம்.ஏ. படிக்கிறவர்களுக்குச் சொல்லிக்கொடுக்க தகுதி இருக்கிறது என்று பல்கலைக் கழகம் சொல்லும்பொழுது, அரசாங்கம் அவர்களுக்கு சம்பளம் கொடுப் பதற்கு மட்டும் அவர்களுக்கு தகுதி குறைவு என்பதை எடுத்துக்காட்டுவது பாரபட்சமாக நடந்துகொள்ளக்கூடியதுதான் என்பதை நான் இந்த இடத்திலே ஞாபகப்படுத்திச் சொல்லிக்கொள்ளுகிறேன். பி.ஏ. வகுப்பு, பி.எஸ்.ஸி. வகுப்பு, பிரி-யுனிவர்ஸிடி வகுப்புக்கு தமிழ் எடுக்கின்ற வித்வான் தமிழ் ஆசிரியர்களுக்கும், தமிழ் எம்.ஏ. படித்த தமிழ் ஆசிரியர் களுக்கும் உள்ள பாட திட்டத்தை அமைச்சர் அவர்கள் வாங்கிப்பார்ப்பார் களேயானால், அவர்களும் தான் 32 புஸ்தகங்களை உருப்போடுகிறார்கள், இவர்களும் தான் அதே புஸ்தகங்களை உருப்போட்டுத்தான் ஆக வேண்டி யிருக்கிறது. இப்படி பாடதிட்டத்தில் வேறுபாடு இல்லாமல் இருக்கும் பொழுது, அவர்களிடையே சம்பளத்தில் வேறுபாடு இருக்கக்கூடாது. வேலையை மட்டும் வாங்குவது சரியல்ல. சம்பளமும் கொடுத்து, வேலை யையும் வாங்கவேண்டுமென்பதையும் நான் வற்புறுத்திக் கூறிக்கொள்ளு கிறேன்.

மேலும், தமிழ்மொழியில் எம்.ஏ. தேறின பிறகு ரிஸர்ச் செய்து "தீஸிஸை" ஆங்கிலத்தில்தான் எழுத வேண்டும் என்றிருக்கிறது. தமிழில் ஆராய்ச்சி செய்து, அவற்றையெல்லாம் எவ்வாறு எழுத வேண்டுமென்று கருதுகிறார்களோ அந்த அளவுக்கு—தமிழில் எழுதுவது போன்று—ஆங்கிலத்தில் எழுத முடியாது. இப்பொழுது இருக்கின்ற 9 பேப்பர்களில் ஆறு பேப்பர்கள் ஆங்கிலத்தில் தான் எழுத வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். இதன் மூலமாக தமிழை அபிவிருத்தி செய்ய முடியாது என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். ஆகவே இதை ஆங்கிலத்தில் எழுதவேண்டும் என்று சொல்வது தவறு என்பதை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அதற்கு மேல், மற்ற பாடங்கள்—ஸயன்ஸ், ஆர்ட்ஸ் போன்ற விஷயங்களை—போதிக்கின்ற ஆசிரியர்களுக்கு கொடுக்கப்படும் சம்பளம், மொழி ஆசிரியர்களுக்கும் கொடுக்க வேண்டும். ஏனென்றால் அவர்களும் ஐந்து வருடங்கள் படித்து கொண்டு தான் வருகிறார்கள், மொழி ஆசிரியர்களும் ஐந்து வருடம் கஷ்டப்பட்டு படித்துக்கொண்டுதான் வருகிறார்கள். பாடங்களை சொல்லிக்கொடுப்பதில் இரண்டு பேர்களும் ஒரே மாதிரியாகத்தான் சொல்லிக்கொடுக்கிறார்கள். ஆகவே இரண்டு பேர்களுடைய சம்பள விகிதமும் சமமாக இருக்க வேண்டும் என்பதை ஞாபகப்படுத்த விரும்பு கிறேன். அதற்கு மேல், கிராமப் புறங்களில் இருக்கின்றவர்கள், இப்போது ஏற்படுத்தப்பட்டிருக்கிற கல்வி புனரமைப்பு திட்டத்தின்கீழ், நல்ல பயனை அடைந்து வருகிறார்கள். நம்முடைய அரசாங்கம் பொது மக்களுடைய ஆதரவை திரட்டி இந்த திட்டத்தை கொண்டுவர முயற்சி எடுத்துவருவதற்கு நான் அரசாங்கத்தை பாராட்டிக்கொள்கிறேன். அதி லும் அரசாங்கத்தினுடைய வற்புறுத்தல் இல்லாமல் பொதுமக்களின் ஆதரவு பல பகுதிகளிலும் இருந்து வருகின்றன. அதன் காரணமாக இப்போதுள்ள திட்டம் வெற்றியும் அடைந்து வருகிறது என்பதை சொல்லிக் கொண்டு மேலும் இந்தத் திட்டத்தை அபிவிருத்தி அடைய செய்வதற்கு நல்ல வாய்ப்பையும், சந்தர்ப்பங்களையும் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு மேல், நம்முடைய அரசாங்கமானது, மத்தியான உணவு கொடுப்பதற்கு ஏற்படுத்தப்பட்ட திட்டத்தின் மூலமாக அநேக ஏழைக் குழந்தைகள் பயனடைகிறார்கள். அதில் ஒரு சில குறைகள் இருக்கலாம், அவ்விதம் ஒரு சில குறைகள் இருந்தாலும் அதை

நல்ல முறையில் நீடித்து நடத்த வேண்டும் என்பதை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். குறைபாடுகள் இல்லாத திட்டங்களே கிடையாது என்று தான் சொல்ல வேண்டும். ஒன்றிரண்டு குறைபாடுகள் ஆங்காங்கே ஏற்பட்டிருக்கின்றன என்கிற காரணத்திற்காக இந்த திட்டமே மோசம் என்று கூறுவது தகுதியுடையதன்று என்பதையும் சொல்லிக்கொண்டு இந்த கல்வி மானியக் கோரிக்கையின் மூலமாக பல திட்டங்களை நிறைவேற்றப்போகிற அரசாங்கத்தை நான் பாராட்டுகிறேன். அதோடு 10 ஆண்டுகளில் கிராமப்புறங்களில் இருக்கின்ற மக்கள் எல்லாம் கல்வியறிவு பெற்றிருக்கவேண்டும் என்ற சிறந்த நோக்கத்தோடு இந்தத் திட்டத்தைக் கொண்டு வந்து அதற்காக செயல்பட்டு வரும் அதிகாரிகளையும், அமைச்சர் அவர்களையும் பாராட்டிக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **Sri N. K. PALANISAMI** : கனம் சபா நாயகர் அவர்களே, கனம் மந்திரி அவர்கள் பேச்சினுடைய பிரதிகளிலிருந்து நம்முடைய அடிப்படையான நோக்கம் " கிளாஸ்லெஸ் அண்ட் காஸ்ட்லெஸ் " ஸொஸைட்டியை ஏற்படுத்துவது என்பதும் அதனுடைய அடிப்படையில் இந்தியாவை தொழில்வளமாக்கவேண்டும் என்ற அடிப்படையில் தான் இந்த கல்வித்திட்டங்களை அமைத்திருக்கிறோம் என்று அவர்கள் கூறியிருக்கின்றார்கள். அது மிகவும் வரவேற்கத்தக்கதுதான். ஆனால் இதன் மூலம் அதிகப்படியான அளவில் கல்விக்காக செலவிடப்படுவதையும், மேலும் பல மாற்றங்களை செய்வதையும் நாம் வரவேற்கிறோம். ஆனால் இவ்வளவு பெரிய தொகை செலவு செய்திருந்தும் எந்த அளவுக்கு கல்வியில் முன்னேற்றம் அடைந்திருக்கிறது என்பதை அவசியம் நாம் கவனித்தாக வேண்டும். இன்றைக்கு இருக்கக்கூடிய கல்வி முறை பிரிட்டிஷ் காலத்தில் இருந்த முறையிலே இருந்து வருகிறதே தவிர அதைவிட போதுமான அளவுக்கு மாற்றம் எதுவும் ஏற்படவில்லை என்பதை சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். வேஸ்டேஜை எடுத்துக்கொண்டாலும் அதிகமாகத்தான் இருந்து வருகிறது. மத்திய மந்திரி சமீபத்தில் பார்லிமெண்டில் இன்னும் காலேஜில் 50 சதமானம் வேஸ்டேஜ் ஏற்பட்டிருக்கிறது (பாதிபேர்கள் fail ஆகி விடுகிறார்கள்) என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இன்றையதினம் கல்விக்காக அதிகப்படியான அளவில் செலவு செய்ய வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இந்த நிலையில் பள்ளிக்கூடங்களில் மாணவர்கள் படித்துவிட்டு வெளியே வரும்போது மேற்கொண்டு என்ன செய்வது என்று ஆலோசிக்கின்ற நிலைதான் இப்போது ஏற்பட்டிருக்கிறது. இப்போது படிக்கின்ற படிப்பை வைத்துக் கொண்டு ஏதாவது தொழிலில் ஈடுபட முடியும் என்ற நம்பிக்கை மாணவர்களுக்கு வரவில்லை. வேறு ஏதாவது உத்தியோகத்தை எதிர் பார்க்கின்ற நிலைமையில்தான் இன்னும் இருந்து வருகிறார்கள். ஒரு பக்கத்தில் நாம் கல்வியை அபிவிருத்தி செய்து " ஸோஷியலிஸ்ட் பாட்டர்ன் ஆப் ஸொஸைட்டி " யை ஏற்படுத்த வேண்டும் என்ற முறையில் தான் நாம் திட்டமிட்டிருக்கிறோம். அந்த அடிப்படையில் நம்முடைய கல்வி முறை மாற்றப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் அவ்விதம் மாற்றபடவில்லை. உதாரணமாக பேஸிக் கல்வி முறை இந்தியாவெங்கும் ஏற்படவேண்டும் என்று நாம் சொல்லிக்கொண்டிருக்கிறோம். ஆனால் சமீபகாலத்தில் என்ன நடைபெற்றுக்கொண்டிருக்கிறது என்பதை பார்த்தால் சட்டசபை கமிட்டியினுடைய அறிக்கையினும், வெள்ளை அறிக்கையினும் இண்டஸ்ட்ரியல் முறையில் பேஸிக் கல்வி கற்பிக்கப்படவேண்டும் என்று சொன்னார்கள். இப்போது அந்த முறையில் ஸிலபஸ் இருந்து வருவதாகத் தெரியவில்லை. இப்பொழுது பள்ளிக்கூடங்களில் பேஸிக் ஸிலபஸ் இருக்க வேண்டும் என்று சொல்லப்பட்டது இப்போது நான்—பேஸிக் ஸெலபஸ் தான் இருக்கின்றது. ஆதாரக் கல்வியில், கிராப்ட் என்று சொல்லப்படுகிற கல்வியை எடுத்துக்கொண்டால் இப்போது தக்ளியைத் தவிர வேறு ஒன்றும் கிடையாது. இன்று தொழில் துறையை பலப்படுத்துவது என்று சொல்லிவிட்டு தக்ளியில் நூற்பதை சொல்லி கொடுப்பதால் என்ன பிரயோஜனம் ? இன்றைய தினம் நாட்டில் இருக்கின்ற பள்ளிக்கூடங்களில் அதுவும் குறிப்பாக எலிமெண்டரி பள்ளிக் கூடங்களிலிருந்து இந்த படிப்பை அதாவது மாடர்ன் டூல்ஸ் ஸில்பயிற்சி

16th March 1959] [Sri N. K. Palanisami]

பெறுவதற்கு வழி வகை செய்து கொடுத்தால்தான் இப்போது இருக்கின்ற மாணவர்கள் நல்ல முறையில் பின்னால் விஞ்ஞான அறிவை பெற முடியும். இப்போது இண்டஸ்ட்ரியல் பயாஸ் என்று வைத்திருக்கிறார்கள். ஆனால் பல பள்ளிக்கூடங்களிலும் இதற்கு வேண்டிய சாமான்களே கிடையாது. எலிமெண்டரி கிளாஸ் முதற்கொண்டு இந்த பயிற்சிகள் எல்லாம் கொடுக்க வேண்டும். அது மட்டுமல்ல, பள்ளிக்கூடங்களில் மற்ற வாத்தியார்களுக்கு கொடுக்கப்படும் சம்பளத்தை விட இண்டஸ்ட்ரியல் பாடங்களை சொல்லிக்கொடுக்கும் உபாத்தியாயர்களுக்கு சம்பளம் குறைவாக இருக்கிறது. இதை அரசாங்கம் கவனித்து அவர்களுக்கு இப்போது இருக்கக் கூடிய சம்பளத்தை உயர்த்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இன்னும் ஹையர் எலிமெண்டரி படிப்பை எட்டு வருஷத்திலிருந்து இப்போது ஏழு வருஷமாக குறைத்திருக்கிறார்கள். இப்போது இவ்விதம் கொண்டுவருவதின் காரணமாக ஏழு வருடம் படிக்கும் மாணவர்களுடைய தரம் எவ்விதம் இருக்கிறது என்பதை நாம் பார்க்க வேண்டும். இப்போது மாணவர்களுடைய தரம் குறைந்துதான் இருக்கிறது. அதோடு ஆசிரியர்களை அமர்த்துவதில் 1 : 35 என்று இருக்கிறது. இந்த நிலைமையில் நகரத்தை எடுத்துக்கொண்டால் 50, 60 என்று மாணவர்கள் இருக்கக்கூடிய இடங்களில் சரியான விதத்திலும் இன்னும் சர்க்காருடைய உத்தரவு அமுல் செய்யப்படவில்லை. இவ்விதம் மாணவர்கள் அதிகமாக இருக்கக்கூடிய இடங்களில் ஒரே ஆசிரியர் சொல்லிக்கொடுக்க வேண்டியிருக்கிறது. அதோடு கிராமப்புறங்களில் இருக்கக்கூடிய பள்ளிக்கூடங்களில் இரண்டு மூன்று கிளாஸ் இருந்தாலும் அதற்கு ஒரு ஆசிரியர் தான் இருந்து கொண்டிருக்கிறார். இதனால் பிள்ளைகளுடைய படிப்பின் தரம் மிகவும் குறைந்துவிடுகிறது. பிரிட்டிஷ் காலத்தில்கூட சில பள்ளிக்கூடங்களில் ஆசிரியர்களுக்கு, மானேஜ்மெண்டின் கீழ் இருந்த பள்ளிக்கூடங்களில் வேலை செய்து கொண்டிருந்த ஆசிரியர்களுக்கு இருந் சம்பள விகிதத்திலிருந்த வித்தியாசம் இன்னும் தொடர்ந்திருக்கிறது. இதை போக்குவதற்கு சர்க்கார் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. இன்று கார்ப்பரேஷன் பள்ளிக்கூடங்களில் வேலை செய்யும் ஹையர் கிரேட் ஆசிரியர்களுக்கு ரூ. 35—60 என்ற முறையில் சம்பளம் கொடுத்து வருகிறார்கள். இவர்களுக்கு வீட்டு வாடகையும் கொடுக்கிறார்கள். அதே நேரத்தில் பிரைவேட் ஸ்கூல்களில் வேலை செய்யும் ஆசிரியர்களுக்கு அதே கிரேடில் உள்ளவர்களுக்கு ரூ. 30—33 என்று சம்பளம் கொடுக்கப்பட்டு வருகிறது. அதோடு வீட்டு வாடகை கிடையாது. கார்ப்பரேஷன் பள்ளிக்கூடங்களில் வேலை செய்யும் ஆசிரியர்களுக்கு ஸிக் லீவ், பிரிவிலேஜ் லீவ் முதலியவை உண்டு. எய்டட் ஸ்கூல்களில் வேலை செய்யும் ஆசிரியர்களுக்கு இந்த வசதி கிடையாது. இந்த மாதிரியாக இருந்து வரும் வித்தியாசங்களை எல்லாம் நீக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இன்னும் பிரைவேட் பள்ளிக்கூடங்களில் வேலை செய்யும் ஆசிரியர்களுக்கு நிரந்தரமான உத்தியோகம் கிடையாது. அவர்கள் உத்தியோகத்தில் சேரும்போது ராஜிநாமா கடிதத்தையும் சேர்த்து வாங்கி விடுகிறார்கள். சம்பளம் கூடுதலாகக் கொடுக்க வேண்டியிருக்கும் என்ற காரணத்திற்காக இவர்களை நிரந்தரமாக வைத்துக்கொள்வதில்லை. ஆகவே ஒவ்வொரு வருடமும் வெளியே இவர்களை அனுப்பிவிட்டாலும் கேட்பதற்கு ஆள் கிடையாது. சர்க்கார் மேனேஜ்மெண்டுக்கு வேலையிலிருந்து நீக்கின ஆசிரியர்களை திரும்ப எடுத்துக்கொள்ள வேண்டும் என்று உத்தரவு போடவேண்டும். இவ்விதம் இன்னும் நூற்றுக்கணக்கான பேர்கள் வெளியே இருக்கிறார்கள். ஆசிரியர்களை திரும்ப எடுப்பதில்லை. இந்த நிலைமையில் நடத்துகிற பள்ளிக்கூடங்களுக்கு சர்க்கார் ஏன் பண உதவி செய்யவேண்டும் என்று தெரியவில்லை. இதை தவிர மத்தியான உணவு என்ற முறையில் பல இடங்களிலும் இந்த முறை நடந்து வருவது வரவேற்கத்தக்கது தான். வட சென்னையை (நார்த் மெட்ராஸ்) எடுத்துக்கொண்டால் இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்னால் இத்திட்டம் ஆரம்பிக்கப்பட்டது. மறுபடி இப்போது இது சரியான முறையில் நடைபெறவில்லை. பொதுவாக இத்திட்டம் காகிதத்தில் தான் இருந்து கொண்டிருக்கிறதே ஒழிய நடைமுறையில் சரியாக நடைபெறுவதில்லை. ஆகவே இந்த மத்தியான உணவு கொடுக்கும் திட்டத்தை சரியான முறையில் செயல்படுத்த வேண்டும். இந்த பொறுப்பை அந்தந்த இடத்தி

[Sri N. K. Palanisami] [16th March 1959

ளுள்ள மக்களிடம் விட்டுவிடக்கூடாது. சர்க்காரே எற்றெடுத்து எல்லோருக்கும் மத்தியான உணவு கொடுக்கக்கூடிய ஒரு முறையில் ஒரு தொகையை இதற்காக ஒதுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இன்னும், சமீபத்தில், எடுகேஷனல் இம்ப்ரூவ்மெண்ட் என்ற திட்டத்தின் கீழ், ஆசிரியர்களை தொல்லை கொடுக்கிறார்கள். சமீபத்தில், கோயமுத்தூரில், முனிசிபல் கமிஷனர், அங்கு இருக்கக்கூடிய பள்ளி ஆசிரியர்கள் பெப்ரவரி 3-ம் தேதிக்குள் ஆளுக்கு 5,000 ரூபாய் கலெக்ஷன் செய்யாவிட்டால் நடவடிக்கை எடுக்கப்படும் என்ற முறையிலே அவர்களுக்கு ஒரு உத்தரவு போட்டிருக்கிறார்கள். எடுகேஷன் ரூல்களிலேயே இருக்கிறது, இம்மாதிரி உபாத்தியாயர்கள் வசூலிக்கக் கூடாது என்று. முனிசிபல் கமிஷனர் எப்படி உத்திரவு இடலாம் என்பது தெரியவில்லை. இம்மாதிரியான ஊழல்கள் பல இருக்கின்றன.

11-30 a.m.

இதில் இன்னொன்று என்னவென்றால், ஒரு உத்திரவில் இந்த திட்டம், டைரக்டர் ஆப் பப்ளிக் இன்ஸ்ட்ரக்ஷன் அவர்களது திட்டம், அதற்குப் பணம் கொடுக்க வேண்டும் என்று இருக்கிறது. பொதுக் காரியமாக இருக்கிறபோது இதில் என் ஒரு தனிப்பட்ட இலாகாத் தலைவரின் பெயரைப் போடவேண்டுமென்று தெரியவில்லை. இம்மாதிரி பல குறைகள் இருக்கின்றன. அவைகளையெல்லாம் பரிசீலித்து, நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, வெட்டுப் பிரேரணையை ஆதரித்து என் பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI T. M. NALLASWAMI: கனம் சபாநாயகர் அவர்களே கனம் நிதியமைச்சர் கொண்டு வந்துள்ள மானியக் கோரிக்கையை, ஆதரித்து, ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த மானியக் கோரிக்கையானது, எந்த லட்சியத்தை நிறைவேற்ற கொண்டு வரப்பட்டுள்ளதோ, அந்த லட்சியமானது நல்ல முறையிலே நிறைவேற்றப் படவேண்டுமானால் நம் நிர்வாகத்திலுள்ள பல குறைகளைத் திருத்திக் கொள்ளவேண்டும் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆரம்பப் பள்ளிக் கூடங்களுக்கு என்று சுமார் ரூபாய் 6 கோடிக்கு மேல் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அது மிகவும் பாராட்ட தக்கது. 300 பேர் ஜனத்தொகைகொண்ட ஊர்களிலெல்லாம், ஒரு பள்ளிக்கூடம் இருக்கவேண்டும் என்று திட்டம் போட்டிருக்கிறோம். இது நாட்டிலுள்ள அறியாமையைப் போக்க எடுத்துக் கொள்ளப்படும் அறிய முயற்சி. அப்படிப் பள்ளிக்கூடங்கள் கொடுக்கும் போது, ஒன்றுக்கொன்று முரண்பாடு ஏற்பட்டுத் தொல்லை ஏற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். உதாரணமாக, நிறையப் பள்ளிக்கூடங்கள் ஏற்படும் என்ற காரணத்தால், நிறைய ஆசிரியர்களைப் பயிற்றுவிக்க, பயிற்சிப் பள்ளிகளை நாம் ஆரம்பித்தோம். இப்பொழுது நாட்டில், இருக்கும் நிலைமை என்னவென்றால், பள்ளிக்கூடங்களின் தேவைக்கு அதிகமான ஆசிரியர்கள் இருப்பதால், ஆசிரியர்களிடையே, வேலையில்லாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இது சர்க்கார் கவனிக்கதக்க விஷயம். இந்த நிலையிலே, இன்னும் அதிகமாக பள்ளிக்கூடங்களை அதிகரிக்க இருக்கும்போது, எந்த அளவுக்கு ஆசிரியர்களை அதிகப்படுத்த வேண்டும் என்று தீர்மானிக்க வேண்டும். ரொம்ப அதிகமாக உற்பத்தி செய்வதில் உபயோகம் இல்லை. என்னைப் போன்ற பிரதிநிதிகள் அதிகப்படியான வேலையில்லாத ஆசிரியர்களைப் பார்க்கிறோம். ஆசிரியர்களிடையே வேலையில்லை என்ற குறையைச் சொல்லுகிறோம். இந்த பயிற்சிப் பள்ளிக்கூடங்களையே மூடவேண்டியிருக்கும். வேலை கொடுக்கும் அளவுக்கே பள்ளிகளை அதிகப்படுத்த வேண்டும். அம்மாதிரிப் பொறுப்பான முறையிலே இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டும் என்று வலியுறுத்த விரும்புகிறேன்.

இந்தப் பயிற்சிப் பள்ளிகளில், தேர்தல்கள் ஆண்டுதோறும், நடைபெறுகிறது. பல கனம் அங்கத்தினர்கள் இந்தத் தேர்தல் நல்ல முறையிலே நடைபெறவில்லை என்று குறை கூறினார்கள். என்னைப் பொறுத்த வரையில்—நான் ஒரு தேர்தல் கமிட்டி அங்கத்தினன்—நான் சொல்ல விரும்புவது என்னவென்றால், இந்த தேர்தல்கள் கூடுமானவரையில் நியாயமான முறையிலேயே நடைபெறுகிறது என்றுதான். ஒரு பள்ளிக்கு 50 பேர் வேண்டுமென்றால், வரக்கூடிய மனுக்கள் 500, ஆகவே,

16th March 1959] [Sri T. M. Nallaswami]

தேவைக்கு மேல் மனுக்கள் வரும்போது, பல மனுக்கள் தள்ளப் படுகின்றன. இந்த நிலையில் புகார்களுக்கும் இடம் கொடுக்காமல் செய் தாலும், குறைபாடுகள் ஏற்படுவது இயல்பு. அதையேதான் புகார்களாகக் கூறுகிறார்கள் என்று எண்ணுகிறேன்.

அடுத்தபடியாக, பள்ளி அபிவிருத்திக்காக கொண்டு வந்திருக்கக்கூடிய திட்டம், ஒரு நல்ல திட்டம். சமீப காலத்தில், மூன்று நான்கு ஆண்டு களில், ஏராளமான பள்ளிகளை நாம் திறந்திருக்கிறோம். இவைகள், சர்க்காரே, கட்டிடம் அமைத்துக் கொடுப்பதானால், அதிகப்படியான பள்ளி கள் வந்திருக்க முடியாது. மக்களே முன்வந்து உதவி செய்ததனால்தான் அதிகப்படியான பள்ளிகள் வரமுடிந்தது. பொது மக்கள் அபிவிருத்தி திட்டத்தை ஆர்வத்துடன் செயல் படுத்துகிறார்கள் என்று எண்ணுகிறேன். அது வெற்றிகரமாக நடைபெறுகிறது; நடைபெறும் என்பதில் சந்தேகம் இல்லை.

எங்கள் கிராமத் தலைமை ஆசிரியர் ஒரு நாள் என்னிடம் வந்து சொன்னார்கள். "வேனிற் காலம் வந்துவிட்டது; கிணற்றில் தண்ணீர் அதிகப்படியானதாக இல்லை. மாணவர்களுக்கு தண்ணீர் கொடுக்கக் காணாது" என்று. தண்ணீர் கொடுக்க வழி செய்ய வேண்டும் என்றும் சொன்னார்கள். அது ஜில்லா போர்டு பள்ளி. அவர்களுக்கு எழுதினால் தண்ணீர் கிடைக்காது. கிடைத்தாலும், அதற்குள் வேனிற்காலம் போய் விடலாம் என்று அவர்களுக்குத் தெரியும். ஆகவே, உள்ளூரிலேயே முயற்சி செய்தார்கள். அந்த முயற்சியின் பலனாக, வேறு பகுதியி லிருந்து தண்ணீர் கொண்டு வரப்பட்டு வேலை செம்மையாக நடந்தது. அதேமாதிரி, ஒரு ஆரம்ப பள்ளி தலைமை ஆசிரியர், என்னிடத்தில் வந்து, "எங்கள் பள்ளிக்கூடக் கட்டிடத்தை பாருங்கள். தலையில் விழுந்து விடுமோ என்ற நிலையில் இருக்கிறது." என்று சொன்னார். எங்கள், எல்லோரையும் அழைத்துக் காட்டினார்கள். உண்மையாகவே, கட்டிடம் மோசமாக இருந்தது. அவர் செய்த முயற்சியின் பலனாக, இன்று, அந்தக் கட்டிடம் புதிப்பிக்கப்பட இருக்கிறது. பல பொது மக்கள் முன்வந்து உதவி னார்கள். ஆசிரியர்கள் பொதுவாக எந்த அரசியல் கட்சி சார்பிலும் இல்லாமல், நேர்மையாகச் செயலாற்றி வரக்கூடியவர்களாக இருந்தால், நல்ல மதிப்புக்குப் பாத்திரமானவர்கள். ஆகவே, இந்த பள்ளி அபிவிருத்தித் திட்டம் நன்றாக செயல்படும் என்ற நம்பிக்கையைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ஸ்ரீ அன்பழகன் சொன்னது போல் அவர்கள் பிச்சை எடுக்கும் நிலையில் இல்லை. ஆசிரியர்கள், மதிப்புடன்தான் வாழ்கிறார்கள், செயல் படுகிறார்கள் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

கிராமங்களிலே, ஆரம்பிக்கப்பட்டுள்ள பள்ளிகளில், நடை முறையில் உள்ள குறைகளை, கல்வித்துறை தலைவர் அவர்களும், அமைச்சர் அவர்களும் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கிராமங்களிலே, இரண்டு ஆசிரியர்கள் உள்ள பள்ளிக்கூடமாக இருந்தால் அதில் ஒருவர் பெண்ணாக இருந்தால், மருத்துவ காலத்தில், சில மாதங் களுக்கு அது ஓராசிரியர் பள்ளியாகவே இருந்துவிடுகிறது. சுமார் 80 பிள்ளைகளை ஒரே ஆசிரியர் கவனிக்க வேண்டிய நிலைமை ஏற்படுகிறது. இவை இதுகாறும் ஜில்லா போர்டு, பெரிய நிர்வாகமாக இருந்த காரணத்தால் இவை ஏற்பட்டிருக்களாம். ஆனால், பஞ்சாயத்து யூனியன் நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு, கவனிக்க ஆரம்பித்தால், இந்தக் குறைகள் நிவர்த்திக்கப்படலாம் என்று எண்ணுகிறேன்.

பள்ளிகளை அதிகப்படுத்துகிறோமே தவிர, அவைகளைக் கண்காணிக்கப் போதிய அளவு அதிகாரிகளை அதிகப்படுத்தவில்லை. என் தாலூகாவான கரூர் தாலூகாவில், இரண்டு டெபுடி இன்ஸ்பெக்டர்கள். ஒரு ஸீனியர், அவருக்கு கீழ் ஒரு உதவி இன்ஸ்பெக்டர் என்று இருந்தார்கள். இது மூன்று வருஷங்களுக்கு முன்பு. தாலூகாவில் 87 பள்ளிகள் இருந்த போது இருந்த நிலை. இப்பொழுது, 300 பள்ளிக்கூடங்களுக்கு மேல் இருக் கின்றன. ஆனாலும், இப்போதும் அதே இரண்டு டெபுடி இன்ஸ்பெக்டர்கள்

[Sri T. M. Nallaswami] [16th March 1959

இருக்கிறார்கள். ஆகையால் அவர்களால், இந்த 300-க்கு மேற்பட்ட பள்ளிகளையும் செவ்வனே கண்காணிக்க முடியவில்லை. ஆகவே, இந்த உத்தியோகஸ்தர்களை, தேவைக்கு ஏற்றவாறு அதிகப்படுத்தவேண்டும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, பாட புத்தகங்கள் விஷயமாக சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இப் புத்தகங்களைப் பல்வேறு தனியார்கள், கம்பெனியார்கள் வெளியிட்டு, டெக்ஸ்ட் புக் கமிட்டியில் அப்ரூவல் வாங்கி, பள்ளிகளில் வைக்கிறார்கள். அவர்களுக்கு நல்ல இலாபம் கிடைக்கிறது. இலாபம் கிடைக்கிறதா இல்லையா என்பதைப்பற்றி சந்தேகமே இல்லை. ஆகவே, இந்த இலாபம், சர்க்காருக்கு வரக்கூடாது என்று சொல்ல முடியாது. அந்த மாதிரி எண்ணம் தவறானது அல்ல. ஆனால் சிலர் தவறான எண்ணத்தில் இருக்கிறார்கள். 10-வது வகுப்பிற்கு, உயர்நிலை பள்ளிப் பரீட்சைக்கு, எஸ்.எஸ்.எல்.சி.-க்கு சர்க்கார் வெளியிட்ட புத்தகத்தில் தவறுகள் அதிகமாக இருந்ததால், சர்க்கார் எடுத்துக்கொண்டால் எல்லாமே இப்படித்தான் ஆகும் என்று பயப்படுகிறார்கள்.

ஆகவே இம்மாதிரி திட்டங்களை சர்க்கார் எடுத்து நடத்தும்போது அவைகள் நல்ல திட்டங்களாக இருந்தால் அவைகளில் நல்ல முறையில் கவனம் செலுத்தி அமுல் நடத்தவேண்டும். நல்ல திட்டங்களில் தவறுகள் இருந்தாலும் அந்த திட்டமே தோல்வி அடைந்து விட்டதாகக் கருதப்பட்டுவிடும். ஆகவே நல்ல திட்டங்களில் அதிகப்படியான கவனம் செலுத்த வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இப்பொழுது உயர் நிலைப்பள்ளிகளில் பல நோக்குப் பள்ளிகளாக மாற்றி அமைக்கப்பட்டு வருகிறது. அது ரொம்பவும் வரவேற்கத்தக்கது. சாதாரண பள்ளிகளில் மாணவர்கள் படித்து விட்டு வெளியே வந்தால் அவர்கள் சாதாரணமான க்ளார்க்குகள் வேலைக்குத்தான், அதாவது, வெறும் எழுத்தாளர்களாகத்தான் வேலைப் பார்க்க வேண்டியதாக இருக்கிறது. வேறு எந்த உத்தியோகத்திற்கும் அவர்கள் லாயக்கு இல்லாதவர்களாகி விடுகிறார்கள். அவர்கள் எஸ்.எஸ்.எல்.சி. படித்த பிறகு வெளியே வந்தால் அவர்களுக்கு உத்தியோகம் பார்க்கத்தான் முடியுமே தவிர வேறு எந்த விதமான தொழிலும் பார்க்க முடியாத நிலையில் இருக்கிறார்கள். இந்த நிலையைப் போக்குவதற்காகத்தான் இப்பொழுது பல நோக்குப் பள்ளிகள் ஆரம்பிக்கப்பட்டு வருகின்றன. இதன் மூலம் படிப்பு முடிந்த பிறகு ஏதாவது ஒரு தொழிலில் ஈடுபடுவதற்கு லாயக்குள்ளவர்களாக மாணவர்கள் ஆகிவிடுகிறார்கள். அந்த அடிப்படையில் தான் இப்படிப்பட்ட பள்ளிகள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. இந்த வருஷத்தில் கூட தமிழ் நாட்டில் பூராவுக்கும் 50 பள்ளிக்கூடங்களில் அத் திட்டம் விஸ்தரிக்கப்பட இருக்கின்றது. இப்படிப்பட்ட பல நோக்குப் பள்ளிகள் வரவேற்கத்தக்கதாக இருக்கிறது. அப்படி ஆரம்பிக்குபோது அதில் இஞ்சினீயரிங் பகுதி, செக்ரடேரியல் பகுதி, விவசாயப் பகுதி இப்படியெல்லாம் பல பகுதிகளை ஆரம்பிக்கப்போகிறார்கள். ஆனால் இஞ்சினீயர் பகுதிக்கு வேண்டிய ஆசிரியர்கள் கிடைக்கவில்லை. சில பள்ளிக்கூடங்களில் இந்தப் பகுதி இருந்தும் அந்த வகுப்பில் ஆசிரியர்கள் இல்லாமல் இருக்கிறார்கள். இப்பொழுது எஸ்.எஸ்.எல்.சி. பரீட்சை வரப்போகிறது. அப்படி ஆசிரியர்கள் இல்லாமல் இருந்து மாணவர்கள் அந்தப் பகுதிக்கு சேர்ந்திருந்தவர்கள் எப்படி பரீட்சை எழுதப்போகிறார்கள் என்பதுதான் தெரியவில்லை.

டைபர்கேட் கோர்ஸ் அதாவது பல்நோக்குப் பள்ளிகளை அமைக்க வேண்டும் என்று நாம் ஜில்லா போர்டுகளுக்கு கிராண்டு கொடுத்தால் அந்தப் பணத்தை அவர்கள் சரியான முறையில் செலவு செய்யாததால் அது வீணாக்கப்பட்டிருக்கிறது. கட்டிடங்களைக் கட்டாமலேயே பணத்தை பயன்படுத்திக்கொள்ளாமல் விட்டுவிடுகின்றார்கள். கட்டிடங்கள் கட்டப்படாமல் இருப்பதற்குக் காரணம் அவர்கள் கட்டிடங்களைக் கட்டுவதற்கு கண்ட்ராக்டர்களுக்கு விடப்போனால் கண்ட்ராக்டர்கள் கட்டிடங்களைக் கட்டுவதற்கு ஏற்றுக்கொள்வது இல்லை. காரணம் அவர்களுக்கு சரிவர ஜில்லா போர்டிலிருந்து பணம் வராமல் இருப்பதால் அவர்கள் காண்ட்ராக்ட் எடுத்துக்

16th March 1959] [Sri T. M. Nallaswami]

கொள்ள முன் வரமாட்டேன் என்று சொல்லுகிற காரணத்தால் பல கட்டிடங்கள் கட்டப்படாமலேயே இருக்கின்றன. அதன் காரணமாக அரசாங்கத்திலிருந்து கொடுக்கப்பட்ட கிராண்ட்கள் எல்லாம் விரயமாக்கப் பட்டிருக்கிறது. மாணவர்களுக்கு அந்த கிராண்ட் பணம் உபயோகப் பட முடியாத நிலைமையில் போய் விடுகிறது.

(Mr. Speaker rang the bell.)

**Sri T. M. Nallaswami** : One minute more, Sir.

இன்னும் அதிகப்படியான கருத்துக்களை இந்த மானிய கோரிக்கையின்கீழ் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. தலைவர் அவர்கள் முடித்து விடவேண்டும் என்று சொல்வதால் இதை முடித்துக்கொள்ளுகிறேன். ஆகவே இம்மாதிரியான குறைகளை நிவர்த்திக்க வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இதுபோன்று பல யோசனைகளை என்னைக் கேட்டால் அவைகளைச் சொல்வதற்கு தயாராக இருக்கிறேன் என்று சொல்லிக்கொண்டு என் உரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

**Mr. SPEAKER** : ஒரு விண்ணப்பம். கனம் அங்கத்தினர்கள் பேசுவதை சபாநாயகர் நிறுத்த வேண்டும் என்று சொல்லவில்லை. இந்த மானியத்திற்கு என்று கொடுக்கப்பட்ட நேரம் நான்கு மணிகள்தான். பதில் சொல்வதற்கு கனம் அமைச்சருக்கு ஒரு மணி நேரம் வேணடியதாக இருக்கிறது. எதிர் கட்சி தலைவர்களுக்கு அரை மணி நேரம் வேண்டியதாக இருக்கிறது. காங்கிரஸ் கட்சியில் பதினைந்து பேர்கள் பேசவேண்டுமென்று பெயர் கொடுத்திருக்கிறார்கள். ஆகவே இருக்கக்கூடிய நேரத்தை எப்படி பிரிப்பது என்பது தெரியவில்லை. ஆகவே தவறு என் பேரில் இல்லை. அரசாங்கம் கொடுத்திருக்கக்கூடிய நேரம் நான்கு மணிகள்தான். காலத்தை அதிகமாகக் கொடுத்து பேசச் சொன்னால் எனக்கு ஆட்சேபனை இல்லை. அதிகமாக அங்கத்தினர்கள் பேசவேண்டும் என்று பெயரைக் கொடுத்துவிட்டு நேரத்தை குறைவாகக் கொடுத்தால் சபாநாயகரால் ஒன்றும் செய்யமுடியாது. ஒன்று நேரத்தை அதிகமாக்க வேண்டும், இல்லாவிட்டால் அங்கத்தினர்கள் குறைவாக பேச முன் வரவேண்டும். அதனால் சபாநாயகர் பேரில் குற்றம் சொல்லி பிரயோசனம் இல்லை.

**Sri T. M. NALLASWAMI** : கனம் சபாநாயகர் மன்னிக்கவேண்டும். நான் குற்றம் சொல்லவில்லை. எப்பொழுதாவது அபூர்வமாக பேசுகிறவர்களுக்கு அதிகப்படியாக பேசுவதற்கு நேரம் கொடுக்கவேண்டும் என்பதுதான் என்னுடைய கோரிக்கை. அதனால் தான் கொஞ்சம் அதிகப்படியான நேரம் கேட்கிறேன்.

**Mr. SPEAKER** : அதற்கு 1½ மணிக்கு முடிக்காமல் 2 மணி வரையில் உட்காருவதற்கு அனுமதித்தால் அதிகப்படியான நேரம் கொடுப்பதற்கு எனக்கு ஆட்சேபனை இல்லை. நேரம் குறைவாக இருப்பதால்தான் பேசும் நேரத்தை குறைக்க வேண்டியதாக இருக்கிறது.

**Sri T. M. NALLASWAMI** : நிறுத்தவேண்டும் என்று சொல்வதானது பேசுவதை தடை செய்கிற மாதிரி இருக்கிறது என்று தான் நினைக்கிறேன்.

**Mr. SPEAKER** : அது சபாநாயகருடைய குற்றம் அல்ல. கொரடா குறைவான பெயர்களைக் கொடுத்தால் அதற்குத்தக்கபடி பேசுவதற்கு அனுமதிக்கலாம். அதிகப்படியான பெயர்களைக் கொடுத்தால் என்னால் ஒன்றும் செய்ய முடியாது. இப்பொழுது இருக்கிற நிலையில் கடைசியில் பேசக்கூடியவருக்கு ஐந்து நிமிஷங்கள்தான் வருமோ என்று கூடத் தோன்றுகிறது.

[16th March 1959

Sri S. RAMASAMI NAIDU : கனம் சபாநாயகர் அவர்களே, கல்வி மானியத்தை ஆதரித்துச் சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். தமிழ் என்ற பழம் தமிழ் இலக்கியம், தொல்காப்பியம் போன்றவைகள் இவைகள் தமிழ் பற்றுக்கொண்டுள்ளவை என்பது பராட்டத்தக்கது. தொல்காப்பியம், புறநானூறு, அகநானூறு, சிலப்பதிகாரம் போன்றவைகள் இருந்த காலம் வேறு, இன்றைக்கு நாம் இருக்கக்கூடிய காலம் வேறு என்பதை முதலில் நாம் தெரிந்துகொள்ளவேண்டும். பழைய நூல்கள் ஆராய்ச்சிக் குறியவைகள் என்றும் பழங்காலத்தில் தமிழர் எந்த வகையில் பயனடைந்தார்கள் என்பதும் அந்த நூல்கள் அந்தக் காலத்திற்கு ஆதாரமானது. அதை இந்தக் காலத்து கல்விக்கு எடுத்துக் காட்டவேண்டும் என்று சொல்வது ஒரு வகையிலும் பொருந்தாது என்பதை முதலில் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

கல்வியானது தமிழில் இருக்கவேண்டுமா, அல்லது இருக்க வேண்டாமா தமிழ் கல்வியாக இருக்க வேண்டுமா என்பதை நாம் ஆராய்ந்து ஓர் முடிவுக்கு வரவேண்டும். இந்தக் கல்வி தமிழிலேயே போதிக்கப்பட வேண்டும் என்றுதான் சத்தம் போடப்படுவதாக இருக்கிறதே தவிர தமிழிலேயே கல்வி இருக்கவேண்டும் என்று எண்ணுவதாகத் தெரியவில்லை. இன்றைக்கு சர்வ கலாசாலைகளில் உயர்ந்த படிப்புப் படிக்கிறவர்கள் பி.எ., எம்.எ., என்று சொல்லிக்கொண்டு பட்டம் பெற்று வருகிறார்கள். சாதாரணமாக அந்தப் பட்டங்களைக் குறிப்பிடும்போது அவைகள் ஆங்கில பி.எ., ஆங்கில எம்.எ. என்றுதான் கருதக்கூடியதாக இருக்கிறது. அதைப்போலவே தமிழ் பி.எ. தமிழ் எம்.எ., என்று சொல்லக்கூடிய அளவில் இருக்கவேண்டும். மேல்நாடுகளில் சாதாரணமாக ஆங்கிலத்தில் தான் கற்றுக் கொடுக்கப்படுகிறது. அதனால் சாதாரணமாக பி.எ. என்று சொல்லி விட்டால் அது ஆங்கில பி.எ.வைத்தான் குறிப்பிடும். அப்படி இல்லாமல், பி.எ., எம்.எ. என்று சொன்னவுடனேயே அது தமிழ் பி.எ., தமிழ் எம்.எ.யைக் குறிப்பிடுவது போன்ற முறையில் கல்வி அமையவேண்டும். அதை அனுசரித்து அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டும். ஆகவே இன்றைக்கு ஆங்கிலக் கல்விக்கு ஆதரவு கொடுப்பதுபோன்று தமிழ் கல்விக்கும் ஆதரவு கொடுக்கவேண்டும். அது ஒரு வகையில் பொருந்தாது என்றும் அதனால் ஆங்கிலத்திலேயே போதிக்கவேண்டும் என்றும் சொல்லுகிறார்கள் ; அது வேறு விஷயம். தமிழிலேயே எல்லா விஷயங்களும் போதிக்கப்பட வேண்டும், அது தமிழ் கல்வியாக இருக்கவேண்டும், இதற்கு எல்லோரும் பாடுபட வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக ஆரம்பக் கல்விக்கும் மற்றும் அதற்கு மேற்பட்டு உள்ள கல்விக்குத் தொடர்பு எப்படி இன்றைக்கு இருக்கிறது என்பதை நாம் ஆராயவேண்டும். சர்க்காருடைய அறிக்கையை படித்துப் பார்த்தால் இவைகளுக்குள் ஒரு தொடர்பு இருக்கவேண்டும் என்று ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இப்படிப்பட்ட ஒரு தொடர்பை முழு மூச்சுடன் புகுத்துவதற்குச் சந்தர்ப்பம் இல்லாத காரணத்தால் ஏழாவது வகுப்பு ஆரம்பக் கல்வியிலிருந்து 8 முதல் 11 வரையிலுள்ள உயர்நிலைக் கல்விக்கு ஒரே மூச்சாக எல்லா பள்ளிக்கூடங்களிலும் ஏழாவது வகுப்புக்குமேல் 8 முதல் 11-வது வகுப்பு வரையில் வைக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கிறது. அந்த முறையில் ஒரு முன்னேற்றம் அடையலாம் என்று வைத்திருக்கிறார்கள். இந்த அடிப்படையில் எட்டாவது வகுப்பு முதற்கொண்டு பள்ளிகளில் குழந்தைகள் இல்லாமல் திண்டாடுகிற நிலைமையில் இருக்கிறது. ஆகவே ஒன்று முதல் பாரம் முதற்கொண்டு தொடர்பாக இருக்கவேண்டும் அல்லது ஏழாவது வகுப்பு வரையில் படித்து விட்டு எட்டாவது வகுப்பிலிருந்து படிக்க உயர் நிலைப் பள்ளிகளில் ஏற்பாடு செய்யவேண்டும். இந்த முறையை இந்தக் கல்வி வருஷ ஆரம்பித்திலிருந்தே ஆரம்பித்து விட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக ஆசிரியர்களைப்பற்றி ஒரு வார்த்தை. சில ஆசிரியர்கள் பயிற்சி பெற்ற பிறகு கூட அவர்களுக்குத் தொழில் கிடைக்காமல் கஷ்டப்படுகிறார்கள் என்று சொல்லப்படுகிறது. இதற்கு இடமே இல்லை. சென்ற வருஷத்தை விட, அதற்கு முந்திய வருஷத்தை விட இந்த வருஷம்

16th March 1959] [Sri S. Ramasami Naidu]

பள்ளிகளில் பிள்ளைகள் இரண்டு பங்கு அதிகமாகச் சேர்ந்து படித்து வருகிறார்கள். இப்பொழுது குழந்தைகளுக்குப் படிக்க வேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டிருக்கிறது. கிராமங்களிலுள்ள பெற்றோர்களுக்கும் பிள்ளைகளைப் படிக்க வைக்கவேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டிருப்பதால் அதிகப்படியான பிள்ளைகள் இப்பொழுது படிக்க முன் வந்திருக்கிறார்கள். இப்பொழுதுள்ள நிலைமையில் இருபது பிள்ளைகளுக்குக் குறையாமலும் 35 பிள்ளைகளுக்கு அதிகமாக இல்லாமலும் இருந்தால் அந்த வகுப்புக்கு ஒரு ஆசிரியர் என்று திட்டமிடப்பட்டிருக்கிறது. இந்த 35-க்கு மேல் இரண்டு பிள்ளைகள் இருந்தாலும் அதிகப்படியான ஒரு ஆசிரியரை நியமிக்கலாம் என்ற வாய்ப்பு இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. ஆகவே முன்னைவிட இப்பொழுது அதிகப்படியான ஆசிரியர்களை நியமிக்க நல்ல வாய்ப்பு இருக்கிறது. ஒரு ஆசிரியர் இருந்த இடத்தில் இப்பொழுது இரண்டு ஆசிரியர்கள் வேலை செய்யக்கூடிய வாய்ப்பை சர்க்கார் ஏற்படுத்தியிருக்கிறார்கள். ஆகவே ஆசிரியர்களுக்கு வேலை கிடைக்கவில்லை என்ற குறையில்லை. ஏனென்றால் கிராமங்களில் குழந்தைகளும் அதிகப்படியாகப் பள்ளிகளில் சேர்ந்து படிக்க முற்பட்டிருக்கிறார்கள்.

மற்றும் ஆசிரியர்களுடைய கவனக் குறைவாலும், பெற்றோர்களுடைய கவனக் குறைவாலும் முதல் வகுப்பில் 35 பிள்ளைகள் இருந்தால் ஏழாவது வகுப்பில் ஐந்தாறு பிள்ளைகள் தான் இருக்கக்கூடிய நிலை இருக்கிறது. ஒரு ஊரிலுள்ள ஆசிரியரும் பெற்றோர்களும் ஒத்துழைத்தால் இப்படிப்பட்ட நிலை ஏற்படாமல் ஏழாவது வகுப்பில்கூட 35 பிள்ளைகளுக்கு 30 பிள்ளைகளாவது இருக்கக்கூடிய நிலையை உண்டு பண்ணலாம். அதற்கு வேண்டிய முயற்சி எடுத்துக்கொள்வதற்கும் வாய்ப்பு இருக்கிறது. முன்பு இருபது பிள்ளைகள் இருந்தால் ஐந்தாவது வகுப்பில் இப்பொழுது முப்பது பிள்ளைகள் இருக்கக்கூடிய வாய்ப்பு இருக்கிறது. அதேபோல் அந்தப் பள்ளியில் 80 பிள்ளைகள் இருந்தால் இப்பொழுது 140 பிள்ளைகள் இருக்கக்கூடிய வாய்ப்பு இருக்கிறது. ஆகவே இரண்டு மூன்று ஆசிரியர்கள் அதிகமாக வேலை செய்யக்கூடிய வாய்ப்பு இப்பொழுது இருக்கிறது. இதை நல்ல முறையில் பயன்படுத்திக்கொள்ள ஆசிரியர்களும் பெற்றோர்களும் அறிவாளிகளாகி ஒத்துழைக்க முற்படவேண்டும். இப்படி அவர்கள் முயற்சி எடுத்துக்கொண்டால் அவர்களுக்குப் போதுமான வேலையும் ஊதியமும் கிடைத்துக்கொண்டே இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. சர்க்காருடைய நோக்கமும் அதுதான். இன்றைக்கு ஆசிரியர்கள் முயற்சி செய்து பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கவேண்டும். அவர்களுடைய தொழில் என்ற எண்ணத்தில்தான் இன்றைக்கு இந்த ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்கள் என்பதை ஆசிரியர்கள் உணர்ந்து பாடுபடவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

ஆசிரியர்களுக்கு இன்னொரு வேண்டுகோள் விடுக்க விரும்புகிறேன். இன்றைக்கு உயர்நிலைப் பள்ளியை எடுத்துக்கொண்டால் 150 நாட்கள் தான் வேலை நாட்கள். வருஷத்தில் மூன்று முறை பரீட்சை நடக்கிறது. அதற்குப் பிறகு விடுமுறை நாட்கள். பள்ளி ஆரம்பத்தில் புத்தகம் வாங்குவதற்குள் 10 நாட்கள் கழிந்துவிடும். இப்படிப் பல நாட்கள் கழிந்த பிறகு 120 நாட்கள் தான் படிப்புக்குத் தேறும். ஒரு ஆசிரியர் ஒரு நாளைக்கு 3 மணி நேரம் வீதம் ஆண்டொன்றுக்கு 360 மணி நேரந் தான் வேலை செய்யவேண்டி இருக்கும். ஆரம்பப் பள்ளிகளாக இருந்தால் 420 மணி நேரம் வேலை செய்யவேண்டியிருக்கும். இவ்வளவு குறைந்த அளவில் வேலை செய்யும் இவர்கள் ஓய்வு நேரங்களில் மக்களிடம் தொடர்பு வைத்துக்கொள்ளவேண்டும். தாங்கள் கற்றுக்கொடுக்கவேண்டிய விஷயங்களைப் பற்றித் தீர ஆலோசித்து நல்ல முறையில் பாடங்களைக் கற்றுத் தர பாடுபடவேண்டும். அப்பொழுதுதான் நம்முடைய சர்க்கார் எடுத்துக் கொண்ட முயற்சி பூரணமாகப் பலன் பெறும். அப்பொழுதுதான் அதனால் பிரயோஜனம் ஏற்படும். ஆசிரியர்கள் தாங்கள் பள்ளியில் வேலை செய்யக்கூடிய நேரத்தைத் தவிர மீதி நேரங்களில் தாங்கள் ஊருக்குச் சேவகர்கள் என்பதை மறந்து, ஊருக்காக உழைக்கவேண்டியவர்கள் என்பதை மறந்து தங்களுடைய சம்பளம் வழ மக்களிடம் இருந்து பெறுவது என்பதை மறந்து மணிக் கணக்கைப் பார்த்துக் கொண்டிருப்பதானது, இன்னும் அவர்கள் தங்கள் தொழிலைச் சரியானபடி ஊக்கத்

[Sri S. Ramasami Naidu] [16th March 1959

துடன் செய்யவில்லை என்பதைத்தான் காட்டுகிறது. ஆசிரியர்கள் அவ்வாறு இருப்பது அவர்கள் தாங்களாகவே தங்கள் நிலையைத் தாழ்த்திக்கொள்ளு கிருர்கள் என்பதைத்தான் காட்டுகிறது என்பதை வற்புறுத்திக் கூற விரும்புகிறேன்.

மத்தியான உணவைப் பற்றி ஒருசில வார்த்தைகள் சொல்லவிரும்பு கிறேன். சில ஊர்களில் சில தனவந்தர்கள் சாதாரணமாகச் செய்து கொண்டிருந்த திட்டம் இன்று பரவலாக எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் நடத்தப்பட்டு வருகிறது. ஒரு நல்ல திட்டத்தை உருவாக்கி செயலாற்றிக் கொண்டு வருவதென்ருல் அது விசேஷமான காரியந்தான். எல்லோரும் பல நல்ல திட்டங்களைப் பற்றி எண்ணுவர். ஆனுல் அதைச் செய்ய முடியுமோ முடியாதோ என்று சந்தேகப்பட்டுக்கொண்டே இருப்பர். கல்வித் துறை டைரக்டர் அவர்களும், கல்வி அமைச்சர் அவர்களும் சேர்ந்து கொண்டு வந்த இந்தத் திட்டம் மிகவும் போற்றத்தக்கது. இன்று பல பள்ளிக்கூடங்களில் மத்தியான உணவு ஏழைப் பிள்ளைகளுக்காக கொடுக் கப்பட்டு வருகிறது. இந்த வகையில் கிராமங்களுக்கும் சிறிது வசதி செய்து கொடுக்கச் சர்க்கார் கடமைப்பட்டிருக்கிறது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். எப்படி முடியும் என்று கேட்கலாம். உச்ச வரம்பு வரும் காலத்தில் அதன் மூலமாகக் கிடைக்கும் உபரி நிலங்களில் இருந்து கிடைக் கும் உணவுப் பண்டங்களை முதலில் ஏழை மாணவர்களுக்குக் கொடுக்க வேண்டுமென்ற ஒரு பிரிவைச் சட்டத்தில் சேர்க்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இரண்டாவதாக இன்று எல்லா ஊர்களிலும் பஞ்சாயத்துக்கள் ஏற் பட்டு விட்டன. அந்தப் பஞ்சாயத்துக்கள் மத்தியான உணவுக்காக ஏதா வது வரி விதிக்க வேண்டுமென்ருல் இப்பொழுது இருக்கக்கூடிய சட்டப்படி அவ்வாறு செய்வதற்கு வழி இல்லை. அந்தப் பஞ்சாயத்துகள் மத்தியான உணவுக்காக வரி விதிக்க அனுமதி கொடுக்கும் வகையில் சட்டத்திலே திருத்தம் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இப்பொழுது பள்ளிச் சீரமைப்புத் திட்டம் நடக்கிறது. அந்தச் சீர மைப்புத் திட்டம் சட்டசபை அங்கத்தினர்கள் கலந்து கொள்ளாமல் நடக் கிறது என்று சொன்னுர்கள். அது ஒன்றும் பெரிய காரியமல்ல. உண்மை ஊழியர்கள் அவர்களாகவே சேர்ந்துகொள்ளுவார்கள். நம் மக்கள் எவ்வளவு தாராளமாகப் பள்ளிகளின் குறைகளைத் தீர்க்க முன் வருகிருர்கள் என்பதைப் பார்க்கும்போது ஒருவர் இருவர் கொடுத்ததை வைத்துக்கொண்டு இந்தத் திட்டத்தைப் பரவலாக ஆக்கி மக்களுடைய ஆர்வத்தைத் தூண்டினுல் மேலும் பள்ளிகளுக்கு வேண்டிய வசதிகளை நாம் பெற முடியும். இந்தத் திட்டத்தை நடத்தி வருகிற இலாகாவுக்கும், அமைச்சர் அவர்களுக்கும் என்னுடைய பாராட்டுதல்கள். லட்சக்கணக்கான பொருள்கள் பள்ளிக் கட்டிடங்களுக்காக தாராளமாக கிராம மக்கள் கொடுத்து வருகிருர்கள். வருஷம் ஒரு தடவை இந்த இயக்கத்தை மேற் கொண்டு கிராமத்தில் குறைகள் இருக்கும் பள்ளிகளைச் சீரமைப்பு செய்ய ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

சட்டிடங்கள் பற்றி ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். ஆரம்பப் பள்ளிக்கூடங்களுக்குக் கட்டிடங்கள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் ஆசிரி யர்கள் கூடியிருக்க கட்டாயம் கட்டிடங்கள் கட்டிக்கொடுக்க வேண்டும். பாதித் தொகை மானியமாகக் கொடுத்தால் கட்டிடம் கொடுக்க முடியும். ஸ்தல ஸ்தாபனங்கள் கட்டிடம் கட்ட வேண்டுமென்ருல் அவர்கள் ஒரு பகுதி ரூபாய் கொடுக்கவேண்டி இருக்கிறது. அது முடியாத காரணத்தால் சர்க்காரிடம் மானியம் வாங்கத் தயங்குகின்றனர். கிராமங்களில் தனிப் பட்டவர்கள் தங்களிடம் இருக்கும் ஸ்தல ஸ்தாபன நிலங்களில் கட்டிடம் கட்டிக்கொண்டிருக்கிருர்கள். அப்படிப்பட்ட பள்ளிகளுக்கு மானியம் கொடுக்கப்படவில்லை. முடிவிலே (Mr. Speaker rang thg bell).

SRI S. RAMASAMI NAIDU : One minute more, Sir.

MR. SPEAKER : மன்னிக்கவேண்டும். மணி அடித்தவுடன் உட் கார்ந்து விடவேண்டும். இன்னும் 3 அங்கத்தினர்கள் பேசலாம். ஒவ் வொருவருக்கும் 7 நிமிஷம் கொடுக்கிறேன்.

16th March 1959]

SRI M. P. SUBRAMANIAM : அவைத் தலைவர் அவர்களே, இந்தக் கல்வி மானியத்தின் மீது கொடுக்கப்பட்ட வெட்டுப் பிரரேபணையை ஆதரித்துச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன்.

"இந்தக் கல்வித் திட்டம் அமைப்பதன் நோக்கம் ஜாதியற்ற, வர்க்க மற்ற சமுதாயத்தை அமைப்பது" என்று சென்ற ஆண்டும் இந்த ஆண்டும் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டது வரவேற்கத் தக்கது. அதற்குத் தகுந்த வகையில் அப்படிப்பட்ட திட்டங்கள் அமைந்திருக்கின்றதா என்பது சிந்தனைக்குரிய விஷயம். இரண்டாவதாக, இந்தக் கல்விக்காக ஒதுக்கப் பட்ட தொகை ஆண்டுதோறும் கூடுதலாகிக் கொண்டிருக்கிறதா என்று பார்த்தால் சென்ற ஆண்டு 20 சத விகிதமாக இருந்தது, 9 சத விகிதமாகக் குறைந்திருக்கிறது. ஆரம்பக் கல்விக்குக் கடந்த ஆண்டை விட 4 லட்சம் ரூபாய் குறைவாக ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பதை நான் இங்கே பார்த் தேன். அதற்கு என்ன காரணம் என்று என்றால் புரிந்துகொள்ள முடியவில்லை.

குறிப்பாக ஆரம்பக் கல்வி ஆசிரியர்களின் எண்ணிக்கை குறைந்துவிட்டது என்று சொல்லுவதில் தவறில்லை. அவ்வாறு இருப்பதற்கு முக்கியமாக இருக்கும்படியான காரணம் மாணவர்கள் எண்ணிக்கையையும் ஆசிரியர் கள் எண்ணிக்கையையும் விகிதாசாரப்படி பார்த்தால் ஆசிரியர்கள் எண் ணிக்கை அதிகமாக இருக்கிறது என்று கூறுகிறார்கள். ஒரு ஆரம்பக் கல்வி ஆசிரியர் 35 மாணவர்களைக் கண்காணிக்க வேண்டி இருக்கிறது. வீட்டில் 5 பிள்ளைகளை வைத்துக்கொண்டு சமாளிப்பதே பெரிய காரியமாக இருக்கும்போது ஒரு ஆசிரியர் 35 மாணவர்களைக் கண்காணிக்க வேண்டு மென்றால் உண்மையிலேயே அது மிகவும் கஷ்டமான காரியம். அவர் களைக் கண்காணிப்பதுதான் பெரிய பிரச்சனையாக இருக்குமே தவிர பாடம் ஒன்றும் சரியான முறையில் சொல்லிக் கொடுக்க முடியாது. ஆகவே நல்ல முறையில் ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் நடைபெற பள்ளி ஆசிரியர் களின் எண்ணிக்கையை அதிகப்படுத்த வேண்டுமென்று நான் கூற விரும்புகிறேன்.

மற்றும் ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் செகண்டரி கிரேடு பயிற்சி பெற்ற ஆசிரியர்களும், ஹையர் கிரேடு பயிற்சி பெற்ற ஆசிரியர்களும் வேலை பார்த்து வருகிறார்கள். நாட்டாண்மைக் கழகப் பள்ளிக்கூடங்களில் பல ஹையர் கிரேட் பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் 2, 3 வருஷ காலமாக வேலை பார்த்து வந்தார்கள். ஆனால் புதிதாக செகண்டரி கிரேடு ஆசிரியர்கள் வந்து விட்டால் அவர்களை மாற்றி விடுகிறார்கள். பள்ளிக்கூட ஆசிரியர்களை மாற்றுவதை ஒரு சந்தர்ப்பத்தில் செய்தால் நல்லது. ஒரு ஆண்டு முடிந்த வுடன் அவர்களை மாற்றுவது நல்லது. இடையில் மாற்றவேண்டுமானால் அவர்கள் கல்வி இலாகாவைக் கலந்துகொண்டு செய்ய வேண்டும் என்ற புகார் எங்கள் மாவட்டத்தில் கூறப்பட்டது. அது பற்றி ஆலோசனை செய்து இறுதியில் கல்வி இலாகாவைக் கலந்து கொள்ளாமலேயே கூட இடையில் அவர்களை மாற்றலாம் என்று சொல்லி விட்டார்கள். அதனால் பள்ளிகள் நல்ல முறையில் நடக்காது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

12 noon.

அடுத்தபடியாக உயர்நிலைப் பள்ளிகளில், எஸ்.எஸ்.எல்.ஸி. பரீட்ச் சைக்குப் போவதற்கு தேர்வுப் பரிட்சை நடத்தி மாணவர்களை நிறுத்தி விடுவதாகக் கேள்விப்படுகிறேன். பல பள்ளிகளில் இம்முறை இல்லை. சில பள்ளிகளில் கொண்டுவரப்பட்டிருக்கிறது. இது சரியல்ல என்று கல்வி இலாகா டைரெக்டர் கூட அடிக்கடி வெளியில் பேசி வருகிறார்கள். வெளியில் பேசுவதைவிட அமைச்சர் அவர்களும், கல்வி இலாகா அதிகாரி அவர்களும் இதைப்பற்றிக் கலந்து கொண்டு இது அவசியமா, என்று பார்த்து அவசியம் இல்லையென்றால் இம்முறையை அடியோடு ஒழித்து விடுவதற்குத் தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக ஆசிரியர்களுக்கு வீடு கட்டித் தரும் திட்டத்தின்கீழ் மத்திய அரசாங்கம் மொத்தச் செலவில் 75 பர் செண்ட் ஒத்துக்கொள்ளக் கூடிய திட்டம் ஒன்று வகுக்கப்பட்டு, அதன் கீழ் கட்டப்படுகிற வீடுகள் கிராமாந்திரங்களிலே இருக்கக் கூடிய ஜில்லா போர்டு பெண் ஆசிரியர் களுக்கு ஒதுக்கப்படும் என்பதாகத் தெரிகிறது. குறிப்பாக 1958–59-ம்

[Sri M. P. Subramaniam] [16th March 1959

வருஷத்திற்கு மத்திய சர்க்கார் 4.95 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருப்பதாகவும் இந்த இனத்திற்கு நமது மாநில சர்க்கார் 1·65 லட்சம் ஒதுக்கியிருப்ப தாகவும் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் இந்த இனத்தில் இதுவரை எவ் வளவு வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன என்கிற புள்ளி விவரம் எதுவும் கொடுக்கப்படவில்லை. சேலம் மாவட்டத்தைப் பொறுத்த வரையில் இந்த மாதிரியான திட்டத்தின்கீழ் எந்த இடத்திலும் வீடுகள் கட்டப்பட்டிருப்ப தாகத் தெரியவில்லை. ஆகவே இனத்தில் எத்தனை வீடுகள் கட்டப்பட்டிருக் கின்றன, எந்த எந்த மாவட்டத்திலே கட்டப்பட்டிருக்கிறது என்கிற விஷ யத்தையும் கனம் அமைச்சர் அவர்கள் விளக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக மலைப்பிராந்தியங்களில் உள்ள பள்ளிக்கூடங்களுக்குச் சென்று வேலை செய்ய ஆசிரியர்கள் விரும்புவதில்லை. அங்கே பல கஷ்டங்கள் அவர்களுக்கு இருக்கின்றன. ஆகவே ஹில் அலவன்சு என்றாவது அந்த ஆசிரியர்களைப் பொறுத்தமட்டில் கொடுப்பதற்கு அரசாங்கம் முன் வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக உயர்நிலைப் பள்ளிகள் ஏற்படுத்த வேண்டுமென்றால் அதற்குப் பக்கா கட்டிடம் இருந்தால்தான் அனுமதி அளிக்கப்படுகிறது, அதற்காக இருபதாயிரம், நாற்பதாயிரம் என்று ஏராளமாகச் செலவு செய்ய வேண்டியிருக்கிறது. அதன் காரணமாக அதிகமான பள்ளிகளை ஏற்படுத்துவதற்கு முடியவில்லை. ஆகவே உயர்நிலைப் பள்ளி கூரைக் கொட்டகையில் ஆரம்பிப்பதாக இருந்தாலும் மாணவர்கள் தங்கிப் படிப்ப தற்குப் போதுமான இடம் இருக்கிறது என்றால் போதுமானது என்று செய்தால் நல்லது என்று இங்கே சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக கல்லூரிகளில் தமிழ் மொழியின் மூலம் போதிப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டும். சட்டங்கள் கல்லூரிக்கு ஒரு விடுதி கட்ட வேண்டுமென்று கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். அந்தக் கல்லூரிக்கு இரண்டு லட்சத்திற்கு மேற்பட்ட வருமானம் கிடைக் கிறது. செலவினம் ஒன்றரை லட்சம்தான் ஆகிறது. அந்தக் கல்லூரிக்கு ஒரு விடுதி கட்ட வேண்டுமென்ற கோரிக்கை அமைச்சர் அவர்களிடத்தி லும் வந்திருக்கிறது. ஆகவே அடுத்த ஆண்டிலாவது இந்த விடுதியைக் கட்டுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

முப்பத்தெட்டு லட்சத்திற்கும் மேற்பட்ட ஜனத் தொகை கொண்ட சேலம் மாவட்டத்தில் இரண்டாவது கல்லூரி இல்லை. இருக்கக் கூடிய ஒரு கல்லூரியும் முனிசிபல் கல்லூரியாக இயங்கி வருகிறது. இதைச் சர்க்கார் எடுத்துக்கொள்ளக்கூடிய யோசனை என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. உடனடியாக இந்த முனிசிபல் கல்லூரியை அரசாங்கக் கல்லூரியாக எடுத்துக் கொள்வதோடுகூட இன்னொரு கல்லூரி—குறிப்பாக பெண்கள் கல்லூரி யாக ஏற்படுத்துவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

* **Sri K. P. PALANISWAMI** : தலைவர் அவர்களே, இன்று நமது கல்வி அமைச்சர் அவர்கள் கல்வித் துறைக்காகக் கோரியிருக்கும் மானி யத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் பேச ஆசைப்படுகிறேன். நமது ராஜ்யத்தில் கடந்த பத்தாண்டு காலத்தில் கல்வித் துறையில் அதிக முன் னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்பதை எல்லோரும் ஒத்துக்கொண்டாலும் விவாதத்திற்காக சிலர் குறை கூறுகிறார்கள். இன்றையதினம் பார்த்தால் ஒவ்வொரு கிராமத்திலும் பள்ளிக்கூடம் ஏற்பட்டிருக்கிறது. பத்து ஆண்டு காலங்களுக்கு முன்னால் ஒரு ஊரில் உள்ள பையன் உயர்நிலைப் பள்ளியில் படிக்க வேண்டுமென்றால், ஐந்து மைல், பத்து மைல் சைக்கிளில் போய் வரும்படி இருக்கும். அல்லது நடந்து போய்ப் படித்து வரும்படியாக இருக்கும். ஆனால் இன்றையதினம் மூன்று மைல் விஸ்தீர்ணத்திற்குள்ளேயே படிப்பதற்கு வசதி ஏற்பட்டிருக்கிறது. இன்றையதினம் இந்தக் கல்வித் துறையின் வளர்ச்சிக்காக நமது ராஜ்ய பட்ஜெட்டில் 5-ல் ஒரு பங்கு இதற் காக ஒதுக்கப்பட்டிருக்கிறது என்றால் அதை நாம் எல்லோரும் மிக்க

பெருமையுடன் வரவேற்க வேண்டியவர்ளாக இருக்கிறோம். உண்மையிலேயே நாடு முன்னேற்றம் அடைய வேண்டுமென்றால்—இன்ஜினீயரிங் கல்லூரியில் படித்தவர்களின் எண்ணிக்கை அதிகம், எம்.பி.பி.எஸ். படித்தவர்களின் எண்ணிக்கை அதிகம் என்பதால் மட்டும்—நாடு முன்னேற்றம் அடைந்துவிட்டதாக எண்ண முடியாது. இந்த நாட்டிலுள்ள மக்கள் எல்லோருக்கும் எழுதப் படிக்கவாவது தெரிய வேண்டும். இந்த லட்சியத்தை அடிப்படையாகக் கொண்டே நமது அரசாங்கம் பல திட்டங்களை வகுத்திருக்கிறார்கள். எல்லாவற்றையும் அரசாங்கமே எடுத்துச் செய்வது என்பது சாத்தியமல்ல. அதற்காகவே அரசாங்கம் பள்ளிச் சீரமைப்புத் திட்டத்தை வகுத்திருக்கிறார்கள். இதற்காக மாவட்டங்களில் மகாநாடுகள் கூட்டிய போது பொதுமக்களிடத்திலிருந்து இதற்கு ஏராளமான ஆதரவு கிடைத்திருக்கிறது. கனம் அன்பழகன் கூடச் சொன்னார்கள்—இப்படி ஆசிரியர்களைப் போய்க் கேட்கச் சொல்வது சரியல்ல என்பதாக. இதில் என்ன தவறு இருக்கிறதென்றுதான் தெரியவில்லை. பிச்சை புகினும் கற்கை நன்றே என்றுதான் சொன்னார்கள். எப்படியாவது மக்களுக்குப் பல பல வசதிகளைச் செய்து கொடுத்து எல்லோரையும் படித்தவர்களாகச் செய்ய வேண்டுமென்ற லட்சியத்தை அடைவதற்கு—ஏன் இப்படி அந்த அந்த ஊர்களில் உள்ளவர்கள் கேட்கக் கூடாது, அப்படிக் கேட்பதற்கும் மக்களிடத்திலிருந்து அதிகமான ஆதரவு வரும்போது, இதில் ஒன்றும் தவறில்லை என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே மக்களிடத்தில் போய் இப்படிக் கெஞ்சுகிறோம் என்று சொல்வது மிகவும் நன்றாக இல்லையென்று சொல்லிக்கொள்கிறேன்.

இன்னும் ஒரு வகுப்பில் 35 மாணவர்களுக்குப் பதிலாக 25 மாணவர்கள் இருந்தால்தான் நல்லது என்கிற கருத்தைத் தெரிவித்தார்கள். முப்பத்து ஐந்து என்று இருப்பதே நல்லது. ஆசிரியர்கள் நல்ல முறையில் தான் பாடம் சொல்லிக் கொடுத்து வருகிறார்கள். இப்படி இருப்பதால் அதிக மாணவர்கள் படிக்கவும் வசதி ஏற்படுகிறது. 5-ல், ஒரு பாகம் செலவும் குறைகிறது. ஆகவே இப்போது 35 என்று வைத்திருப்பதே அதிகம் இல்லை, இப்படியே இருக்கலாம் என்று நான் நினைக்கிறேன.

அது மாத்திரமல்ல. இப்போது ஆரம்ப ஆசிரியர்களுக்கு 66 ரூபாய் சம்பளம் கொடுக்கிறோம், செகண்டரி கிரேட் ஆசிரியர்களுக்கு 84 ரூபாய் கொடுக்கிறோம். இது அவர்களுக்குப் போதவில்லை என்று சொல்லலாம். ஆனால் நாள் ஒன்றுக்கு ஒரு ரூபாய் கூட வருமானம் இல்லாதவர்கள் இருக்கக்கூடிய கிராமத்திலே அவர்களுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுப்பதற்காக, அவர்கள் குழந்தைகளுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுப்பதற்காக உருவாக்கி இருக்கக்கூடிய திட்டம் இது. ஆகவே பணம் போதவில்லை என்ற வெறுங் கூக்குரலை எழுப்பாது இருப்பது நலம். அவர்களுடைய நிலைமையை அரசாங்கம் நிதி நிலைமைக் கேற்ப கவனித்துக்கொள்ளும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதோடு கிராமங்களில் உள்ள ஹரிஜன மக்கள் முன்னேற வேண்டும் என்று பல ஸ்காலர்ஷிப் கொடுக்கிறோம். ஐம்பது சத விகித மார்க்கு வாங்கியிருக்கிற பிள்ளைகளுக்குத்தான் அந்தச் சமூகத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் ஸ்காலர்ஷிப் வழங்குவது என்கிற கொள்கையை வகுத்திருப்பதாகத் தெரிகிறது. அப்படி இருப்பது தவறு. தாழ்த்தப்பட்ட மாணவர்களிடத்தில்—மிகவும் பிற்போக்காக பொருளாதாரத் துறையில், அறிவுத் துறையில் இருக்கக்கூடியவர்களுக்கு 50 சத விகிதம் மார்க் வேண்டுமென்று நிர்ணயிப்பது கூடாது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதை நீக்க வேண்டும். அதோடு மத்தியான உணவு கொடுக்கிறார்கள். இது நல்ல முறையில் நடக்கிறது. இது வரவேற்க வேண்டிய விஷயமாகும். அதோடு 100 ரூபாய்க்கு மேல் இருக்கக்கூடிய தொழிலாளர்களுடைய குழந்தைக்குச் சம்பளம் உண்டு. குறைந்தவர்களுக்கு இல்லை என்று இருக்கிறது. நூறு ரூபாய் உடையவனுக்கு 5 குழந்தைகள் படிக்கும்படியாக இருக்கும். தொண்ணூற்று ஒன்பது ரூபாய் உடையவனுக்கு ஒரு குழந்தைதான் இருக்கும். இவனுக்குச் சம்பளம் இல்லை, அவனுடைய 5 குழந்தைகளுக்கும் சம்பளம் உண்டு என்பது சரியல்ல. இதையும் கவனித்துத் தக்க முறையில் இதைச் சீர்திருத்தி அமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

12 10 a.m.

கிராமப் பகுதியிலே பெண் ஆசிரியர்கள் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். குறிப்பாக அவர்களுக்கு நல்ல முறையில் வீடு கட்டிக் கொடுப்பதற்கு வழி வகை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இதற்குப் பொது மக்களாலும் பணம் கொடுக்கப்படுகிறது. கிராமங்களிலிருந்து பல ரிபோர்ட்டுகள் வருகின்றன. பள்ளிக்கூடத்தின் பக்கத்தில் அவர்களுக்கு வீடு கட்டிக் கொடுத்தால், அவர்கள் பள்ளிக்கூடத்திற்குப் போவதற்கும் வருவதற்கும் சௌகரியமாக இருக்கும். பள்ளிக்கூடங்களில் ஸ்பெஷல் பீஸ் இன்னும் கேட்கப்பட்டு வருகிறது. இந்த ஸ்பெஷல் பீஸ் கொடுப்பதற்கு மாணவர்களின் பெற்றோர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். இன்னும் மத்தியான உணவிற்கு வேண்டிய வசதிகளை எல்லாம் உடனடியாகச் செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

* **SRI T. S. RAMASWAMY PILLAI** : கனம் தலைவர் அவர்களே, நம்முடைய அரசியல் சட்டதிலும் சரி, அதன் பின்னர் வந்த அரசங்கச் சட்டத்திலும் சரி நாம் ஏற்றுக்கொண்டிருக்கிறோம் பத்து வருஷங்களுக்குள்ளாக 14 வயது வரையில் இலவசக் கல்வி அளித்தாக வேண்டுமென்பதை நமது நோக்கமாக ஏற்றுக்கொண்டிருக்கிறோம். ஆனால் 10 வருஷம் ஆகும்போது இன்னும் இந்த லட்சியம் கைகூடவில்லையே என்று கேட்டுக் கொண்டிருப்பவர்களில் நானும் ஒருவன். இதைபற்றிப் பல கேள்விகள் கேட்டபோதுகூட அமைச்சர் அவர்கள் கூறினார்கள், குந்தா ராஜ்யத்தில் சமீபத்தில் எல்லா இடங்களிலும் கட்டாயக் கல்வியை அமுல் நடத்த முடியாது, இப்பொழுதுள்ள நிதி நிலைமையால், அன்று பிளானிங் கமிஷனுக்கு அளித்த பெருமை எங்களுக்கு உண்டு என்றும், இதற்கு பெருமைபட என்ன இருக்கிறது என்று நான் கூறியதாக ஞாபகம் இருக்கிறது. இதைப் பற்றி வருத்தம் கொண்டிருந்த நான் இந்த அறிக்கையைப் பார்த்து மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன். மூன்றில் ஒரு பங்கு கட்டாயக் கல்வி பெறக்கூடிய பகுதியாக இருக்கும் என்பதும், 5–வதுவரை கட்டாயமாகப் படிக்க வேண்டும் என்றும், அதன் பின்னர் வயது வந்த குழந்தைகள் எல்லோரும் படித்தாக வேண்டுமென்ற சட்டம் வருவதாக அறிந்து மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன். இதற்காக அமைச்சர் அவர்களை நிச்சயமாகப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன். ஜனநாயகம் வளர பல பிரச்னைகளை நன்றாக ஆராய்ந்து செயல்பட எழுத்தறிவு நிச்சயம் வேண்டும். அதுவும் சென்னை ராஜ்யம் கல்வித் துறையில் மிகவும் பின் தங்கி இருக்கிறது. நிச்சயம் கட்டாயக் கல்வி அவசியம் என்று உணர்ந்து எத்தனையோ முயற்சிகள் செய்திருக்கிறோம். அவைகளை எல்லாம் சமாளித்து, இன்றையதினம் இருக்கக் கூடிய நிலைமையில் படிப்படியாகச் செய்ய நம் ராஜ்யத்தில் 3–ல் ஒரு பகுதியில் உடனடியாக ஆரம்பிக்கப் போகிறோம் என்ற செய்தி மட்டற்ற மகிழ்ச்சியை அளிக்கிறது. நாம் எடுத்துக்கொள்ளும் முதல் நடவடிக்கை ஜனநாயகத்திற்கு முன்னோடியான பாதை என்று ஒத்துக்கொள்கிறேன். அதற்காக நான் அரசாங்கத்தைப் பாராட்டுகிறேன். அடுத்து இன்னொரு விஷயத்தையும் சொல்ல நினைக்கிறேன். இப்பொழுது கொடுக்கப்பட்டிருக்கிற அறிக்கையைப் பார்த்தால் பெரு மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. முக்கியமாகக் கன்யாகுமரி ஜில்லா மக்களுக்கு இன்று பாலி டெக்னிக் இல்லை. மற்ற எல்லா ஜில்லாக்களிலும் இருக்கிறது. கன்யாகுமரியில் இல்லை. ஹிந்து கல்லூரியை ஜனங்களாகவே ஏற்படுத்துவதற்கு முயற்சி எடுக்கலாம் என்ற முயற்சி ஒரு பக்கம் நடந்துகொண்டிருக்கிறது. இந்த வருஷம் வருமோ வராதோ என்ற ஐயப்பாடு இருக்கும் நேரத்தில் அரசாங்கமே மத்திய சர்க்காருடைய உதவியோடு ஒரு பாலி டெக்னிக்கை அங்கே ஆரம்பிக்கப் போகிறார்கள் என்று அறிந்து கன்யாகுமரி ஜனங்களின் சார்பாக நன்றி சொல்லக் கடமைப்பட்டுள்ளேன்.

இன்னொரு விஷயத்தைக் குறிப்பிட வேண்டும். தாழ்த்தப்பட்ட மாணவர்களைப் பொறுத்த வரையில் பீஸ் சலுகை, ஸ்காலர்ஷிப் கொடுக்கிற அளவிலே எங்களுடைய அநுபவம் கன்யாகுமரி பகுதியிலே, ரீஆர்கனைசேஷனுக்கு முன்னால் பள்ளிக்கூடம் திறந்த ஒரு மாதத்திற்கு Special Fees கிடைத்து வந்திருக்கிறது. ஆர்கனைசேஷனுக்குப் பின்னால் இங்கு எதன் காரணமாக அதற்குப் பின்னால் கிடைக்கவில்லை என்று தெரியவில்லை. கலெக்டரிடம் நிர்வாகம் இருப்பதினாலே அந்தப் பள்ளிக்கூடப் பிள்ளைகள்

ஸ்பெஷல் பீஸ் கட்டாததினுல் எத்தனையோ பேர்கள் விலக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டிய பணம் அதன் பிறகு வந்திருக்கிறது. இதனால் ஏழை மாணவர்களுக்குப் பிரயோசனப்படுவது கிடையாது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இன்னொரு விஷயத்தை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவர நினைக்கிறேன். அவர்களுக்குக் கொடுக்கக் கூடிய பணத்தை ஹரிஜன இலாகா மூலமாகக் கொடுக்காமல் கல்வி இலாகாவிலிருந்து நேரடியாகக் கொடுத்தால் மிகவும் நலமாக இருக்கும், இல்லை என்றால் இதனால் அதிக நாளாகிவிடுகிறது.

அதோடு இன்னொரு விஷயத்தைக் குறிப்பிட வேண்டும். இந்த அறிக்கையிலே கூறியிருக்கிறார்கள் என்ஜினீயரிங்—அதாவது தொழிலியல் கல்லூரிகளில்

"In order to select the best material for admission to all the colleges, both private and Governm nt, in the State to eliminate the inconvenience caused to the students in having to seek admission to all the colleges in the State in order to ensure a seat in any one, a Common Selection Committee was constituted last year for the selection of candida es for admission to the colleges affiliated to the Madras University."

அதைப் புதிதாக ஏற்படுத்துவதைப் பற்றி சந்தோஷம், பிரைவேட் கல்லூரிகளுக்குக்கூட ஏதாவது செய்ய வேண்டும். தனியார், "பெஸ்ட் மெடீரியல்" செலக்ட் செய்வதற்கான வழி வகைகளை ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**Mr. SPEAKER** : கடைசியாக கனம் அங்கத்தினர் ஸ்ரீ பி. எஸ். சின்னதுரை அவர்களுக்கு 15 நிமிஷம் கொடுக்கிறேன்.

***Sri P. S. CHINNADURAI** : மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, இந்த ஆண்டிலே கல்விக்காக ஒதுக்கப்பட்டிருக்கிற 13 கோடி சொச்சம் ரூபாய் போதாது என்று வற்புறுத்துகிற முறையில் இப்பொழுது கொண்டு வந்திருக்கும் வெட்டுப் பிரேரேபணையை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கல்விக்காக சென்ற ஆண்டைவிட இந்த ஆண்டு சற்று அதிகமாக ஒதுக்கிவைத்திருப்பது உண்மையேயானாலும் எந்த அளவிற்கு நம் ராஜ்யத்திலுள்ள குழந்தைகளுக்குக் கல்வியைக் கொடுக்கவேண்டுமோ அந்த அளவிற்குக் கல்வி வளர்ச்சி அடைவதற்கு போதாது என்பதுதான் இங்கே பல அங்கத்தினர்கள் வெளியிட்ட கருத்துக்களிலிருந்து புலனாகிறது. எத்தனையோ கோடி ரூபாய் செலவழித்த போதிலும் இன்னும் அதிகமாகச் செலவழிக்கவேண்டுமென்ற எண்ணம் இருந்த போதிலும் எல்லோருக்கும் கல்வி வழங்குவதில் ஒன்றும் அதிகமாகக் கவனம் செலுத்தப்படவில்லை.

எத்தகைய கல்வியை நம் குழந்தைகளுக்கு வழங்குகிறோம் ? எத்தகைய கல்வியை நாம் வழங்கவேண்டும். நாம் ஏற்றுக்கொண்டிருக்கிற சமதர்மக் கருத்திற்கேற்ப நல்ல திறமையான மாணவர்களை நாட்டுக்கு நல்குகிற கல்வி முறை அமைந்திருக்கிறதா ? திறமையான மாணவர்களை தோற்றுவித்தால் மட்டும் போதாது. நல்ல குடிமக்களாகத் திகழும் முறையில் நம் அடிப்படைக் கல்வி அமைந்திருக்கவேண்டும். நாட்டுக்கு நல்ல குடி மக்களைத் தோற்றுவிக்கும் முறையில் அமையாத கல்வித் திட்டங்கள், கல்வி முறைகள், எத்தனை கோடி ரூபாய் செலவழித்தாலும் ஒரு பலனையும் அளிக்காது என்று நான் இங்கே எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

இதைத்தான் பல தேசங்களிலும் பல அறிஞர்கள் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். ஆச்சாரியா நரேந்திர தேவ் அவர்கள் கல்வித் துறையில் தலை சிறந்த பணி புரிந்தவர்கள். இதனைத்தான் ஒரு இடத்திலே "It is not enough to turn out efficient men, but it is also n cessary that we should produce good citizens, who have a strong civic sense

[Sri P. S. Chinnadurai] [16th March 1959

and high social aims, who believe in international peace and understanding and who are passionately attached to the democratic ideal of life" என்று ஆச்சாரியா நரேந்திர தேவ் அவர்கள்கூட ஒரு கட்டுரையிலே குறிப்பிட்டிருக்கிறார்கள். அவர்கள் குறிப்பிட்டார்கள். இது போன்று என் பலரும் வற்புறுத்தி வருகிறார்கள் என்றால் நாம் எடுத்துக் கொண்டிருக்கக் கூடிய லட்சியத்திற்குத் தகுந்த மாணவர்கள் கல்விச்சாலைகளிலிருந்து வெளிவரவில்லையானால், நாம் கல்விக்காகச் செலவிடும் பணத்துக்குப் பலன் கிடையாது. புதிய கருத்துக்களைக் கொண்டு பாடங்களைத் தயாரிக்கும் பட்சத்தில் வருங்காலத்தில் மாணவர்கள் சிறந்த முறையில் முன்னேறுவார்கள் என்பதை நிச்சயமாகச் சொல்லலாம்.

12·20 p.m. நான் இங்கே இன்னொன்று குறிப்பிட விரும்புகிறேன். முதலாளித்துவத்தை நாட்டிலிருந்து அகற்றிவிட்டு சமுதாயத்தில் முதலாளித்துவ அமைப்பை மாற்றிவிட்டு, அந்த இடத்தில் சமதர்ம சமுதாயத்தை உண்டாக்க வேண்டுமென்ற விஷயத்தில் அக்கறை கொண்டவர்கள் என்று நாம் நம்மைப்பற்றிக் கூறிக்கொள்கிறோம். அது உண்மையானால், முதலாளித்துவத்தின் குறைகளும், முதலாளித்துவ முறைகள் எவ்வளவு பாபகரமானவை என்பதையும் சுட்டிக்காட்டும் பாடங்கள் நம் பாடப் புத்தகங்களில் இருக்கச் செய்ய வேண்டாமா என்றும், சுரண்டல் என்பது, பல பேர்களிடமிருந்து பணத்தையும் பொருளாதார ரீதியில் உழைப்பையும் சுரண்டுவது என்பது—மிகவும் பாபகரமான குற்றம், சமூகத்தில் செய்யக்கூடிய மிகப் பெரிய குற்றம், என்று போதிக்கும் பாடப் புத்தகங்கள் கல்வித் திட்டத்தில் இடம் பெறச் செய்ய வேண்டாமா என்றும் கேட்க விரும்புகிறேன். அதே போல ஜாதி சமய வேறுபாடுகள் நீங்குவதற்கும் மக்கள் மனதில் ஜாதி சமய வேறுபாடுகள் தோன்றாதிருக்கச் செய்வதற்கும் அடிகோலக்கூடிய பாடங்கள் நமது பாடப் புத்தகங்களில் இடம் பெற வேண்டாமா? அதே போல நாட்டில் பிரிவினை சக்திகளுக்கு இடமளிக்காத முறையில் உள்ள பாடங்கள், நாட்டில் பிரிவினை சக்திகள் தோன்றாமலிருக்க அடிகோலும் பாடங்கள், நமது பாடப் புத்தகங்களில் இடம் பெற வேண்டாமா? நம் நாடு என்றால் என்ன என்று ஒரு குழந்தையை—சாதாரண சிறிய மாணவனைக்—கேட்டால் "பாரதம்" என்று அவன் பதில் சொல்லக்கூடிய அளவிற்கு நமது பாடப் புத்தகங்கள் அமைய வேண்டும். "நம் தாய் மொழி—தமிழ்," நம் நாட்டுப் பொது மொழி—இந்தி என்று இவ்வாறாக நம் மொழிகளைப் பற்றியும் நம் மக்களைப் பற்றியும் நாம் ஏற்றுக்கொண்டிருக்கும் லட்சியங்களைக் குறித்தும் நாம் அமைக்கவிருக்கும் சமுதாயம் சம்பந்தமான தத்துவங்களைக் குறித்தும் விஷயங்களையும் உண்மைகளையும் குழந்தைகளிடம் சிறு வயதிலிருந்தே போதிப்பதற்குரிய முறையில் நமது பாடப் புத்தகங்கள் அமைந்தாலொழிய நாம் நல்ல மனிதர்களை உருவாக்க முடியாது. நல்ல மனிதர்களை உருவாக்க முடியாதபோது நல்ல குடி மக்களை, நாம் அமைக்கவிருக்கும் சமுதாயத்தில் இருக்க வேண்டிய நல்ல குடி மக்களை, உருவாக்க முடியாது. பாடப் புத்தகங்களைத் தயாரிக்கும் விஷயத்தில் அரசாங்கம் அதிக கவனம் செலுத்த வேண்டும் என்று இங்கே குறிப்பிட விரும்புகிறேன். பாடப் புத்தகங்களை அரசாங்கமே தயாரித்து வெளியிட வேண்டுமா வேண்டாமா என்பதுபற்றி பல்வேறு கருத்துக்கள் வெளியிடப்படுகின்றன. அரசாங்கமே அவைகளை வெளியிட வேண்டும் என்பதில் எனக்கு அதிக அக்கறை உண்டு. அவைகளை அரசாங்கம் தவறுகள் இல்லாமல் வெளியிட வேண்டும். இந்த ஆண்டு கூட ஒரு ஆங்கிலப் பாடப் புத்தகத்தில் பல குறைகள் இருந்ததாகச் சுட்டிக்காட்டப்பட்டு, அது உண்மைதான் என்று இந்த மன்றத்திலேயே ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. பாடப் புத்தகங்களில் இப்படிப்பட்ட குற்றங்கள் இருப்பதால் பாடப் புத்தகங்களை அரசாங்கம் வெளியிடலாகாது என்ற அபிப்பிராயம் வெளியிடப்படும் அளவிற்கு ஒரு நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இந்த பயம் எல்லாத் துறைகளிலும் இருக்கிறது. எந்தத் தொழிலை அரசாங்கம் எடுத்து நடத்தினாலும் இந்த பயம் சிருஷ்டிக்கப்படுகிறது. எதை தேசிய மயமாக்கினாலும் குற்றம் குறைகள் அதிகமாகும் என்ற எண்ணம் மறைமுகமாக சிருஷ்டிக்கப் படுகிறதோ என்று கூட சந்தேகப்படுகிறேன். அதே போல பாடப் புத்தகங்களை அரசாங்கம் வெளியிட்டால் சாதாரணமாகத் தவிர்க்கப்படக்கூடிய குற்றங்கள் கூட, குறைபாடுகள் கூட, வந்து

விடும், எனவே அரசாங்கம் இத் தொழிலை எடுத்து நடத்தக்கூடாது என்ற எண்ணம் மறைமுகமாகச் சிருஷ்டிக்கப்படுகிறதோ என்று சந்தேகிக்கிறேன். பாடப் புத்தகங்களை தாங்களே வெளியிட வேண்டும் என்ற எண்ணம் அரசாங்கத்திற்கு இருக்குமானால் அரசாங்கம் இதில் அதிக அக்கறை எடுத்துக் கொள்ள வேண்டும். நமது கல்வி இலாகாவைப் பொருத்தவரையில் அதற்கு நல்ல சரியான இயக்குனர் இருக்கிறார் என்பதில் ஐயமில்லை. நல்ல திறமை வாய்ந்த, ஆர்வமிக்க அதிகாரிகளை வைத்துக்கொண்டிருக்கும் அரசாங்கம் சாதாரணப் புத்தகங்களில் கூட ஏன் தவறுகள் இருக்கச் செய்ய வேண்டும்? அப்படிப்பட்ட தவறுகளால் பொது மக்களிடம் தவறான அபிப்பிராயங்கள் தோன்றுகின்றன. நான் இந்த விஷயத்தில் கடுமையாகக் கூட அபிப்பிராயம் தெரிவிப்பேன். நான் கடுமையான அபிப்பிராயம் தெரிவித்தால் கனம் அமைச்சர் கோபித்துக் கொள்வார். இருந்தாலும் சொல்கிறேன். இந்த ஒரு குற்றம் நேர்ந்ததற்காகவே, கனம் கல்வி அமைச்சர் தம் மந்திரிப் பதவியை ராஜிநாமாச் செய்திருக்க வேண்டும். அல்லது கல்வி இலாகாவை வேறொரு அமைச்சருக்கு மாற்றியிருக்கலாம்; அல்லது, கல்வி இலாகாவில் குறைகள் ஏற்படாமல் பார்த்துக் கொள்வதற்காக கல்வி இலாகா ஒன்றை மட்டுமே தம்மிடம் வைத்துக் கொள்ள அவர் முன் வந்திருக்க வேண்டும். இதுதான் என் அபிப்பிராயம்.

இந்த ஆண்டில் கலைக் கல்லூரிகளுக்கு வழக்கம்போலவே அதிகமான பணத் தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. கலைக் கல்லூரிகளை அதிகரிப்பதை விடுத்து தொழில் கல்விக்கு அதிகமாக வகை செய்ய வேண்டும் என்பது தான் என் விருப்பம். தொழில் கல்விக்கு அதிகமாகப் பணம் ஒதுக்க வேண்டும். தொழில் கல்வியைப் பொறுத்தவரையில், அதிகமாக என்ஜினீயர்களையும் அதிகமாகத் தொழில் நிலையங்களையும் ஆசிரியர்களையும் உற்பத்தி செய்ய வேண்டுமென்று நான் சொல்ல வேண்டியதில்லை. தொழில் கல்லூரியில் படித்துத்தேறி அக் கல்லூரியை விட்டு வெளியே வரும் மாணவன், வேறு ஒருவரிடம் சென்று தான் பணி செய்ய வேண்டுமென்ற நிலை இருக்கக்கூடாது; அவனுகைவே தொழில் செய்து தன் ஜீவியத்தை நடத்திக் கொள்ளக் கூடியவனாக இருக்க வேண்டும்; அதற்கு ஏற்ற முறையில் கைத்தொழில் கல்வியை அவர்களுக்கு அளிக்க வேண்டும். அதற்குரிய கல்வித் திட்டங்கள் அமையவேண்டும். இல்லாவிட்டால் அடிமை வேலை செய்வதற்கான ஆட்களைத் தயாரிப்போமே தவிர நாட்டில் பல துறைகளிலும் தொழில்கள் பெருகுவதற்கான வாய்ப்பை ஏற்படுத்த முடியாது.

ஆதாரக் கல்வியைப் பொறுத்தவரையில், அது சரியானதா இல்லையா என்பதுபற்றி பலரும் பேசுகிறார்கள். நான் ஆதாரக் கல்வியை ஆதரிப்பவன். அதில் சில குறைபாடுகள் இருப்பதாக அடிக்கடி சனம் அங்கத்தினர்கள் கூறிவருகிறார்கள். அந்தக் குறைபாடுகளைக் களைந்தெறிய ஆவன செய்ய வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன். இப்போது ஆதாரக் பயிற்சிப் பள்ளிகளில் தமிழ்ப் பண்டிதர்கள் இல்லை. அங்கே தமிழ் பண்டிதர்கள் இருப்பதற்குரிய நிலையை உண்டாக்க வேண்டும்.

சரித்திரப் பாடப் புத்தகங்களைத் தயாரிக்கும் போது அரசாங்கம் அதிக அக்கறை எடுத்துக் கொள்ள வேண்டும். சரித்திரப் பாடங்களில் திருப்பூர் குமரன், முத்துரங்க முதலியார், சுப்ரமண்ய சிவா, வ. உ. சிதம்பரனார், சத்தியமூர்த்தி, என். ஜி. ராமசாமி, முதலியவர்களைப் பற்றிய விவரங்கள் இடம்பெற வேண்டும். 1857-ல் நடந்த சிப்பாய் புரட்சியை சரித்திரப் பாடப் புத்தகங்கள் சிப்பாய் கலகம் என்றே இன்னும் சொல்லி வருகின்றன. இக் குறைகளை மாற்ற வேண்டும். சரித்திரம், பொருளாதார சாஸ்திரம், சமூக இயல் நூல்கள் இவைகள் சம்பந்தமான பாடங்கள் நாம் ஏற்றுக் கொண்டிருக்கும் திட்டங்களுக்கும் லட்சியங்களுக்கும் கொள்கைகளுக்கும் தக்கவாறு அமையவேண்டுமே தவிர வேறு விதமாக இருக்கக் கூடாது. பாடப் புத்தகங்களை நாமே வெளியிட்டாலும் பிறர் வெளியிட்டாலும் நாம இதில் அதிக கவனம் செலுத்த வேண்டும். இதில் அதிக கவனம் செலுத்த வேண்டுமென்று அரசாங்கத்தை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன்.

ஆரம்பக் கல்விக்கான சுமார் 6 கோடியே சொச்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இவ்வளவு தொகை இதற்கு ஒதுக்கப்பட்டிருந்தாலும் பள்ளிகளுக்குச் செல்ல வேண்டிய குழந்தைகளில் பலர் இன்னும் பள்ளிகளுக்குச் செல்ல முடியவில்லை. இப்படிப்பட்ட நிலை கிராமங்களில்தான் அதிகமாக இருக்கிறது. ஆரம்பக் கல்வியைக்கூட கற்றுக் கொள்ள வகையற்றவர்கள் கிராமங்களில்தான் அதிகமாக இருக்கிறார்கள். இக் குறையை நீக்க வேண்டுமானால் கட்டாயக் கல்வியை அமுலுக்குக் கொண்டு வர வேண்டும். அது அமலுக்குக் கொண்டுவரப்படும் என்ற நம்பிக்கை ஊட்டப்பட்டிருக்கிறது. அதை அமலுக்குக் கொண்டுவரும்போது எஸ்.எஸ்.எல்.சி. வரையாவது அதை அமலுக்குக் கொண்டுவர வேண்டும் என்று சொல்லிக் கொள்கிறேன்.

கல்வியின் தரம் காக்கப்பட வேண்டுமானாலும் சரி, கல்வித் துறையில் நாம் மேலும் முன்னேற வேண்டுமானாலும் சரி, கல்வியை போதிக்கும் ஆசிரியர்களின் தரம் உயர்த்தப்பட வேண்டும். ஆசிரியர்களுக்கும் அவர்களுக்கு மேலே உள்ள அதிகாரிகளுக்கும் இடையிலுள்ள பிளவுகள் நீக்கப்படவேண்டும். ஆசிரியர்கள் சொல்லும் கருத்துக்களை மேலதிகாரிகள் நிச்சயமாக ஆய்ந்து பார்க்கவேண்டும். கோபித்துக் கொள்ளக் கூடாது. ஆசிரியர்கள் சாதாரண ஆசிரியர்கள் என்று அவர்களை அலட்சியப் படுத்தக் கூடாது. அவர்கள் தான் பிள்ளைகளுடன் நேரிடையாகப் பழகுபவர்கள். அவர்கள் அனுபவ ரீதியாக முடிவு செய்துள்ள ஆலோசனைகளைக் கூறுவார்கள். அந்த ஆலோசனைகளை வரவேற்க வேண்டும். அதற்கான செமினார்களை—விவாத அரங்குகளை நடத்த வேண்டும். அதில் கூட ஆதாரக் கல்வி ஆசிரியர்களுக்கு சென்ற ஆண்டில் நடத்தப்பட்ட விவாத அரங்கிற்குரிய தொகை இந்த ஆண்டில் ஒதுக்கப்படவில்லை என்பதைக் காண்கிறேன். இதில் அரசாங்கத்தின் கவனம் குறைகிறது என்று நினைக்கிறேன். கல்வியைக் குறித்த எல்லா விஷயங்கள் சம்பந்தமாகவும் பல் வேறு ஆலோசனைகள் சொல்வதற்குரிய ஆலோசனைக் குழுவும் இப்போது அமைக்கப்பட்டிருக்கிறது.

எல்லோருடைய ஒத்துழைப்பையும் பெற்று நல்லபடியாக இந்தக் கல்வித் துறை சரியான வளர்ச்சி அடைவதற்கு நாம் ஏற்பாடுகள் செய்ய வேண்டும். கடைசியாக ஒரு வார்த்தை குறிப்பிட விரும்புகிறேன். நாட்டில் பொதுமொழியாகிய ஹிந்தி சரியானபடி வளர்ச்சி அடைவதற்கு ஏற்ற முறையில் இந்த ராஜ்ய அரசாங்கமும் சரி, மத்திய அரசாங்கமும் சரி சரியான தொகைகளை ஒதுக்கவில்லை என்பதுதான் எனது குறை. மத்திய அரசாங்கத்தினிடமிருந்து போதுமான மான்யம் பெற்றுவது இந்தி வளர்ச்சி அடையச் செய்வதற்கும், அதன் மூலம் நமது மாணவர்கள் நல்ல பலன் அடைவதற்கும் ஏற்ற வழிவகைகள் காண வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

12-30 p.m.

THE HON. SRI C. SUBRAMANIAM: தலைவர் அவர்களே, இந்த மான்யக் கோரிக்கையின் மீதுள்ள விவாதத்தில் கலந்து கொண்டு பல நல்ல கருத்துக்களை, நம்முடைய கல்வித் திட்டம் நல்ல முறையில் அமைய வேண்டுமென்ற முறையில், எடுத்துச் சொன்ன எல்லா அங்கத்தினர்களுக்கும் எனது நன்றியைச் செலுத்திக் கொள்ள விரும்புகிறேன். நான் பொது விவாதத்திற்குப் பதில் சொன்னது போல், குறைகளை எடுத்துச்சொல்வது நிலைமையை சீர்ப்படுத்துவதற்கு மிகவும் அவசியமாகும் என்பதை மீண்டும் வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன். அதிலும் முக்கியமாக, கல்வித்துறை இயங்குவது என்பது ஏதோ ஒரு இடத்தில் மட்டுமல்ல. இன்று ஆரம்பக் கல்வி நிலையங்களை எடுத்துக்கொண்டால் 22,000-க்கு மேற்பட்ட கல்வி நிலையங்கள் ஒவ்வொரு கிராமத்திலும், ஒவ்வொரு பகுதியிலும் எல்லாம் சேர்ந்து இருக்கின்றன. ஆயிரத்திற்கு மேல் உயர்நிலைப் பள்ளிகள் இருக்கின்றன. 58 கல்லூரிகள் இருக்கின்றன. அதற்கு மேல் ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகள், ஆசிரியர் பயிற்சி கல்லூரிகள், தொழில் பள்ளிக்கூடங்கள், தொழில் கல்லூரிகள் இவைகள் எல்லாம் பரந்த அளவில் இருக்கிற காரணத்தினால் எல்லாவிடங்களிலும் எல்லாம் சரியாக நடைபெறுகிறது என்று நாம் திருப்தி அடைந்து விட முடியாது.

16th March 1959] [Sri C. Subramaniam]

இவைகள் பரவலாக இருக்கும்போது நம்மையும் தெரியாமல் பல குறைகள் ஏற்பட்டுக்கொண்டேயிருக்கும் என்பதில் சந்தேகம் இருக்கமுடியாது. அக்குறைகள் நீங்கவேண்டுமென்று சொன்னால், அவை உண்மையான குறைகள் என்று உணர்ந்து அவைகளை நீக்குவதற்கு நாம் எல்லாவிதமான முயற்சிகளும் எடுக்கவேண்டுமென்று ஒப்புக்கொள்கிறேன். சில சமயங்களில் தங்களுக்குள்ள குறைகளை மனதில் வைத்துக்கொண்டு சிலவற்றை மிகைப்படுத்திச் சொல்ல நாம் பார்க்கிறோம். ஆகவே, சில குறைகள் நம் கவனத்திற்கு வரும்போது உடனடியாக அவைகள் குறைகளாகத்தான் இருக்கும் என்ற அடிப்படையில் இந்தச் சபையில் பேசவோ அல்லது பத்திரிகைகளில் எழுதவோ மேடைகளில் பேசவோ ஆரம்பிக்கும்போது அது கல்வித் துறையில் நல்ல முறையில் காரியங்கள் நடைபெறுவதற்கு தடையாகயிருக்கும் என்பதை நாம் மனதில் கொள்ளவேண்டுமென்று அங்கத்தினர்களுக்கு எடுத்துச் சொல்ல விரும்பகிறேன். ஆகவே, கல்வித்துறை வளர்ச்சியில் கனம் அங்கத்தினர்கள் நல்ல அக்கறை எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பரவலான முறையில், ஒவ்வொரு பகுதிக்கும் நாம் பொறுப்பு ஏற்றுக்கொண்டால், குறைகள் என்னென்ன, எங்கெங்கு தவறுகள் நடக்கின்றன என்பதை சுலபமாகத் தெரிந்து கொண்டு அந்தக் குறைகளை நீக்குவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கமுடியும் என்று தெரிவித்துக்கொள்கிறேன். முதன் முதலாக, ஆரம்பக் கல்வி என்பது எல்லாவற்றிற்கும் அடிப்படையாக அமைந்திருக்கக்கூடியது நாட்டிலுள்ள எல்லோரும் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாகயிருக்கவேண்டுமென்று சொல்வது, ஜனநாயக அடிப்படையில் நாம் அரசாங்க நிர்வாகத்தை ஏற்றுக்கொண்டிருக்கும்போது, அதைப்பற்றி நாம் அதிகமாக வற்புறுத்த வேண்டியதில்லை. அதனால் தான் அரசியல் சட்டத்திலேயே எல்லோருக்கும், ஆறு வயது முதற்கொண்டு 14 வயது வரையில் படிப்பு, கட்டாய இலவசப் படிப்பு சொல்லிக் கொடுக்க வேண்டுமென்று ஒரு விதி விதிக்கப்பட்டது. ஆனால் அவ்வாறு சட்டத்தில் கண்டிருந்தாலும் கூட நாம் அதை நடைமுறையில் நிறைவேற்ற முடியாது. அதாவது அந்தக் காலஎல்லைக்குள் நிறைவேற்ற முடியாத ஒரு நிலை ஏற்பட்டிருப்பதை நாம் உணருகிறோம். அந்த காரணத்தால் தான் இந்தச் சபை ஏற்படுத்திய குழு நல்ல முறையில் பரிசிலனை செய்து இன்று ஒரு முடிவிற்கு வந்திருக்கிறது. 1960-ம் ஆண்டுக்குள்ளாக, அரசியல் சட்டம் அமுலுக்கு வந்து பத்து ஆண்டிற்குள்ளாக அதில் கொடுத்திருக்கும் 14 வயது வரையிலும் இலவசக் கட்டாயக் கல்வி கொடுக்கப்பட வேண்டும் என்பதை நாம் நிறைவேற்ற முடியாதிருக்கிற காரணத்தினால் நிறைவேற்றக்கூடிய திட்டம் எது என்று பரிசிலனை செய்து பார்த்து, 65–66-க்குள்ளாக, அதாவது மூன்றாவது ஐந்தாண்டுத்திட்ட இறுதிக்குள்ளாக ஆறு முதல் 11 வயது வரையிலும் ஐந்து வருடப் படிப்பு எல்லோருக்கும் கட்டாயமாகவும், இலவசமாகவும் கொடுக்க வேண்டியதற்குள்ள ஏற்பாடுகளைச் செய்யவேண்டும், அதுதான் நடைமுறையில் முடியும் என்றதொரு முடிவிற்கு வந்தது. அதை அகில இந்தியாவிலுள்ள எல்லோரும் ஒத்துக் கொண்டு இந்தத் திட்டத்தை நிறைவேற்ற வேண்டுமென்ற முறையில் திட்டங்கள் வகுக்கப்பட்டிருக்கிறது. இதிலுள்ள கஷ்டங்கள் என்ன என்பதை நாம் கொஞ்சம் மனதில் எண்ணிப் பார்க்க வேண்டும். இப்பொழுது இருக்கக்கூடிய நிலையில், இப்பொழுது உபாத்தியாயர்களுக்குக் கொடுக்கக் கூடிய சம்பளத்தின் அடிப்படையில் வைத்துப் பார்த்தால் 35 மாணவர்களுக்கு ஒரு ஆசிரியர் என்ற அடிப்படையில் எல்லாக் குழந்தைகளையும் இன்று பள்ளிக்கூடங்களுக்கு கொண்டுவரவேண்டுமென்று சொன்னால் அதற்கு ஆகும் செலவை கொஞ்சம் மதிப்பிட்டுப் பார்த்தால் அதற்கு பிற்பாடு இதில் என்னென்ன மாறுதல்கள் செய்யவேண்டுமென்று நாம் முடிவு செய்வதற்கு நல்ல ஆதாரங்கள் இருக்கும் என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன். குழந்தைகள் பள்ளிக்கூடத்திற்கு வரவேண்டுமென்று சொல்லும்போது இன்று 2/3 பங்கு குழந்தைகள் தான் இன்று பள்ளிக்கூடங்களில் இருப்பதாக எடுத்துக்கொள்ளலாம். அதில், ஆண்கள், பெண்கள் என்று பிரித்துப் பேசும்போது பள்ளிக்கூடத்திற்கும் வருவதில் 80 சதவிகிதம் ஆண்களாகத்தான் இருக்கிறார்கள். பாதி பெண் குழந்தைகள்தான் இன்று பள்ளிக்கூடத்திற்கு வரக் கூடியவர்களாக இருக்கிறார்கள். ஆகவே பாதிக்கு மேற்பட்ட பெண் குழந்தைகள்

பள்ளிக்கூடங்களுக்கு வர வேண்டியிருக்கிறது. அப்படிச் செய்வதற்கு, இப்பொழுது எடுத்திருப்பதை விட வேறு முக்கியமான சில நடவடிக்கைகளை நாம் அவர்களுக்காக எடுக்க வேண்டியிருக்கிறது. நாம் எல்லாக் குழந்தைகளையும் பள்ளிக்கூடத்திற்குக் கொண்டு வர வேண்டுமென்று சொல்லும்போது, இன்னும் நாம் செலவழிக்க வேண்டிய தொகை எவ்வளவு என்பதையும் நாம் மனதில் கொள்ள வேண்டும். 1960–61லிருந்து 65–66 முடிய, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கடைசி வருடமும், மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தின் ஐந்து வருடங்களையும் கணக்கெடுத்துப் பார்த்தால், நமது புள்ளி விவரங்கள் கொஞ்சம் மலைக்கச் செய்வதாகயிருந்தாலும், புள்ளி விவரங்களை மறந்துவிட்டு திட்டமிட்டால் நாம் ஏற்றுக்கொண்டிருக்கும் லட்சியத்தை அடையமுடியாது போய் விடும் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். 1960–61-ல் 29,54,000 ரூபாய் ரெக்கரிங் எக்ஸ்பெண்டிச்சராகவும், இந்தத் தொகை ஆரம்ப காலமாகயிருப்பதால், வருடாவருடம் செலவு செய்யவேண்டிய தொகை 29,54,000 ரூபாயும், நான்-ரெக்கரிங் எக்ஸ்பெண்டிச்சர் 8,70,000 ரூபாயும் ஆகும் என்று கணக்கிடப் பட்டிருக்கிறது. இது குறைவாக இருக்கக் காரணம், ஆரம்ப கால நடவடிக்கைகள் எடுத்துக் கொள்வதினுல் தான். 1961–62-ல் 29 லட்சத்திற்குப் பதிலாக 88 லட்சத்திற்கு உயருகிறது, இந்த வருடம் செலவு செய்வது. நான்-ரெக்கரிங் எக்ஸ்பெண்டிச்சர் 17,40,000 ஆகிறது. 1962–63-ல், இவைகளை விட கூடிக் கொண்டே போகிறது, ரெக்கரிங் எக்ஸ்பெண்டிச்சர் 177½ லட்சமாகிறது, வருடா வருடம் செலவழிக்கவேண்டியது. நான்-ரெக்கரிங் எக்ஸ்பெண்டிச்சர் 26,10,000 ஆகிறது. 1963–64-ல் ரெக்கரிங் எக்ஸ்பெண்டிச்சர், 265·99 லட்சம் ஆகிறது, வருடா வருடம் செலவழிக்க வேண்டியது. நான்-ரெக்கரிங் எக்ஸ்பெண்டிச்சர் 26,10,000 ஆகிறது. 1964–65-ல் 354·65 லட்சம் வருடாவருடம் செலவாகியிருக்கிறது. நான்-ரெக்கரிங் எக்ஸ்பெண்டிச்சர் 26,10,000 ஆகிறது. 1965-66-க்கு போகும்போது 413·76 லட்சம் வருடாவருடம் இப்பொழுது செலவழிப்பதைவிட அதிகமாகச் செலவு செய்யவேண்டிவரும். நான்-ரெக்கரிங் எக்ஸ்பெண்டிச்சர் 17,40,000 ஆகும். ஆக, ஆறு வருடத்திற்குக் கணக்குபோடும் போது வருடாவருடம் செலவழிக்கக்கூடிய வகையில் 13 கோடி 30 லட்சத்தி 11 ஆயிரம் ரூபாய் செலவழிக்க வேண்டியிருக்கும். நான்-ரெக்கரிங் எக்ஸ்பெண்டிச்சர் ஒரு கோடி 27 லட்சமாகிறது. அது ரொம்ப கம்மிதான். 1966–67-ல் இதை விடக் கூடுதலாக செலவழிக்க வேண்டி வரும். ஆக, இதையெல்லாம் கணக்கிட்டுப் பார்த்தால் இப்பொழுது 6½ கோடி செலவாகிறது என்று சொன்னுல் அதற்கு மேல் 4½ கோடி ரூபாய் கூடுதல் செலவாகும், 1965–66-ல். ஆறு, ஏழு, எட்டு வகுப்புகளில் மாணவர்கள் அதிகம் வந்து சேருவார்கள், அதைக் கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை. அதை எடுக்காமலேயே இவ்வளவு செலவாகும் என்று கணக்கு போடப்பட்டிருக்கிறது. ஆகையினுல் அடுத்த 1965–66-ம் ஆண்டுக்குப் போகும்பொழுது சாதாரணமாக ஆரம்பப் படிப்புக்கு மட்டும், முதல் வகுப்பு முதல் ஐந்தாவது வகுப்பு வரையில் மட்டும் 10 கோடி ரூபாய் அளவுக்கு நாம் செலவழிக்கவேண்டியதாக இருக்கும். இது ஆசிரியர்களுடைய சம்பளத்தை உயர்த்தாமல், ஆசிரியர்கள். மாணவர்கள் விகிதத்தை மாற்றுமல், அதாவது 35 பேர்களுக்கு ஒரு ஆசிரியர் என்ற விகிதத்தில் கணக்குப் போட்ட தொகை. இதை வைத்துக்கொண்டு நாம் ஒரு முடிவுக்கு வருகின்றபொழுது பலர் சில குறைகள் சொன்னார்கள். 35 மாணவர்களுக்கு எப்படி ஒரு ஆசிரியர் பாடம் சொல்லிக்கொடுக்க முடியும் என்று கேட்டார்கள். இன்னும் இந்த விகிதம் குறைவாக இருந்தால் கல்வித் தரம் உயரும் என்பதில் சந்தேகம் கிடையாது. ஆனல் நாம் எந்த லட்சியத்தின் அடிப்படையில் இந்த முடிவு எடுத்திருக்கிறோம் என்பதைப் பார்க்கவேண்டும். ஒருவர் பாக்கி இல்லாமல் எல்லோருக்கும் முதல் வகுப்பு முதல் ஐந்தாவது வகுப்பு வரையில் படிப்புச் சொல்லிக் கொடுக்கவேண்டும் என்ற திட்டத்தை ஏற்றுக்கொள்ளும்பொழுது, 35 மாணவர்களுக்கு ஒரு ஆசிரியர் என்ற லட்சியத்தை அடைவோமா அல்லது 25 மாணவர்களுக்கு ஒரு ஆசிரியர் என்ற விகிதத்தை வைத்துக் கொள்ளுவது என்றால், இப்பொழுது நமக்கு இருக்கக்கூடிய வசதி இவ்வளவு தான், இப்பொழுது இருக்கக்கூடிய மாணவர்களுக்குத் தவிர

12-40 p.m.

16th March 1950] [Sri C. Subramaniam]

நாம் படிப்புச் சொல்லிக்கொடுக்க முடியும். மற்றவர்களுக்கு படிப்புச் சொல்லிக்கொடுப்பதைப்பற்றி பின்னால் பார்த்துக்கொள்ளலாம் என்று விட்டுவிடுவதா என்பதைப் பற்றி யோசிக்கவேண்டியிருக்கிறது. இந்தச் சபை ஏற்படுத்திய ஒரு குழு உட்கார்ந்து, யோசனை செய்து, எந்தமுறையில் முடிவு எடுக்கவேண்டும் என்பதுபற்றி தீர ஆலோசித்து, கடைசியில் 35 மாணவர்களுக்கு ஒரு ஆசிரியர் என்ற ஒரு விகிதத்தின் அடிப்படையில் எல்லோருக்கும் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவுக்குள் படிப்புச் சொல்லிக்கொடுக்கவேண்டும் என்ற முடிவுக்கு வந்தது. இதனால் கல்வித் தரம் கொஞ்சம் குறையும் என்பதை நான் ஒப்புக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். கல்வித் தரம் அந்த அளவுக்குக் கொஞ்சம் குறையத்தான் செய்யும். இந்த இரண்டில் எது நல்லது என்பது பற்றி யோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்த பிற்பாடு, அந்த முடிவை ஏற்றுக்கொண்டிருக்கும் பொழுது அந்த முடிவை நிறைவேற்றிவைக்க எல்லோரும் பாடுபடவேண்டுமே தவிர, திரும்பத் திரும்ப குறையைச் சொல்லிக்கொண்டிருப்பதில் பிரயோஜனம் இல்லை. அது தெரியாத குறை அல்ல. தெரிந்த குறை தான். இருந்தாலும் அந்தக் குறையை ஏற்றுக்கொண்டு, எல்லோருக்கும் படிப்புச் சொல்லிக்கொடுக்கவேண்டும் என்ற முடிவை எடுத்திருக்கிறோம். அப்படி ஒரு முடிவை எடுத்த பிற்பாடு, திரும்பத் திரும்ப குறையை சொல்லிக் கொண்டிருப்பதனால் ஒரு சமயம் இது நடக்காதோ என்று கூட மக்களிடையே குழப்பம் ஏற்படக்கூடிய நிலைமை ஏற்படும். இந்தச் சபையிலும் மறுபடியும் இந்த விஷயம் விவாதிக்கப்பட்டு சபையும் இந்த முடிவை ஏகமனதாக ஏற்றுக்கொண்டிருக்கிறது. அம்மாதிரி இந்தச் சபை ஏற்றுக்கொண்ட முடிவு தான் இது என்பதைச் சொல்லிகொள்ள விரும்புகிறேன்.

அதே முறையில் ஆசிரியர்களுடைய சம்பள விகிதத்தைப் பற்றி குறிப்பிடப் பட்டது. ஆசிரியர்களுடைய வாழ்க்கைத்தரம் உயரவேண்டுமென்பதில் எல்லோரும் அக்கறை கொண்டிருக்கிறோம். இருந்தாலும், எந்த அளவுக்கு அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முடியும் நமக்கு இருக்கக் கூடிய வசதிகளை வைத்துக்கொண்டு என்பதைக் கணக்கிட்டுப் பார்க்கும் பொழுது, இப்பொழுது இருக்கக்கூடிய அளவுக்கு மேல் எப்படி அவர்களுக்குச் சம்பளத்தை உயர்த்திக் கொடுக்க முடியும் என்பதை நாம் யோசித்துப் பார்க்கவேண்டும். சமீபகாலத்தில் ஆசிரியர்களுக்கு எவ்வளவு சம்பள உயர்வு கொடுத்திருக்கிறோம் என்பதையும் கொஞ்சம் மனதில் வைத்துக்கொள்ளவேண்டும். லோயர் எலிமெண்டரி கிரேடு வாத்தியார்களைப்பற்றிச் சொன்னார்கள். இனிமேல் புதியதாக அம்மாதிரி கிரேடு வாத்தியார்கள் சேரப்போவதில்லை. ரொம்ப நாளைக்கு முன்பிருந்து இதுவரையிலும் இருந்துகொண்டிருப்பவர்கள் கொஞ்சம்பேர்கள்தான். அவர்களும் கூடிய சீக்கிரத்தில் கல்வித் துறையிலிருந்து நீங்கிவிடுவார்கள். அவர்களைப் பற்றி நாம் இப்பொழுது சொல்லவேண்டியது அவசியம் இல்லை. ஹையர் கிரேடு டீச்சர்ஸ் இன்னும் கொஞ்ச நாளைக்கு இருக்கக்கூடியவர்கள். அவர்களுக்கு 30 ரூபாய் சம்பளம், அதற்கு மேல் 18 ரூபாய் பஞ்சப் படி என்று ஆக ரூ. 45 முன்பு இருந்தது. அவர்களுக்கு இதற்குமுன் 12 ரூபாய் உயர்வு கொடுத்திருக்கிறோம். இப்பொழுது 5 ரூபாய் கொடுத்திருக்கிறோம். ஆகையினால் ஒவ்வொரு ஆசிரியருக்கும் ஆரம்ப காலத்தில் குறைந்தது 65 ரூபாய் கிடைக்கக்கூடிய அளவிலே இப்பொழுது ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இதுவும் போதாது என்பதற்குப் பல ஆதாரங்கள் சொல்ல முடியும். இதற்கு மேலும் எவ்வளவு கொடுக்கமுடியும் என்பதைப்பற்றி ஆலோசித்துப் பார்த்து சிபார்சு செய்யட்டும் என்று இந்த விஷயத்தை "பே கமிஷனு'க்கு" விட்டுவிட்டோம். இப்பொழுது இருக்கக்கூடிய நிலைமையை வைத்துக்கொண்டு, மற்ற ராஜ்யங்களில் எவ்வளவு கொடுத்திருக்கிறார்கள் என்பதைப் பார்க்கும்பொழுது, ஆரம்ப காலத்தில் நம் ராஜ்யத்தில் 65 ரூபாய் கிடைப்பது குறைவு அல்ல என்பதை தான் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இதற்கு மேலும் இப்பொழுது இருக்கக்கூடிய வசதிகளை வைத்துக்கொண்டு எவ்வளவு கூட கொடுக்க முடியும் என்று நாம் முடிவு செய்யும்பொழுது, இப்பொழுது இருக்கக்கூடிய ஆசிரியர்களுக்கு மட்டும் அல்ல, எல்லாக் குழந்தைகளுக்கும் படிப்புச் சொல்லிக்கொடுப்பதற்கு எவ்வளவு ஆசிரியர்கள் தேவை

படுமோ அவ்வளவு ஆசிரியர்களுக்கும் எவ்வளவு தூரம் அதிகமாகப் பணத்தைக் கொடுக்க முடியும் என்பதைப் பற்றி ஒரு முடிவு எடுக்கவேண்டியவர்களாக இருக்கிறோம்.

(Deputy Speaker in the Chair.)

இதற்கு மத்தியில் ஒரு முக்கியமான முடிவு எடுக்கவேண்டியதாக இருந்தது. அந்த முடிவு என்னவென்றால் ஐந்தாவது வகுப்பு வரையில் இலவசமாக எல்லோருக்கும் படிப்பு கற்றுக்கொடுக்கவேண்டுமென்பதுதான். இந்த முடிவு அமுலுக்குக்கொண்டு வந்து 1965–66-க்குள்ளாக பூர்த்தி பண்ணவேண்டுமென்ற முறையிலே ஆலோசனை செய்து பார்த்து, முதல் வகுப்பிலிருந்து ஐந்தாவது வகுப்பு வரையில் உடனடியாகச் சம்பளம் இல்லாமல் இலவசப் படிப்பு அவர்களுக்குச் சொல்லிக்கொடுக்கவேண்டும் என்பதை உடனடியாக நடைமுறையில் கொண்டுவரவேண்டுமென்ற உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. அதன் காரணமாக, சில நிர்வாகஸ்தர்கள் இதிலே பல சிக்கல்கள், சங்கடங்கள் ஏற்படும், இது நடக்காது, அப்படி நடத்தினால் பல பள்ளிகள் மூடப்பட்டுவிடும், அதன் மூலம் கல்வித் துறையிலே ஒரு பெரிய நெருக்கடி ஏற்பட்டுவிடும் என்றெல்லாம் சொன்னார்கள். அதை ஆதரித்து பலரும் மேடையில் பேசினார்கள். பத்திரிகையிலே பலர் எழுதினார்கள். இங்கும்கூட ஒரு சிலர் அந்தக் கருத்தை பல சமயங்களில் தெரிவித்திருக்கிறார்கள். அதையெல்லாம் ஆராய்ந்து பார்க்க வேண்டியது அவசியம்தான். முதலிலே இந்த முடிவு அவசியமா, இல்லையா என்பது பற்றி யோசித்துப் பார்க்கவேண்டியிருந்தது. அதன் காரணமாகத்தான் மறுபடியும் இந்த விஷயத்தை ஆலோசனைக் குழுவுக்கு விட்டு, அந்த ஆலோசனைக் குழுவின் முடிவை ஏற்பதாக முடிவு செய்தோம். அந்தக் குழுவின் முடிவுக்கு இந்த விஷயம் விடப்பட்டு, அவர்களும் இப்பொழுது ஒரு முடிவு எடுத்துவிட்டார்கள். அந்த முடிவை நான் இப்பொழுது சபையிலே சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆகையினால் அதுபற்றி பல புள்ளி விவரங்களையும் சொல்லி, அதற்குமேலே அதிலே இருக்கக்கூடிய சில கருத்துக்களையும் இந்தச் சபை முன்பு வைக்க விரும்புகிறேன்.

நம்முடைய ராஜ்யத்தில் இருக்கக்கூடிய ஆரம்பப்பள்ளிகளின் எண்ணிக்கை 21,803. அதிலே உதவி பெற்று தனிப்பட்டவர்களால் நடத்தப்படும் பள்ளிகளின் எண்ணிக்கை 7,676. அதிலே எத்தனை பள்ளிகள் சம்பளம் வாங்கி பள்ளிக்கூடத்தை நடத்திவருகிறார்கள் என்று கணக்கு எடுக்கும்பொழுது 1,033 பள்ளிகள். இந்த 21,803 பள்ளிகளில் 1,033 பள்ளிகள் சம்பளம் பெற்று நடத்தப்பட்டு வருகின்றன. இந்தப் பள்ளிகள் சம்பளம் வாங்கிகொண்டிருந்தால் சர்க்கார் உதவி பெற முடியாது. சர்க்கார் உதவி வேண்டுமென்று சொன்னால் சம்பளம் வாங்கக்கூடாது. உங்களுடைய முடிவைத் தெரிவிக்க வேண்டும் என்று மேற்படி உத்தரவு போட்ட பிற்பாடு கேட்டதற்கு, 1,033 பள்ளிகளில் 740 பள்ளிகள் நாங்கள் சம்பளம் வாங்காமல் சர்க்கார் உதவி பெற்று நடத்துவதற்குத் தயாராக இருக்கிறோம் என்று தெரிவித்திருக்கிறார்கள். பாக்கி இருக்கக்கூடிய 293 பள்ளிகளில், சில பேர்கள் முடியாது என்று எழுதியிருக்கிறார்கள். சில பேர்கள் கொஞ்சம் உதவி அதிகமாகக் கொடுக்கவேண்டுமென்று எழுதியிருக்கிறார்கள், பதிலே எழுதாதவர்களும் இருக்கிறார்கள். இதிலே முக்கியமான பிரச்னை நம்முடைய சென்னை நகரத்திலேதான். அதிலே சில புள்ளி விவரங்கள் தருகிறேன். சென்னை நகரத்தில், இருக்கக்கூடிய மொத்த ஆரம்பப் பள்ளிகள் 228. அதிலே சம்பளம் வாங்கக்கூடிய பள்ளிகள் 188. அதிலே 38 பேர்கள் நாங்கள் சம்பளம் வாங்காமல் நடத்துவதற்குத் தயார் என்று சொல்லுகிறார்கள். 6 பேர்கள் எங்களுக்கு உதவி வேண்டாம், நாங்களே சம்பளம் வாங்கி நடத்துகிறோம் என்று சொல்லுகிறார்கள். 58 பேர்கள் இன்னும் கொஞ்சம் அதிகம் உதவி வேண்டும், அப்பொழுதுதான் நடத்தமுடியும் என்று தெரிவித்திருக்கிறார்கள். 86 பேர்களிடமிருந்து பதிலே வரவில்லை. இந்த முறையில் புள்ளி விவரங்கள் இருக்கின்றன. இது ஏதோ ஒரு பெரிய பிரச்னை, பெரிய நெருக்கடி ஏற்பட்டுவிடும் என்று நினைப்பதுபோல் நிலைமை இல்லை. இந்த 21,803 பள்ளிகளில் 293 பள்ளிகளைப் பொறுத்த

16th March 1959] [Sri C. Subramaniam]

நெருக்கடிதான் இது. இதுபற்றி சட்டமன்றக் குழு ஆராய்ச்சிசெய்து பார்த்து, நல்ல முறையில் பலவேறு சங்கடங்களேயும் ஆராய்ந்து பார்த்த பிறபாடு, ஒரு முடிவுக்கு வந்திருக்கிருர்கள். அந்த முடிவை இப்பொழுது உங்கள் முன்னிலேயில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இலவசப் படிப்பு எல்லோருக்கும் கொடுத்தாகவேண்டும்; ஆகையினுலே இரண்டு வித பள்ளிகள்தான இருக்கவேண்டும். ஒன்று சர்க்காருடைய உதவி பெற்று சம்பளம் வாங்காமல நடத்தக்கூடிய பள்ளிகள், இரண்டாவது சாக்காருடைய உதவி பெருமல் சம்பளம் வாங்கிககொண்டு அவர்களுடைய காரியத்தை அவர்களே பார்த்துக்கொள்ளக்கூடிய பள்ளிகள், என்ற உத்தரவை, 1958-ம்ஞு நவம்பர் மாதம் 29-ந் தேதியிட்ட 2124 எண்ணுடைய உத்தரவை நடைமுறையில் கொண்டுவரவேண்டும். அதை வாபஸ் வாங்கவேண்டியது அவசியம் இல்லே என்ற ஒரு முடிவுக்கு வந்திருக்கிரும். மேலும் இப்பொழுது சம்பளம் வாங்கிக்கொண்டிருக்கும் பள்ளிகளிலே ஒரு வருஷத்திறகு சில மாறுதல்கள் ஏற்படுத்தப்படவேண்டும், அவர்கள் உதவிக்காகச் சில மாறுதல்களேச் செய்யவேண்டுமென்றும் இந்தக் குழு சிபார்சு செய்திருக்கிறது. அதாவது இப்பொழுது பள்ளி உபாத்தியாயர்கள் சம்பளத்திறகு மேலாக 100-க்கு 15 சத விகிதம் கிராண்டு கொடுக்கிரும். அவர்கள் நிர்வாகச் செலவுக்காகக் கொடுக்கப்படுகிறது இது. சில இடங்களில் இந்த நிர்வாகச் செலவு கொஞ்சம் அதிகமாக ஏற்படலாம். ஆகவே, இதை 15 சத விகிதத்திலிருந்து 20-ஆக உயர்த்தவேண்டும். இந்த 1,000 பள்ளிகளுக்கும், 293 பள்ளிகளுக்கு மட்டுமல்ல என்ற முடிவு எடுக்கப்பட்டிருக்கிறது. இந்த நிர்வாகச் செலவு 15 சத விகிதத்திற்குக் கீழே இருக்கும்பொழுது ஜில்லா அதிகாரிகளே அதற்குக் கணக்குப் போட்டு கிராண்டு கொடுத்துவிடலாம். 15 சத விகிதத்திலிருந்து 20 சத விகிதம் கொடுக்கவேண்டும் என்ற கட்டம் வருகிறபொழுது டி.பி.ஐ-க்கு அதை அனுப்பி, அவருடைய உத்தரவைப்பெற்று 20 சத விகிதம் வரை இதை அதிகப்படுத்திக்கொள்ளலாம் என்ற ஒரு முடிவுக்கு வந்திருக்கிருர்கள.

இதில் இப்போது அவர்கள் என்ன சம்பளம் பெற்று வருகிருர்களோ அந்தச் சம்பளம் பாதிக்கப்படக்கூடாது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது சில ஆசிரியர்கள் உயர்வாகச் சம்பளம் பெற்று வருகிருர்கள். அவர்களேப் பொறுத்தவரையில் இவ்வளவு சம்பளம் வாங்கினதாக நிரூபிக்கப்பட்டால், அவ்வாறு நிரூபிக்கப்பட்ட சம்பளம் சர்க்கார் பள்ளிக்கூடங்களில் ஆசிரியர்களுக்குக் கொடுக்கப்பட்டு வரும் சம்பளம் இரண்டையும் பார்த்து அதில் எது குறைவாக இருக்கிறதோ அந்தச் சம்பளம் கொடுக்க வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. முக்கியமாக இன்னொரு முடிவையும் இந்தக் குழு ஆலோசனை செய்து முடிவு எடுத்திருக்கிருர்கள். அதாவது 1,033 பள்ளிக்கூடங்களில் உள்ள ஆசிரியர்களுக்கு சாக்காரே நேரடியாகச் சம்பளம் கொடுக்கவேண்டும் என்பது. இதை வைத்துக் கொண்டு பின்னுல் உதவி பெறுகின்ற எல்லா ஆசிரியர்களுக்கும் நேரடியாக சர்க்காரே சம்பளம் கொடுப்பதற்கு ஆலோசனை செய்து பார்ப்பதற்கு உதவியாக இருக்கும் என்று நம்புகிறேன். இப்போதுள்ள முடிவுப்படி இந்த 1,033 பள்ளிக்கூடங்களிலுள்ள ஆசிரியர்களுக்கும் சர்க்காரே நேரடியாகச் சம்பளம் கொடுக்கவேண்டும். அதோடு நிர்வாகச் செலவில் 100-க்கு 15 பங்கு அல்லது 20 பங்கு கொடுக்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதில் 15 பங்கிலிருந்து அதிகமாக உயர்த்துவதற்கு அங்கிருக்கக் கூடிய நிலேமைகளே, கணக்குகளே டி.பி.ஐ. அவர்கள் பரிசீலித்துப் பார்த்து அதற்கு வேண்டிய விதத்தில் முடிவு எடுப்பார்கள். இந்த அடிப்படையில் முடிவு எடுக்கப்பட்டு கொண்டுவரப்பட்டிருக்கிறது. இதைச் சபை ஏற்கவேண்டும் என்பதைதான் நான் கேட்டுக்கொள்கிறேன். ஏற்கனவே இன்றைக்கு இருக்கக்கூடிய நெருக்கடியான நிலேமையை நாம் தீர்க்க வேண்டும். அதாவது சில இடங்களில் பள்ளிக்கூடங்களே நடத்திக்கொண்டிருப்பவர்கள் மேலால் நடத்துவதற்குத் தயாரில்லே என்ருல் அதற்குப் பதிலாக அதே பள்ளிக்கூடத்தை எடுத்து நடத்துவதற்கு யாராவது முன் வருவார்களானுல் அவர்களுடைய விண்ணப்பங்களேப் பெற்று அவர்கள் சரியான முறையில் நடத்துவார்களா என்பதைப் பரிசீலித்துப்பார்த்து அவர்களுக்கு பள்ளிக்கூடத்தை நடத்துவதற்கு உத்தரவு கொடுக்க

12-0 p.m.

[Sri C. Subramaniam] [16th March 1959

வேண்டும் என்பது இன்னொரு முடிவு. இவ்விதம் ஒருவருமே முன்வரவில்லையென்றால் சர்க்காரே ஏற்றெடுத்து, சென்னை நகரைப்பொறுத்தவரையில் கார்ப்பரேஷனும் மற்ற இடங்களில் டிஸ்ட்ரிக்ட் போர்டின் கீழோ, அல்லது லோக்கல் போர்டின் கீழோ அல்லது பஞ்சாயத்து போர்டின் கீழோ இந்தப் பள்ளிக்கூடங்களை எடுத்து நடத்துவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். அதோடு இந்த ஏற்பாட்டின் காரணமாக வேலையிலிருந்து எந்த ஆசிரியர்களாவது நீக்கப்பட்டிருந்தால் அவர்களுக்கு வேலை கொடுக்கவேண்டும். மேலும் அவர்களுக்குத் தனிப்பட்ட பள்ளிக்கூடங்களில் என்ன சம்பளம் பெற்றுக்கொண்டிருந்தார்களோ அதைக் கவனித்து, அதற்கு தகுந்த பதவிக்கு சர்க்கார் என்ன கொடுத்துவருகிறதோ அதையாவது குறைந்த அளவுக்குக் கொடுக்கவேண்டும் என்ற முடிவையும் செய்திருக்கிறார்கள். இந்த அடிப்படையில் எடுத்த முடிவுகள் எல்லாம் சர்க்காரால் ஆலோசனை செய்யப்பட்டு வருகிறது. ஆகவே இந்த முடிவுகளை எல்லாம் சபை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இந்த முடிவு சட்டசபையிலுள்ள எல்லாக் கட்சித் தலைவர்களும் சேர்ந்து செய்த ஒரு முடிவு. எல்லாவிதமான பரிசீலனையும் செய்து செய்யப்பட்ட முடிவாகும். ஆகவே இந்த முடிவுகளை நிறைவேற்றுவதற்கு எல்லாக் கட்சி அங்கத்தினர்களும் தங்களுடைய ஒத்துழைப்பைத் தரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதில் ஏதேனும் கஷ்டங்கள் ஏற்படுவதாக இருந்தால், இதன் மூலமாக இப்போது படித்துக்கொண்டிருக்கும் குழந்தைகள் படிப்பதற்கு வசதியில்லாமல் போய் விட்டதே என்று கருதாமல், அவசியமென்று கருதினால் புதுப்பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தி நடத்துவதற்கும் ஏற்பாடு செய்ய முடியும். ஆகவே இந்த முறையில் முடிவு எடுத்திருக்கிறோம். இதை நல்ல முறையில் கொண்டு வருவதற்கு எல்லோரும் தங்கள் ஒத்துழைப்பைக் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக இன்னொரு விஷயத்தையும் குறிப்பிட விரும்புகிறேன். அதாவது 35 மாணவர்களுக்கு ஒரு ஆசிரியர் வீதம் வைத்திருக்க வேண்டும் என்று வெள்ளையறிக்கை (வொயிட் பேப்பர்)-யில் கொடுக்கப்பட்டிருக்கின்றது. இவ்விதம் போட்டிருப்பது நம் நாட்டில் மட்டுமல்ல. கனம் அன்பழகன் அவர்கள் மற்ற நாடுகளில் எவ்விதம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது என்பதையும் பார்க்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். பல நாடுகளிலும், அதாவது புதிதாக கட்டாயக் கல்வி ஏற்படுத்துகிறபொழுது 80 மாணவர்களுக்கு ஒரு ஆசிரியர் என்ற முறையில் ஏற்படுத்தித்தான் ஆரம்பித்திருக்கிறார்கள். அது மட்டுமல்ல; இப்போதும் கூட பல இடங்களில் 60 மாணவர்களுக்கு ஒரு ஆசிரியரை ஏற்படுத்தி வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இன்னொன்றையும் சொல்ல விரும்புகிறேன். பலர் நினைக்கிறார்கள், பத்து வருடமாகிவிட்டதே, இன்னும் சரியான முறையில் கட்டாயக் கல்வியை கொண்டு வர முடியவில்லையே என்று. நானும் கூட இதைப்பற்றி அடிக்கடி நினைப்பதுண்டு. இவற்றைப்பற்றி யோசித்துப் பார்த்தால் மற்ற நாடுகளைவிட நம நாடு குறைவாக இல்லை என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு விஷயத்தைக் குறிப்பிட விரும்புகிறேன். அகில இந்திய கல்வி மகாநாட்டில் நான் வரவேற்பு கமிட்டித் தலைவராக இருந்தேன். அப்போது அங்கு சொன்னதை நான் இங்கு படிப்பதற்கு அனுமதி கேட்டுக்கொண்டு அதைப் படிக்கிறேன். . . .

"A few days ago, I saw in one of our newspapers an article which was reproduced from the 'London Economist'. This article contained a discreption of the process by which the educational system has been expanded and improved in Soviet Russia." I am sure Mr. Palaniswami will be greatly interested in this. The Soviet Revolution, as you know, took place in 1917, exactly thirty years before we attained Independence. The article says that the first task was for the Soviet Government to teach the people to read and write and to set about this task with vigour. Further four-year education was not made compulsory till **1930.**

16th March 1959] [Sri C. Subramaniam]

It was not until shortly before the Second World War that compulsory education was extended to seven years in the towns. The country side was not covered by a network of schools providing seven year education until 1950. At the present moment, the article says, town children are now obliged to go to school for ten years and it is planned to spread the system to the whole country within the next few years.''

ஆகவே நம்மைப் போலவே ஜனநாயக அடிப்படையில் நடந்து கொண்டிருக்கின்ற நாடுகளிலும் இம்மாதிரி ஒரு கல்வி முறையை கொண்டு வருவதற்கு எத்தனையோ ஆண்டுகளாயிற்று. நான்கு வருடப் படிப்பு, ஏழு வருடப் படிப்பு, பத்து வருடப் படிப்பு என்று படிப்படியாகத்தான் கொண்டு வந்திருக்கிறார்கள். அந்த முறையில் பார்த்தால் நாம் அவ்வளவாக ஒன்றும் குறைந்து போய்விடவில்லை என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். குறைகளை எடுத்துச் சொல்ல வேண்டியதுதான். அப்போது தான் நிர்வாகம் நல்ல முறையில் நடப்பதற்கு முடியும். இவ்விதம் குறைகளை சொன்னால் தான் அதிலுள்ள பிரச்னைகளைத் தீர்த்து சரியான முறையில் தொடர்ந்து அதில் பணியாற்ற முடியும். ஆகவே இந்த விஷயத்தில் இந்த சபையின் முழு ஒத்துழைப்பும் வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இதில் அடிப்படையாக இந்தத் திட்டத்தை அமுலாக்குவதற்கு மத்தியான உணவுத் திட்டம் அவசியம் என்பதையும் நாம் முடிவாக எடுத்திருக்கிறோம். இந்த சட்டசபைக் குழு இதைப்பற்றி நன்றாக ஆலோசனை செய்தது. இந்த மத்தியான உணவுத்திட்டம் வெற்றி பெற்றால்தான் கட்டாயக் கல்வி திட்டம் வெற்றி பெறுவதற்கு வசதியாக இருக்கும் என்று முடிவு செய்திருக்கிறது. இந்தத் திட்டத்தை எல்லா இடங்களுக்கும் பரப்புவதற்கு முயற்சி செய்து கொண்டிருக்கிறோம். இப்போது சுமார் 11 ஆயிரம் பள்ளிக்கூடங்களில் இவ்விதம் மத்தியான உணவுத் திட்டம் நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. இவ்விதம் 11 ஆயிரம் பள்ளிக்கூடங்களில் நடைபெறுகிறது என்று சொன்னால் சுமார் 11 ஆயிரம் கிராமங்களில் இந்தத திட்டம் நடந்து கொண்டிருக்கிறது என்று எடுத்துக்கொள்ளலாம். இந்த முறையில் பரவலாகத்தான் நடந்து கொண்டு வருகிறது. ஏதோ ஒன்றிரண்டு இடங்களில் இந்தத் தவறுகள் நடைபெறுகிறது என்றுசொன்னால் அதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. பல இடங்களிலும் பெருவாரியான அளவில் உற்சாகத்தோடு நல்ல முறையில் இந்தத் திட்டம் நடைபெற்று வருகிறது என்பதுதான் எனக்கு கிடைத்த தகவல். சில இடங்களில் தவறுகள் நடக்கின்றன என்று புகார்கள் வந்திருக்கின்றன. அதற்காக இந்தத் திட்டமே மோசம் என்று சொல்லுவது சரியல்ல என்பதைத்தான் தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன். இந்தத திட்டத்தின் காரணமாக பல இடங்களிலும் புத்துணர்சி ஏற்பட்டிருக்கிறது என்பதை மக்கள் உணருகின்றார்கள். ஆகவே இந்த அடிப்படையில் நடந்து கொண்டிருக்கின்ற ஒரு திட்டத்தில் சில தவறுகள் ஏற்படுகின்றன. அவற்றை தவிர்பதற்கான கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. இதையெல்லாம் பார்க்காமல் இந்தத் திட்டத்திலே என்ன பிரயோஜனம் என்று எண்ணக்கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் இதில் ஏற்படுகின்ற தவறுகளைச் சொல்லுவதை நான் வரவேற்கிறேன். கல்வி மந்திரி என்ற முறையில் அவைகளைத் தீர்த்து வைப்பதற்கும் முயர்சி செய்கின்றேன். இவ்விதம் சில இடங்களில் தவறுகள் நடக்கலாம், அவைகளையெல்லாம் தெரிந்து, அவைகளை நீக்குவதற்கு நாம் நடவடிக்கை எடுத்து வருகின்றோம். பொதுவாக இந்த திட்டம் வெற்றி பெறுவதற்கு சட்டசபை அங்கத்தினர்கள் ஒத்துழைப்புக் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். தவறுகளை எடுத்துச் சொன்னால் நான் கோபப்படுவேன் என்ற காரணத்திற்காகச் சொல்வதில்லை என்று சொல்லப்பட்டது. அவ்விதம் நான் கோபப்படுவதில்லை. உண்மையில் தவறுகள் நடந்திருக்குமென்றால், அவைகளை எடுத்துச் சொல்வதாக இருந்தால் அவைகளை நான் வரவேற்கிறேன் என்பதை கனம் சின்னத்துரை அவர்களுக்கும் மற்றவர்களுக்கும் எடுத்துச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த திட்டத்தை மேலும் மேலும் விரிவாக்குவதற்கு நாம் எல்லோரும் முயற்சி

1-0 p.m.

எடுத்துக்கொள்ளவேண்டும். இதே அடிப்படையில் பள்ளிச் சீரமைப்புத் திட்டமும் அமைந்திருக்கிறது. கனம் அன்பழகன் சந்தேகத்துடன் குறிப்பிட்டார்கள். கனம் எம். பி. சுப்பிரமணியத்தைக் காணோம். (குறுக்கீடு.) இருக்கிறார்களா, சரி. இது காங்கிரஸ் கட்சிக்காரர்கள் இயக்கம், அது அவர்களுக்கு மட்டும்தான் என்பவர்களுக்கு ஒன்று சொல்ல விரும்புகிறேன். கனம் எம். பி. சுப்பிரமணியம், அவர்கள் வட்டாரத்தில், அந்த இயக்கத்திற்குத் தலைவராக இருந்து, திட்டத்தை நடத்த ஏற்பாடு செய்தார்கள். கனம் அன்பழகன் அவர்கள் கொஞ்சம் தங்கள் கட்சி நண்பரைக் கலந்து இருந்தால், இது கட்சி ரீதியில் நடைபெறவில்லை, மக்கள் பிரதிநிதிகளே நடத்துகிறார்கள் என்று ஒத்துக்கொள்ளத் தயாராக இருப்பார்கள். அதை ஒப்புக் கொள்ளுவார்கள். இன்று ஆசிரியர்கள் நிர்ப்பந்திக்கப்படுகிறார்கள் என்று சொன்னார்கள். சில இடங்களில் அம்மாதிரி நடந்திருக்கலாம். ஒரு முனிசிபல் கமிஷனர் கூட, ஒவ்வொரு ஆசிரியரும் இவ்வளவு பணம் திரட்டவேண்டும் என்று உத்திரவு போட்டதாகச் செய்தி வந்தது. உடனடியாக, சர்க்கார் கவனத்திற்கு வந்தவுடனே, எந்தக் காரணத்தைக் கொண்டும், நிர்ப்பந்தம் கூடாது. அவரவர்கள் இஷ்டப்பட்டு இயங்க வேண்டும், பங்கு கொள்ள வேண்டும் என்று உத்திரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. இது திட்டவட்டமாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இருந்தாலும், சில உத்தியோகஸ்தர்கள், தம்மையும் மீறி, அதிக உற்சாகத்தின் காரணமாக சில உத்திரவுகள் போட்டிருக்கலாம்; அதுதான் இப்படி நடந்திருக்கிறது. அவைகளையும் நிவர்த்திக்க முயற்சி செய்கிறோம். ஆகவே, இது உண்மையிலேயே, மக்களின் இயக்கம் என்பதை அங்கத்தினர்கள் புரிந்து கொள்ள வேண்டும். இதை நான் பல மகாநாடுகளில் ஏற்பட்ட அனுபவத்தை வைத்துக்கொண்டே சொல்லுகிறேன். நேற்றும், அதற்கு முன் தினமும், மூன்று மகாநாடுகளில் நான் கலந்து கொண்டேன். அங்கே மக்கள் இந்த இயக்கத்தில் உற்சாகமாகப் பங்கு கொண்டார்கள். ஒரு புதிய உணர்ச்சியைக் காண்பித்தார்கள். ஸ்ரீ அன்பழகன் ஒரு மகாநாடாவது நடக்கும்போது பார்த்திருந்தால், நிர்ப்பந்தம், மற்றவை ஒன்றும் இல்லை, மக்கள் ஒரு புது உணர்ச்சியுடன் இயங்குகிறார்கள் என்பதை ஒப்புக் கொள்வார்கள். அந்த முறையில் தான் இந்த இயக்கம் வளர்ந்து வருகிறது. அந்த முறையிலே இது வேர் விட்டுக்கொண்டு வருகிறது. இது அந்தந்தப் பள்ளிகளின் அடிப்படையான தேவைகளைப் பூர்த்தி செய்ய உதவுகிறது. இன்றைக்கு சர்க்கார், இவைகளுக்கான செலவினங்களைச் செய்கிறது. அதே நேரத்தில், ஒவ்வொரு கிராமத்திலும் இருக்கக்கூடிய, பள்ளிக்கூடங்களுக்கு வேண்டிய பல வசதிகளையும் மக்களே செய்து கொள்வதனால் அது பெரிய லாபமாக இருக்கும். இப்பொழுது, சுமார் 22,000 பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. அது இன்னும் பரவவேண்டும் என்று விரும்புகிறோம். இதற்கு மேலும் பரவ வேண்டுமென்று நாம் நினைக்கும்போது ஏதோ சர்க்காரே போய் எல்லாவிடத்திலும் செய்யவேண்டும் என்று சொல்வதானால், அது ஆகக் கூடிய காரியம் அல்ல. ஒவ்வொரு கிராமத்திலும், அந்தந்த கிராம மக்கள், உடனடியாக அந்தப் பணியில் ஈடுபடுவார்களேயானால், அது ஒரு சிறந்த சீர்திருத்தம் மட்டுமல்ல, சீரமைப்பாகவும் அமையும் என்பதில் சந்தேகமில்லை. மக்களுக்கும், 'நம் பள்ளிக்கூடம், நம் பிள்ளைகள், குழந்தைகள் படிக்கும் பள்ளிக்கூடம்' என்ற அக்கறை தோன்றுகிறது. ஒரு நல்ல சூழ்நிலை ஏற்படுகிறது. ஆகவே, இந்த இயக்கத்தைக் குறை கூறாமல், குறைகள் இருந்தால் அவற்றை நீக்க யோசனைகள் சொல்லி, எல்லோரும் வரவேற்று, செயல் படவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். எந்த இயக்கத்திலும் குறைகள் காண முடியும். குறைகளை எப்படித் தவிர்ப்பது என்பதே நோக்கமாக இருக்க வேண்டும். வேறு ரிவின்யூ அதிகாரிகள், போலீஸ் அதிகாரிகள், மற்ற வரி வசூல் அதிகாரிகள் நிர்ப்பந்தம் எங்கெல்லாம் இருக்கிறதோ அவற்றை நீக்கிவிடமுடியும். ஆசிரியர்களையும் நிர்ப்பந்தம் செய்ய முடியவே முடியாது.

இன்னொன்று சொன்னார்கள். ஆசிரியர்கள் பிச்சை எடுப்பது போல் இருக்கிறது என்று சொன்னார்கள். பிச்சை என்பது "எனக்கு" என்று கேட்டால், அது பிச்சையாகும். அன்றி, "இன்னொருவனுக்கு உதவுங்கள்"

16th March 1959] [Sri C. Subramaniam]

என்று கேட்டால், அது பெரிய பொது சேவையாகும். பிச்சை என்ன என்பதை உணர வேண்டும். ஆசிரியர்கள் பிச்சையா எடுக்கிறார்கள் ? அவர்கள் தங்கள் ஊதியப் பெருக்கத்திற்காகவா செய்கிறார்கள் ? "குழந்தைகள் நன்மைக்குத் தாருங்கள்" என்று கேட்கும்போது பிச்சையா அது. அது ஒரு பெரிய பொதுச் சேவையாகும். பொதுமக்கள் தொடர்பு கொள்வது பிச்சை எடுக்கும் முறையில் அல்ல. சில இடங்களிலே சில புகார்கள் வந்தன. இதெல்லாம் இம்மாதிரி இயக்கங்களில் வரக்கூடியவை. குழந்தைகள் இவ்வளவு கொண்டுவரவேண்டும் என்று ஒன்றும் சொல்லக்கூடாது என்று தெளிவான உத்தரவுகள் போடப்பட்டிருக்கின்றன.

Sri K. ANBAZHAGAN : அமைச்சர் அவர்கள், நான் கூறிய கருத்தை ஒட்டிப் பேசுகிறார்கள். திராவிட முன்னேற்றக் கழகம் அதில் பங்கு கொள்ளவில்லை என்ற என் அந்தக் கருத்தைத் தெரிவிக்கவில்லை. கல்வி அமைச்சர் கடைசி கட்டத்திலே, ஆரம்பப் பள்ளிக்கு உதவி அளித்தே தீரவேண்டும் என்று வலியுறுத்துகிறார்கள். அந்தப் பணியில் ஆசிரியர்களை பயன் படுத்துவது நியாயம் இல்லை, தருமம் இல்லை. அவர்கள் தங்களுக்கென்று பிச்சை எடுக்கவில்லையென்றாலும், பலரைப் போய் கேட்கும்போது, தகுதி அதிகமில்லாத காரணத்தினால், பிச்சை எடுப்பவர்கள் போல் தான் இருக்கிறார்கள். மேலும் அமைச்சரவர்கள் நான் ஒரு மகா நாட்டையாவது பார்க்க வேண்டும் என்றார்கள். நான் துறையூர் மகாநாட்டைப் பார்த்தேன். அதன் நடவடிக்கைகளை என்னிடம் தெரிவித்தார்கள். அமைச்சர் வருகிறபோது எல்லாம் உற்சாகமாக வைக்கப்படுகிறது. ஆனால், மறுநாள் பார்த்தால், அமைச்சர் சென்ற பின்னால் அங்கு ஒன்றுமில்லை. இதை நான் பொது மக்களோடு கலந்தே தெரிவிக்கிறேன்.

The Hon. Sri C. SUBRAMANIAM : இதிலே ஆசிரியர்கள் போய்க் கேட்பது சில இடங்களிலே தான். அவர்களுக்கு இன்னின்ன குறைகள் என்று சொல்ல வேண்டிய பொறுப்புத்தான். மற்றபடி, அதைத் தொடர்ந்து, குறைகளை நிவர்த்திக்க செய்ய வேண்டிய காரியங்களுக்கு அங்கங்கே பொது மக்கள் கமிட்டிகள் இருக்கின்றன. அவை தொடர்ந்து வேலை செய்கின்றன. சில இடங்களிலே, உற்சாகமுள்ள ஆசிரியர்கள் கமிட்டி கூடவும் வேலை செய்கிறார்கள். ஆனால், அவர்கள் பொறுப்பெல்லாம், தேவைகளைத் தெரிவிப்பதுதான். அவற்றைத் தீர்க்க பொறுப்பு ஏற்றுக்கொள்ளவேண்டியது கிராம சீரமைப்புக் கமிட்டி தான். வட்டாரக் கமிட்டி அடிப்படையில் இயக்கம் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆசிரியர்களை நிர்ப்பந்தம் செய்வதற்கு ஒன்றுமில்லை. ஆசிரியர்களும் இன்னொருவரை நிர்ப்பந்தம் செய்வதற்கும் ஒன்றுமில்லை. எந்த நல்ல காரியத்திற்கும் ஒரு தூண்டுகோல் அவசியமாக இருக்கிறது. எப்படிச் செய்தாலும் சலிப்பு ஏற்படலாம். ஆனால் பலனை அடையும் போது பொது மக்கள் மகிழ்ச்சி அடைகிறார்கள். அப்படியில்லாமல் இருந்தால், இப்பொழுது எப்படி கல்வி இலாகாவிற்கு இந்த இயக்கத்தின் மூலமாக லட்சக் கணக்கான ரூபாய்கள் வரமுடியும், பொருள்கள் வந்து குவிய முடியும் ? நிர்ப்பந்தம் காரணமல்ல. வேறு காரணத்தால், அதுதான், இந்த இயக்கம் மக்களுடைய இயக்கம் என்ற காரணத்தால். மக்களிடம் ஏற்பட்டிருக்கும் புதிய உணர்ச்சி அடிப்படையில், புதிய ஆர்வ அடிப்படையில் இந்த இயக்கம் வளர்கிறது.

அது ஒரு புறமிருக்க, இந்த முறையில்தான் நாம் இன்றைக்குப் பள்ளிக்கூடங்களிலே இருக்கும் பல காரியங்களைச் செய்ய முடிகிறது. கட்டடம் வேண்டுமானாலும் சரி, இதர கருவிகள் வேண்டுமானாலும் சரி இவையெல்லாம் மக்கள் உதவியால் செய்யப்படுகின்றன. சிறந்த பண்ணையும் அமைக்கிறோம். அது மட்டுமல்ல. பண்ணைகளில், புதிய விவசாய முறைகளைப்பின் பற்றி, அவைகளை நடைமுறைக்குக் கொண்டு வந்து, பொது மக்களுக்கு எடுத்துக்காட்ட முடிகிறது. உண்மையிலேயே, இந்தக் கல்விச் சீரமைப்பு திட்டம், ஊர் சீரமைப்புத் திட்டமாக, சமுதாய சீரமைப்புத் திட்டமாக வளர்ந்து வருகிறது. ஆகவே, இந்த இயக்கத்திற்கு அங்கத்தினர்கள் உதவி மேன்மேலும் வேண்டும். உண்மையிலேயே குறைகளைச்

[Sri C. Subramaniam] [16th March 1959

சொன்னாலும், இயக்கத்திற்கு உதவ முடியும். இயக்கத்திற்கு ஆதரவு தந்தால் ஒரு சமயம் காங்கிரஸ் கட்சிக்கு ஆதரவு ஆகிவிடுமோ என்று யாரும் நினைக்க வேண்டாம். உண்மையிலேயே, இது குழந்தைகளின் திட்டம். குழந்தைகளுக்கு உதவும், அதனால் மக்களுக்கு உதவும் திட்டம். இது காங்கிரஸ் கட்சிக் காரியம் அல்ல. ஆகவே எல்லோரும் இதில் பங்கு கொள்ள இடம் இருக்கிறது.

பள்ளிக்கூடம் என்று சொல்லும் போது, ஒவ்வொரு கிராமத்திற்கும் பள்ளி வேண்டும். இப்பொழுது நாம் 300 ஜனத்தொகை உள்ள ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒரு பள்ளி என்று ஏற்பாடு செய்திருக்கிறோம். அதைக் கொஞ்சம் ஆராய்ந்து பார்க்க வேண்டியும் இருக்கிறது. 500-லிருந்து, 300 ஜனத்தொகை என்று செய்கிறோம். இந்த ஆண்டிற்குள்ளாக 300 ஜனத்தொகையுள்ள எல்லா கிராமத்திற்கும் பள்ளி என்று சொல்லுகிறோம். அந்த நிலைமை என்ன? 300 ஜனத்தொகையுள்ள ஒரு கிராமத்தில் அதிகமாக எவ்வளவு மாணவர்கள் வரமுடியும்.

30 அல்லது 35 ஆசிரியர்களைச் சேர்க்கலாம். ஒரு ஆசிரியர் இருந்து கொண்டு பள்ளியை நடத்த வேண்டியதாக இருக்கிறது. ஒரு வகுப்புக்கு ஒரு ஆசிரியர் தேவையாக இருக்கிறது. ஒரு ஆசிரியர் இருந்து கொண்டு ஐந்து வகுப்புகளை நடத்துவது என்பது முடியாது. இப்பொழுது ஒவ்வொரு கிராமத்திற்கும் பள்ளிக்கூடம் வேண்டும் என்று கேட்கிறார்கள். இதை நாம் கொஞ்சம் யோசனை செய்து பார்க்கவேண்டும். ஒரு திட்டத்தை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். அதை இந்தச் சபைக்கு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். சிறு சிறு கிராமங்களில் ஒன்று முதல் மூன்றும் வகுப்பு வரையில் படிக்கக்கூடிய பிள்ளைகள் இருக்கலாம். அவர்களுக்கு ஒரு மைல் சென்று பள்ளிக்கூடங்களில் படிக்க முடியாது. அதனால் இப்படிப்பட்ட குழந்தைகளுக்கு அந்தந்த கிராமங்களிலேயே பள்ளிக்கூடங்கள் இருக்க வேண்டியது அவசியம். மூன்றாவது வகுப்பு படித்துவிட்டு அதற்கு மேல் படிக்க வேண்டுமென்றால் அப்படிப்பட்ட குழந்தைகள் ஒரு மைல் சென்று படித்து வரக்கூடிய நிலையில் இருப்பார்கள். ஆகவே பக்கத்தில் ஒரு பெரிய கிராமத்தில் பெரிய வகுப்பு வைத்து அங்கே அவர்களைப் படிக்கச் சொல்லலாம். இப்படி ஒரு மைல் நடக்கக்கூடிய பிள்ளைகள் அந்த பெரிய கிராமங்களிலுள்ள பள்ளிகளுக்குச் சென்று மேல்வகுப்புப் படிக்க முன்வரலாம். அப்படிப்பட்ட பெரிய பள்ளிகளுக்கு ஐந்து ஆசிரியர்களை நியமித்து வகுப்புகளை நடத்தச் சொல்லலாம். சிறு சிறு வகுப்புகளைக் கொண்ட பள்ளிகளுக்கு ஒரு ஆசிரியரைக்கொண்டு பள்ளிகளை நடத்தச் சொல்லலாம். இதற்கு ஒரு திட்டம் வகுக்க வேண்டியதாக இருக்கிறது. இப்படி ஐந்து வகுப்புகளை வைத்து நடத்தக்கூடிய பள்ளிகளில் வேண்டிய மாணவர்கள் இருக்க வேண்டும். இந்த முறையில் நடவடிக்கை எடுப்பதற்கு முன்னதாக ஆரம்பக் கல்வி பலன் தரக்கூடிய கல்வியாக இருக்க வேண்டும். அப்படிப் படித்து விட்டு வெளியே வரக்கூடிய மக்களுக்கு ஐந்து வருஷப் படிப்பும் ஒரு பலன் தரக்கூடியதாக இருக்க வேண்டும். அந்தப் பலன் பெற்றோர்களுக்குக் கிடைக்கக்கூடிய அளவில் ஆரம்பக் கல்வியை திட்டமிட்டுத் தயாரிக்க வேண்டும் என்ற அடிப்படையில் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறோம்.

அதற்குப் பிறகு ஆறிலிருந்து பதினொவு வரையில் இருந்தது, அதாவது எட்டு வருஷமாக இருந்தது. அதை இப்பொழுது ஏழாக குறைத்திருக்கிறோம். அதன் பிறகு நான்கு வருஷங்கள் உயர் நிலைப்பள்ளியில் படிக்க வேண்டியதாக இருக்கிறது. இந்த எட்டு வருஷங்களுக்கு மேல் ஒரு வருஷம் படிக்க வேண்டியதாக இருக்கிறது. இன்னொரு வருஷமும் கொடுக்க வேண்டுமா என்ற முடிவு இன்னும் ஏற்படவில்லை. அதற்கு மேல் போகிறவர்களுக்குப் ப்ரி யூனிவர்சிட்டி எடுகேஷன். அந்த முறையில் ஆரம்பக் கல்வி ஏழு வருஷமும், உயர்நிலைப்பள்ளி நான்கு வருஷங்களும் என்று சட்டசபையில் முடிவு செய்யப்பட்டது. அந்த முடிவையும் ஏற்றுக்கொண்டிருக்கிறோம். இந்த முடிவை மற்ற ராஜ்யங்கள் ஏற்றுக்கொள்ள முதலில் மறுத்து விட்டார்கள். இன்றைக்குப் பார்த்தால் கேரளாவில் இதை முதலில் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். மைசூரில் 8 ப்ளஸ் 4 என்று இருந்ததை 7 ப்ளஸ் 4 என்ற திட்டத்தை ஒப்புகொண்டிருக்கிறார்கள்.

ஆந்திராவிலும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே தென் மண்டலத்தில் இந்தத் திட்டத்தை எல்லோரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இந்த அடிப்படையில் நம்முடைய கல்வி அமைப்பு ஏற்பட்டிருக்கிறது. இந்த அளவில் உயர் நிலைப்பள்ளியிலிருந்து கல்லூரிப் படிப்புக்குப் போக வேண்டியதாக இருக்கிறது. அதனால் ஆரம்பக் கல்வியை எல்லோருக்கும் விரிவாகக் கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. அது பலன்தரக்கூடிய அளவில் இருக்க வேண்டும். உயர் நிலை பள்ளிப்படிப்பு முடிந்த பிறகு தன்னுடைய வாழ்க்கையை நடத்துவதற்கு வேண்டிய தகுதியைப் பெற வேண்டுமென்ற அடிப்படையில் இந்த நான்கு வருஷப் படிப்பு அமைய வேண்டியதாக இருக்கிறது. இது சம்பந்தமாக பல முடிவுகள் எடுக்கப்பட்டு அதற்கு என்று பல திட்டங்கள் வகுக்கப்பட்டு தொழில் கல்வி எந்த அளவு இருக்க வேண்டும் என்றும், ஒரு முடிவுக்கு வந்து அதையும் நிறைவேற்ற முயற்சி எடுத்துக்கொண்டு வருகிறோம். இந்த வருஷத்திலிருந்து அந்த திருத்தப்பட்ட திட்டம் அமுலுக்குக்கொண்டு வர வேண்டும் என்று இருக்கிறோம். இப்படி அடுத்த வருஷம் அமுலுக்குக் கொண்டு வந்து இன்னும் நாலைந்து வருஷங்களுக்குள் திருத்தி அமைக்கப்பட்ட திட்டத்தை ராஜ்யம் பூராவுக்கும் அமுலுக்குக் கொண்டுவர முயற்சி எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். இந்த முறையில் புது கல்வித் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்து விட்டோம் என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த நிலையில் என்ன என்ன காரியங்களைச் செய்ய வேண்டுமோ அதற்கு முயற்சி எடுத்துக்கொண்டு வருகிறோம்.

இந்த அடிப்படையில் மொழிப் பிரச்னையையும் நீக்க வேண்டியதாக இருக்கிறது. இது சம்பந்தமாக பல்வேறு கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டது. கனம் சின்னதுரை போன்றவர்கள் ஹிந்தி வரவேண்டும் என்று சொல்கிறார்கள். அதே சமயத்தில் கனம் அன்பழகன் போன்றவர்கள் ஹிந்தி வேண்டாம் என்றும் அது மறைமுகமாகக் கொண்டு வரப்படுகிறது என்றும் கருத்துப்பட தெரிவிக்கிறார்கள். இதற்கு ஒரு முடிவு எடுக்க வேண்டும் என்பதற்காகத்தான் சட்ட சபை குழு ஒன்று உட்கார்ந்து ஆர அமர யோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்திருக்கிறது. அப்படிப்பட்ட நிலைமையில் ஹிந்தியானது மறை முகமாகக் கொண்டு வரப்படுகிறது என்றும் சொல்லப்படுகிறது. எல்லாக் கட்சிகளுக்கும் ஒப்புக்கொண்ட பிறகு கல்வித் திட்டத்தில் குழப்பம் இருக்க வேண்டியதில்லை. குழப்பமும், கிளர்ச்சியும் இல்லாமல் இருந்தால் எவ்வளவோ முன்னேற்றமடையலாம். கல்வி விஷயத்தில் குழப்பம் இருக்க வேண்டியதில்லை. கிளர்ச்சி செய்ய வேண்டும் என்றால் எப்பொழுதும் கிளர்ச்சி செய்து கொண்டே இருக்கலாம். மற்றவர்களை நிர்ப்பந்திக்க கிளர்ச்சி செய்து கொண்டே இருக்கலாம். ஒரு முடிவு எடுத்துக்கொண்ட பிறகும் கிளர்ச்சி செய்வது என்றால் அதற்கு முடிவே இருக்காது. அப்படிச் செய்வதும் சரியல்ல. சிலர் ஒரு கோடியில் இருக்கிறார்கள். பலர் மற்றொரு கோடியில் இருக்கிறார்கள். இந்த இரண்டு கோடிக்கும் மத்தியில் எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய அடிப்படையில் ஒரு முடிவு எடுக்கப்பட்டிருக்கிறது. அந்த முடிவின்பேரில் தான் மேற்கொண்டு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமேயொழிய திரும்பத் திரும்ப கிளர்ச்சி செய்து கொண்டிருப்பதில் பிரயோசனம் இல்லை. கிளர்ச்சி செய்வதாக இருந்தால் எந்த வகையிலும் கிளர்ச்சி செய்து கொண்டே இருக்கலாம். ஆகவே ஒரு முடிவுக்கு வந்த பிறகு கிளர்ச்சி செய்வதில் பிரயோசனம் இல்லை என்பதை தி. மு. க. தலைவர்களுக்கும் மற்றுமுள்ள அங்கத்தினர்களுக்கும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆங்கிலத்தை ஐந்தாவது வகுப்பிலிருந்து கொண்டு வரப்பட வேண்டும் என்றும், ஹிந்தி எட்டாவது வகுப்பிலிருந்து கொண்டு வரப்பட வேண்டும் என்றும் இப்பொழுது திட்டமிடப்பட்டிருக்கிறது. ஹிந்தியை ஏன் ஆரம்பத்திலிருந்தே கொண்டு வரக்கூடாது என்று சிலர் கேட்கிறார்கள். மற்றும் சிலர் ஹிந்தியே கூடாது என்றும் சொல்லுகிறார்கள். இப்படி மாறுபட்ட கருத்துக்கள் இருந்தால் எப்படி முன்னேற்றமடைவது? இப்படிப்பட்ட கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன. இதில் ஒரு ஒற்றுமை இருக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. ஆகவே கிளர்ச்சி நடத்தாமல் முடிவு செய்யப்பட்ட திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வர எல்லோரும் ஒத்துழைக்க வேண்டும் என்று பணிந்து வலியுறுத்திக்கொள்ளுகிறேன்.

[Sri C. Subramaniam] [16th March 1959

மொழிப் பிரச்னை சம்பந்தமாக சர்வகலாசாலை, கல்லூரிகளில் தமிழை எப்படிக் கொண்டு வரலாம் என்று முடிவு செய்வதற்காக இன்றைக்கு தமிழ் ஆராய்ச்சி வளர்ச்சி ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதிலுள்ள எல்லோருடைய அபிப்பிராயமும் என்ன என்பதைப் பார்த்து கடைசியில் தமிழ் மொழி நாட்டில் போதனா மொழியாக அமையும் என்பதில் கருத்து வேறுபாடுகள் இருக்க முடியாது. கடைசியில் தமிழ் தான் போதனா மொழியாக வந்து சேரும். அப்படித் தமிழ் நாட்டில் தமிழும், மைசூரில் கன்னடமும், ஆந்திராவில் தெலுங்கும், கேரளாவில் மலையாளமும் போதனா மொழியாக வரும் என்பதில் சந்தேகமே இல்லை. அப்படியேதான் வந்தும் சேரப்போகிறது. அதற்குப் போதிய வசதிகள் இல்லை, தமிழில் அதற்கு வேண்டிய சொற்கள் இல்லை, அவைகளை இன்னும் தயார் செய்யவில்லை என்றும் குறை கூறுகிறார்கள். இதை தாராளமாகச் செய்ய முடியும். இதைப்பற்றி தீவிரமாக ஆலோசனை செய்து நன்றாக பரிசீலனை செய்து ஒரு முடிவுக்கு வரவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். வைஸ்சான்சலருடைய ஆலோசனையையும் கேட்டு அதன் பிறகு முடிவு செய்ய வேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அவருடைய ஆலோசனையைக் கேட்டு எந்த அடிப்படையில் மாறுதல்கள் செய்ய வேண்டுமோ அதையும் செய்ய வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. எதிர் கால திட்டத்தையும் சங்கத்தின் முன்வைத்து பல்வேறு நடவடிக்கைகளும் எடுக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்திருக்கிறோம். கல்லூரிகளில் போதனா மொழி எப்படி இருக்க வேண்டுமென்பதிலும் குழப்பம் இருக்க வேண்டியதில்லை. ஆங்கிலம் கூடாது. உடனடியாக தமிழ் வேண்டும் என்பதைக் கட்டாயமாக ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் கல்வித் துறையில் குழப்பத்தை உண்டுபண்ணி அதன் மூலம் தரம் குறைந்து விடக்கூடாது என்பதுதான் எங்களுடைய கோரிக்கை. அதனால் கருத்து வேற்றுமை உள்ளவர்கள் தங்களுடைய கருத்து வேற்றுமைகளை மாற்றிக்கொள்ளும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். இதை படிப் படிப்படியாகச் செய்வார்கள். அதற்கு வேண்டிய பல்வேறு நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது. அதற்குப் பல உத்தரவுகளைப் போட்டு விடலாம். கல்வித் துறையில் அப்படி உத்தரவுகளைப் போட்டு நடவடிக்கைகளுக்குக் கொண்டு வரக்கூடாது என்பதற்காக வேண்டிய நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது. நமக்குள்ள லட்சியத்தை குழப்பம் இல்லாத வகையில் அடைவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது. இந்த முறையில் சர்வகலாசாலைகளில் பல திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வருகிறது.

சர்வகலாசாலை சம்பந்தப்பட்ட மட்டில் யூனிவர்சிட்டி கமிஷன் தலைவர் சி. டி. தேஷ்முக் அவர்கள் இந்தச் சர்க்காரைப்பற்றி குறை கூறியிருக்கிறார். 100–க்கு 50 அளவு ஆசிரியர்களுக்கு அதிமாகச் சம்பளம் கொடுக்க தயாராக இருக்கிறார்களா, பாக்கி இருக்கக்கூடிய 50–ல் பாதியாகிய 25–ஐ ராஜ்ய சர்க்காரும், பாக்கியை நிர்வாகத்தை நடத்தக்கூடிய மானேஜ்மெண்டும் ஏற்றுக்கொள்ள வேண்டும், இதற்கு ஒரு முடிவையும் இந்தச் சர்க்கார் சொல்லவில்லை. ஆரம்பத்திலிருந்தே மௌனமாக இருக்கிறார்கள் என்கிற முறையில் பக்கத்தில் பேசியிருக்கிறார். இந்த விஷயமும் சபைக்குத் தெரிந்திருக்க வேண்டும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இன்றைக்கு ஆசிரியர்களுக்கு எல்லாக் கட்டத்திலும் ஆரம்ப ஆசிரியர்களிடமிருந்து கடைசியில் பேராசிரியர்கள் வரை போதுமான சம்பள விகிதம் இல்லையென்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அந்தச் சம்பள விகிதத்தை அதிகப்படுத்தும்போது நான் விரும்புவது அதிலே எந்த விதக் குறையும் இல்லாமல் ஒவ்வொரு பேராசிரியர்களும், ஒவ்வொரு ஆரம்ப ஆசிரியர்களும் எந்தவிதக் குறையும் இல்லாமல் நல்ல முறையில் அந்தச் சம்பளம் முழுவதும் பயன்படக்கூடிய வகையில் ஏற்பாடு செய்யவேண்டும். ஆனால் அதற்கு மாறான சூழ்நிலை இன்றைக்குக் கல்லூரிகளில் இருக்கிறது. இன்றைக்கு நாம் 3 வருஷ பட்டப் படிப்பை ஏற்பாடு செய்திருக்கிறோம். அதன் காரணமாக இன்றைக்குப் பல கல்லூரிகளில் எண்ணிக்கை மிகவும் குறைந்திருக்கிறது என்பதை வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். இப்

16th March 1959] [Sri C. Subramaniam]

பொழுது இரண்டாகப் பிரித்திருக்கிறோம். பி. ஏ. வில் சரித்திரம், பூகோளம், பொருளாதாரம் போன்ற பாடங்களைப் படிக்கவேண்டும். கணிதம், விஞ்ஞானம் போன்ற பாடங்களைப் பி. எஸ். சி. படிப்பவர்கள் படிக்க வேண்டும்.

ஒவ்வொரு கல்லூரிகளிலும் எத்தனை மாணவர்களைச் சேர்த்துக் கொள்ளலாம் என்பதைப் பற்றிச் சர்வகலாசாலை அந்தந்த கல்லூரிகளுக்கு அனுமதி கொடுத்திருக்கிறார்கள். அதன் பிரகாரம் 1957-58-ம் ஆண்டில் மொத்தமாகக் கொடுக்கப்பட்ட அனுமதி எவ்வளவு என்று பார்த்தால்—பி. ஏ.–ல் 4,651 இடங்கள் எல்லாக் கல்லூரிகளிலும் சேர்த்துக் கொள்ள அனுமதி கொடுத்திருக்கிறார்கள். எத்தனை மாணவர்கள் வந்தார்கள் என்ற கணக்கைப் பார்த்தால்—எல்லாக் கல்லூரிகளிலும் சேர்த்து 1,355 மாணவர்கள்தான் பி. ஏ. படிக்க வந்தார்கள். அதாவது 29.1 சத விகித மாணவர்கள்தான் படிக்க முன் வந்தார்கள். இந்த 29 சத விகிதத்தினர் படிக்கவேண்டியவர்கள்தான். ஆனால் இவர்கள் எல்லோரும் ஒரு வகுப்பில் 30 பேர் இருக்கவேண்டிய இடத்தில் இந்த 1,355 மாணவர்களும் பரவலாக 55 காலேஜுகளில் இருக்கிறார்கள். அதன் காரணமாக என்ன நிலைமை ஏற்பட்டிருக்கிறது? ஒரே ஒரு மாணவன் ஒரு வகுப்பில் இருந்தாலும் அதனால் ஆசிரியர் எண்ணிக்கையைக் குறைக்க முடியாது. ஒரு மாணவனாக இருந்தாலும் அந்த ஒரு மாணவனுக்குகாக ஒரு ஆசிரியரை ஏற்பாடு செய்யவேண்டித்தான் இருக்கிறது. இந்த முறையில் 4,651 மாணவர்கள் என்ற கணக்கில் நியமிக்கப்பட்ட ஆசிரியர்கள் 1,355 பேருக்குச் சொல்லிக் கொடுக்கிறார்கள். இந்த அளவுக்கு ஆசிரியர்களுக்குச் சம்பளம் கொடுக்கப்பட்டு வருகிறது.

அதே மாதிரி பி.எஸ்.ஸி.யை எடுத்துக்கொண்டால், அனுமதிக்கப்பட்ட இடங்கள் 4,587. அதில் எத்தனை மாணவர்கள் 1957–58–ல் சேர்ந்திருக்கிறார்கள் என்று பார்த்தால் 2,912 பேர்தான் சேர்ந்திருக்கிறார்கள். 63.4 சத விகிதம். 36 சத விகிதம் குறைவு. பல கல்லூரிகளில் 40–க்கு 12, 120–க்கு 92, 120–க்கு 70 என்ற எண்ணிக்கையில்தான் மாணவர்கள் சேர்ந்திருக்கிறார்கள். சில கல்லூரிகளில்—அதுவும் பிரசித்தி பெற்ற கல்லூரிகளில், லயோலா காலேஜில் கூட 240–க்கு 33 பேர்தான் சேர்ந்திருக்கிறார்கள். போட்டி போட்டுக்கொண்டு சேருகிற கல்லூரிகளிலேயே இந்த நிலைமை இருந்து கொண்டிருக்கிறது.

இதைப் பற்றி ஆராய்வதற்காக கல்லூரி முதல்வர்களைக் கூட்டி மாநாடு நடத்தி, "இந்த நிலைமையைத் தவிர்க்க என்ன செய்வது ?" என்று கேட்டேன். " ஒரு வருஷந்தான் இந்த நிலைமை இருக்கும், அடுத்த வருஷம் இந்த நிலைமை மாறிவிடும். அப்பொழுது செப்டம்பர் பரீட்சையில் பாஸ் பண்ணினவர்களும் இருப்பார்கள். ஆகவே மாணவர்களின் எண்ணிக்கை அடுத்த ஆண்டில் அதிகரிக்கும். ஆகவே இந்தப் பிரச்னையை அடுத்த ஆண்டு வரை ஒத்தி வையுங்கள் " என்று அந்தக் கல்லூரி முதல்வர்கள் சொன்னார்கள். "ஒரு வருஷம் பொறுத்துப் பார்க்கலாம்" என்று நான் சொன்னேன்.

அதற்குப் பிறகு இன்றைய நிலைமை என்ன ? 1958–59–ல் பி.ஏ.யில் அனுமதிக்கப்பட்ட இடங்கள் 4,651லிருந்து 5,206 ஆக உயர்ந்தது. எத்தனை மாணவர்கள் சேர்ந்திருக்கிறார்கள் என்று பார்த்தால் 1,831 மாணவர்கள்தான் சேர்ந்திருக்கிறார்கள். மார்ச், செப்டம்பர் பரீட்சைகள் எல்லாம் முடிந்ததும் அத்தனை மாணவர்கள்தான் சேர்ந்திருக்கிறார்கள். அதே மாதிரி பி.எஸ்.ஸி-யில் அனுமதிக்கப்பட்ட இடங்கள் 1958–59–ல் 4,587 இருந்து 5,243 ஆக உயர்ந்திருக்கிறது. ஆனால் சேர்ந்த மாணவர்களின் எண்ணிக்கை 3,915 தான். 74·7 சத விகிதம்.

இந்த நிலைமை இருக்கின்ற காரணத்தினால்தான் நான் கல்லூரி முதல்வர்களை எல்லாம் கூட்டி இருக்கின்ற நிலைமையை எடுத்துச் சொன்னேன். 5,000 பேருக்கு ஆசிரியர்களை வைத்துக்கொண்டு, 2,000 மாணவர்களுக்கு மட்டுமே பரவலாக அவர்கள் சொல்லிக் கொடுக்கிறார்கள்.

அவர்கள் எல்லோருக்கும் சம்பளம் கொடுக்க வேண்டிய நிலைமை இருந்து வருகிறது. ஆசிரியர்களுக்கு சம்பளத்தை உயர்த்த வேண்டுமென்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் இந்த முறையில் அவர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளம் விரயமாவதை யாரும் ஒப்புக்கொள்ள முடியாது. இதைப் பற்றி "நீங்களாகவே ஒரு கமிட்டியை நியமித்து இதை எப்படித் தீர்ப்பது என்பதற்கான யோசனைகளைக் கூறினால் பரிசீலனை செய்து பார்க்கிறேன்" என்று அந்தக் கல்லூரி முதல்வர்கள் மாநாட்டில் சொன்னேன். இதுவரை எந்தவித யோசனையும் வரவில்லை. ஞாபகப்படுத்தி எழுதினேன். அதற்கும் பதில் வரவில்லை. அதற்குப் பதிலாக "இந்த 25 சத விகிதம் மானியம் கொடுப்பது பற்றி சர்க்கார் முடிவு என்ன?" என்று கேட்டு கடிதம் வந்திருக்கிறது. ஆனால் இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்கான எந்த வித யோசனையும் வரவில்லை. யூனிவர்ஸிடி கிராண்ட் கமிஷன் 50 சத விகிதம் கொடுக்கத் தயாராக இருக்கும்போது சர்க்கார் 25 சத விகிதம் கொடுக்கத் தயங்கவில்லை. ஆனால் இப்படி விரயமாகும் நிலையில் இன்னும் அதிகப்படுத்துவது சரியாகத் தோன்றவில்லை. "அதனால் பரவாயில்லை; 5,000 மாணவர்களுக்கு இடம் இருக்கும்போது 2,000 மாணவர்கள் மட்டுமே இருந்தாலும் பரவாயில்லை" என்று நீங்கள் முடிவு செய்தால் அது பற்றி எனக்கு ஒன்றும் ஆட்சேபணை இல்லை. கடைசியாக முடிவு செய்ய வேண்டியவர்கள் நீங்கள்தான். பணம் விரயமாகாமல் பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு நம்மிடம் இருக்கிறது. ஆகவே இந்த மூன்று வருஷப் படிப்பு என்ற திட்டப்படி நல்ல முறையில் பரிசீலனை செய்து எந்தெந்தக் கல்லூரிகளில் எத்தனை மாணவர்கள் ஒவ்வொரு பிரிவிலும் என்று பங்கு போட்டுக்கொள்வார்களானால், இது கொஞ்சம் நல்ல முறையில் நடக்க வழி உண்டாகும். இப்பொழுது 5,000 மாணவர்கள் என்ற கணக்கை வைத்துக்கொண்டு அந்த அளவில் கட்டிடங்கள் கட்ட ஆரம்பித்திருக்கிறார்கள். அந்த அளவுக்கு "லாபரடரி" ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கூறுகிறார்கள். நூலகங்கள் ஏற்படுத்த வேண்டுமென்று கூறுகிறார்கள். ஆகவே, இதில் கொஞ்சம் விரயமாக இடம் இருக்கிறது என்பதை நம்மால் உணர்ந்துகொள்ள முடிகிறது. அப்படி விரயம் ஆகிற நிலைமை இருக்கிற காரணத்தினால், தான் சர்க்கார் கிராண்ட் கொடுக்க முன்வரவில்லை. ஆசிரியர்களுக்குச் சம்பளத்தை அதிகப்படுத்திக் கொடுக்கக் கூடாது என்ற மனப்பான்மை ஆட்சியிலுள்ள எங்களுக்குக் கிடையாது. தனிப்பட்டவர்கள் கொடுக்கும்போது சர்க்காரின் கீழ் இருக்கக் கூடிய கல்லூரி ஆசிரியர்களுக்கும் கொடுத்தாக வேண்டும். கல்வி அதிகாரிகளுக்கும் கொடுத்தாகவேண்டும். இதை எல்லாம் பரிசீலனை செய்து முடிவு எடுக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். அதனால் காலதாமதம் ஆகிறது.

அடுத்தபடியாக, தொழில் கல்வியை எடுத்துக்கொண்டால், அதற்காக ஒரு டைரக்டரை நியமித்து அதில் இருக்கக் கூடிய பலவேறு பிரச்னைகளைக் கவனித்து நடவடிக்கை எடுக்க ஏற்பாடு செய்திருக்கிறோம். அதன் மூலமாக நான்கு முறையில் தொழில் கல்வி முன்னேறி வருகிறது என்பதற்கான புள்ளி விவரங்களை முன்பே கொடுத்திருக்கிறேன். திருப்பிச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. எல்லாவற்றுக்கும் மேலாக தொழிற் கல்வி மிகவும் முக்கியம். அதற்காக ஹையர் டெக்னாலாஜிகல் இன்ஸ்ட்டிடூட் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. எஞ்சினீயர்கள் மட்டுமல்ல; அதற்கும் மேல் படிக்கக் கூடியவர்கள், புதிய சக்தியைக் கண்டு பிடிக்கக் கூடியவர்கள், புதிய இயந்திரங்களைக் கண்டுபிடிக்கக் கூடியவர்கள், எல்லோரும் தொழில் வளர மிகவும் தேவைப்படுகிறார்கள். எஞ்சினீயரிங் படிப்போடு கூட ஆராய்ச்சிப்படிப்பு மிகவும் அவசியம். அந்த முறையில் ஹையர் டெக்னாலாஜிகல் இன்ஸ்டிடுட்டை ஏற்படுத்தி இருப்பதை மிகவும் வரவேற்கிறார்கள். அதன் மூலம் மிகவும் சாதாரண தொழிற் கல்வி, உயர்ந்த தொழிற் கல்வி, ஆராய்ச்சி நடக்கும் கட்டங்கள் ஆகியவைகள் மேலும் மேலும் பெருகும் என்று நினைக்கிறேன். அதிலும் முக்கியமாக தொழில் வளர்ச்சி பெருக வேண்டுமென்று நினைக்கும்போது அந்த அளவு தொழில் பெருக வேண்டுமென்ற அடிப்படையில் திட்டமிட்டுப் பல காரியங்களைச் செய்து வருகிறோம். அந்த அளவுக்குத் தொழில் கல்வி பெற்றவர்கள் எண்ணிக்கை பெருக வேண்டும். இப்பொழுது இருக்கக் கூடிய அளவு போதுமானதல்ல. அடுத்த மூன்றுவது ஐந்து ஆண்டு

16th March 1959] [Sri C. Subramaniam]

திட்ட காலத்திற்குள் குறைந்தது இப்பொழுது இருப்பதைப் போல் இரண்டு பங்காவது வசதிகள் பெருகும் என்பதில் சந்தேகம் இல்லை. ஆகையால் அடுத்த ஐந்தாண்டுத்திட்டத்திற்கு எஞ்சினீயர்கள் வேண்டுமென்று சொன்னால் உடனே எஞ்சினீயர்கள் வந்துவிட முடியாது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு எத்தனை எஞ்சினீயர்கள் வேண்டியதாக இருக்கும் என்பதற்கான கணக்கைப் பார்த்து புதிய கல்லூரிகள் அவசியம்மென்றால் அதற்கான வேலைகளை நாம் இப்பொழுதே தொடங்க வேண்டும்.

இன்னொன்று முக்கியமாகக் குறிப்பிட விரும்புகிறேன். பாலிடெக்னிக்குகளை இப்பொழுது அதிகமான அளவில் ஆரம்பித்து வருகிறோம். பதினேழு பாலிடெக்னிக்குகள் இப்பொழுது நடந்து வருகின்றன. புதிதாக 3 பாலிடெக்னிக்குகள் கன்னியாகுமரி, வட ஆற்காடு, செங்கல்பட்டு ஆகிய ராஜ்யங்களில் ராஜ்யத்துக்கு ஒன்று வீதம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.. அதற்கு அடுத்தாற்போல் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கடைசி வருஷத்தில் சில பாலிடெக்னிக்குகளை ஆரம்பிக்க முடியும் என்று நினைக்கிறேன். மற்ற இடங்களிலும் அவசியம் இருக்கிறது. எங்கெங்கு அவசியம் என்பது பற்றி அப்பொழுது ஆராய்ந்து முடிவு செய்துகொள்ளலாம். என்ஜினீயரிங் பட்டப் படிப்பு பெற்றவர் ஒருவர் வந்தால் குறைந்த பட்சம் 4 பேர் பாலிடெக்னிக்குகளில் படித்தவர்கள் வெளி வருகிறார்கள் என்ற நிலைமை இருந்தால்தான் படிப்பு வீணாகாத நிலைமை இருக்கும், இல்லையென்றால் படிப்பு வீணாகிவிடும் என்பதற்கான கணக்கு இருக்கிறது. இல்லையென்றால் சாதாரணமான டிப்ளோமா பெற்றவர்கள் செய்யக் கூடிய வேலையைக் கூட எஞ்சினீயரிங் பட்டப் படிப்பு படித்தவர்கள் செய்யக் கூடிய நிலைமை ஏற்பட்டுவிடும். ஒரு இஞ்சினீயர் வேலை செய்தால் 4 டிப்ளோமா பெற்றவர்கள் தேவை என்ற கணக்கில் பாலிடெக்னிக்குகளை அதிகப் படுத்த வேண்டும். அதற்கு மேல் கல்லூரியில் படித்துவிட்டு வேலை இல்லை என்று சொல்வதற்குப் பதிலாக பல்வேறு தொழிற் கல்வியை ஏற்படுத்த வேண்டும் என்பதும் நோக்கம். அதற்காக அநேகம் தொழிற் கல்லூரிகள், பாலிடெக்னிக்குகள் எல்லாம் ஏற்படுத்த வேண்டியவர்களாக இருக்கிறோம். இப்படிப் பல்வேறு காரியங்களைச் செய்துகொண்டிருக்கும் போது பல்வேறு குறைகள் நமக்கு உண்டாகின்றன. ஆங்காங்கு குறைகளையும் நீக்குவதற்கு நாம் முயற்சி செய்து வருகிறோம்.

குறிப்பாக இரண்டு மூன்று நாட்களாக இங்கு ஒரு விஷயமும் சொல்லப் பட்டது. பாட புத்தகம் சம்பந்தமாக ஏற்பட்ட ஒரு குறையைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அந்தக் குற்றம் ஏற்படாமல் பார்த்துக்கொண்டிருக்க வேண்டிய கடமை நம்முடையது. ஐம்பதாயிரம் மாணவர்கள் அதனால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதை உணர்கிறேன். அந்த மாதிரிக் குற்றங்கள் இனி ஏற்படாமல் இருப்பதற்கும்—இந்த அனுபவத்தை வைத்துக்கொண்டு—தக்க நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டிருக்கிறோம். இதன் மூலமாகச் சர்க்கார் எந்தக் காரியத்தை எடுத்துக்கொண்டாலும் இப்படித் தான் ஆகும் என்ற முடிவுக்கு வந்துவிடக் கூடாது. சில பேர் நினைக்கிறார்கள். பத்திரிகையிலும் எழுதுகிறார்கள். பாட புத்தகம் வெளியிடுகிறவர்கள் சர்க்கார் இந்தக் காரியத்தைக் கைவிட்டுவிட வேண்டும் என்பதற்கு எவ்வளவு முயற்சி செய்கிறார்கள் என்று எனக்குத் தெரியும். ஆனால் ஒரு விஷயத்தைத் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்கிறேன். ஒரு அதிகாரி கலெக்டராக நியமிக்கப்பட்டவுடனேயே அவருக்கு ஏராளமான தந்திகள்—சேலத்திற்குப் போய்ச் சேர்ந்தவுடனே—டெக்ஸ்ட் புக் பப்ளிஷர்களிடமிருந்து வந்தது என்று குறிப்பிட்டார். அவருக்கே ஒன்றும் புரியவில்லையாம். ஆனால் பாட புத்தகங்களை அந்த அந்த ஜில்லா கலெக்டர்கள்தான் அங்கீகரிக்க வேண்டும் என்று இப்போது புதிதாக வருகிற ஏற்பாடு அப்புறம்தான் அவருக்கே தெரிந்ததாம். அதற்கு முன்னாலேயே—அவர் தயவைப் பெற வேண்டும் என்று—எவ்வளவு ஊக்கமாக, ஆர்வம் செலுத்தி, பிரசுரகர்த்தர்கள் நடந்துகொள்கிறார்கள் என்பதைப் பார்க்கலாம். ஆனால், இந்த மன்றத்தில் ஒரு விஷயத்தை உறுதியாகச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பாட புத்தகங்களை அரசாங்கமே பிரசுரிக்க வேண்டும் என்கிற கொள்கையில் எவ்வித மாறுதலும் கிடையாது. முதல்

[Sri C. Subramaniam] [16th March 1959

படியாக ஆரம்ப வகுப்புப் பாட புத்தகங்களை அரசாங்கமேதான் வெளியிடப் போகிறது. அந்தக் கொள்கையை மாற்றுவதாக இல்லை. அதற்காகவே தனியாக ஒரு அச்சகம் ஏற்பட வேண்டும் என்ற முறையில் வெளி நாட்டிலிருந்து அதைத் தருவிக்க அந்நியச் செலவாணியும் பெற்றாகி விட்டது. அச்சு இயந்திரத்தையும் சீக்கிரமாகத் தருவித்து நாமே அச்சிடு வதற்கு வேண்டிய முயற்சிகளும் செய்யப்பட்டு வருகிறது. அடுத்த ஆண் டுக்குள் செயல்படத் தொடங்கிவிடலாம். பாட புத்தகங்களை சர்க்காரே அச்சிடுவது என்றால் சர்க்கார் தங்கள் கொள்கையைப் பரப்புவதற்காக இந்தத் திட்டத்தைப் போடவில்லை. சர்க்காரில் உள்ள அரசியல் வாதிகள் யாரும் புத்தகம் எழுதப் போவதில்லை. மந்திரிகள் யாரும் புத்தகங்களை எழுதப்போவதில்லை. இந்தக் கல்வித் துறையில் உள்ள அறிஞர்கள், புல வர்கள்—மேதைகள்—இவர்களைக்கொண்டு சர்க்கார் வரையறுத்திருக்கிற பாட திட்டங்களை ஒட்டி இந்தப் புத்தகங்களில் எவ்வித குறைபாடுகளும் இன்றி சர்க்காரே அச்சிடுவதற்கு முடிவு செய்தாகிவிட்டது. பிழைகள் ஏற்படாமல் இருப்பதற்கும், வேண்டிய நடவடிக்கைகளை மேற்கொள்ளப் பட்டிருக்கின்றன. அங்கத்தினர்கள் எல்லோருடைய பூரண ஒத்துழைப்பும் இருக்கும் வரையில் இத் திட்டத்தை மிக வெற்றிகரமாக நிறைவேற்ற முடி யும் என்கிற நம்பிக்கை எனக்கு உண்டு.

மேலும் இன்னொன்று. சோஷலிஸ சமுதாயத்தை உருவாக்க வேண்டும் என்கிற கொள்கையை வகுத்துக்கொண்டு நாம் செயல்படுகிறோம். நம்முடைய கொள்கையின் பிரகாரம் பெரியவர்களுடைய மனதை மாற்றி விடுவது கஷ்டம். குழந்தைகளுடைய மனோபாவத்தைத்தான்—அதுவும் குழந்தைப் பருவத்தில் இருந்தே இந்தக் கொள்கை அடிப்படையில் நன் றாக வளர்க்க வேண்டும். சாதி பேதமற்ற, ஏற்றத் தாழ்வற்ற சமுதாய உணர்ச்சியை சின்னஞ்சிறு பருவத்திலிருந்தே அவர்களிடத்தில் உருவாக்கி விட வேண்டும் என்கிற கொள்கை அடிப்படையில் தான் நமது கல்வித் திட்டத்தை உருவாக்கிக்கொண்டு நாம் செயல்பட்டாக வேண்டும். கல்வி இலாகா அதற்கான முயற்சிகளை எல்லாம் எடுத்துக்கொண்டாக வேண்டும். கல்வி இலாகாவின் மூலமாகத்தான் உண்மையிலேயே இப்படிப்பட்ட கொள்கையை—மனோபாவ மாற்றத்தை உண்டாக்க முடியும் என்பதை சபையில் உள்ள அங்கத்தினர்கள் யாவரும் உணர்வார்கள். அப்படிப்பட்ட பெரும் பணியாற்றி வருகிற இந்த இலாகாவுக்கு 13 கோடி ரூபாய் சொச்சம் செலவு செய்வதை அதிகம் என்று யாரும் சொல்ல மாட்டார்கள். ஆகவே 100 ரூபாய் குறைக்க வேண்டுமென்ற வெட்டுப் பிரேரணையை வாபஸ் பெற்றுக்கொண்டு இந்த மானியத்தை ஏகமனதாக எல்லோரும் ஏற்று அங்கீகாரம் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள் கிறேன்.

1-36 p.m.

DEPUTY SPEAKER : The question is—

'That the allotment of Rs. 13,61,63,000 under Demand XVI —Education—be reduced by Rs. 100.'

The cut motion was put and lost.

DEPUTY SPEAKER : The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 13,61,63,000 under Demand XVI—Education.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : The House will now rise for lunch and meet again at 3 p.m. to-day.

The House then rose.

**(After Lunch—3 p.m.)**

(Mr. Speaker in the Chair.)

III.—GOVERNMENT BILL.

THE MADRAS DISTRICT MUNICIPALITIES (EXTENSION TO THE TRANSFERRED TERRITORY) BILL, 1959 (L.A. BILL NO. 1 OF 1959).

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: Mr. Speaker, I beg to move—

'That the Madras District Municipalities (Extension to the Transferred Territory) Bill, 1959 (L.A. Bill No. 1 of 1959) be taken into consideration.'

Sir, at present, the Travancore District Municipalities Act, 1116 (Travancore Act XXIII of 1116) is in force in the Kanyakumari district and the Shencottah taluk of the Tirunelveli district. All the five municipalities in the transferred areas are governed by this Act.

There is no provision in the State Reorganization Act empowering a State Government to extend their laws to territories transferred to that State on reorganization. What is contemplated in that Act is only an adaptation or modification of the law in force in the territories so transferred. Hence it will not be possible to extend the laws in force in the State of Madras to the transferred territories and repeal the law in force in those territories under that Act.

In view of this legal position, the Travancore District Municipalities Act was examined to find out what adaptations it required under the States Reorganization Act. It was found that there were many differences between the provisions of the Travancore District Municipalities Act and the Madras District Municipalities Act.

It has therefore been considered necessary that the Madras District Municipalities Act may be extended to the transferred areas by undertaking legislation duly making modifications in the Madras District Municipalities Act to suit local conditions in the transferred area and that the Travancore District Municipalities Act should be repealed. It is therefore necessary that we should proceed with the proposed legislation. I therefore move that the Bill be taken into consideration.

MR. SPEAKER: Motion moved—

'That the Madras District Municipalities (Extension to the Transferred Territory) Bill, 1959 (L.A. Bill No. 1 of 1959) be taken into consideration.'

SRI T. S. RAMASWAMY PILLAI: Sir, I move—

'That the Madras District Municipalities (Extension to the Transferred Territory) Bill, 1959 (L.A. Bill No. 1 of 1959) be referred to a Select Committee consisting of . . . Members of the Assembly.'

SRI M. JAGANNATHAN: Sir, I second it.

MR. SPEAKER : Amendment moved—

That the Madras District Municipalities (Extension to the Transferred Territory) Bill, 1959 (L.A. Bill No. 1 of 1959) be referred to a Select Committee consisting of . . . Members of the Assembly.'

* SRI T. S. RAMASWAMY PILLAI : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை ஒரு பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்ப வேண்டும் என்று என் திருத்தம் கூறுகிறது. இந்தச்சபையில் அநேகமாக இப்போதுதான் கோரம் சேர்ந்திருக்கிறது. கோரம் சேருவதற்கு சிறிது நேரம் ஆனது என்பதை கனம் சபாநாயகர் அறிந்திருப்பார். இப்போது கன்னியாகுமரி அங்கத்தினர்கள் பலர் இங்கே இல்லை. கனம் மந்திரி கன்னியாகுமரியிலிருந்துதான் வருகிறார். இந்த மசோதாவில் உள்ள அம்சங்கள் கன்னியாகுமரிப் பிரதேசத்திற்கு விஸ்தரிக்கப்படும்போது அப் பகுதி எவ்வாறெல்லாம் பாதிக்கப்படும் என்பதைப் பற்றி எல்லாம் சாங்கோ பாங்கமாக விவாதிக்க வேண்டும். மேலும் எவ்வளவு ஜனத்தொகை உள்ள இடங்களில் முனிசிபாலிடிகள் இருக்கின்றன, இந்த விதிகள் கன் னியாகுமரி பிரதேசத்திற்கு எவ்வாறு பொருந்தும்—சில முனிசிபாலிடி களில் பாபுலேஷன் குறைவாக இருக்கிறது, சில முனிசிபாலிடிகளில் வருமானம் குறைவாக இருக்கிறது—எந்த முனிசிபாலிடிகளை எவ்வாறு எங்கே சேர்த்திருக்கிறோம் என்பனவற்றை எல்லாம் சாங்கோபாங்கமாக விவாதிக்க வேண்டும். இன்னும் பல விஷயங்களையும் சாங்கோபாங்க மாக ஆராயவேண்டும். எனவே இதை ஒரு பொறுக்குக் கமிட்டிக்கு விட வேண்டும். வேண்டுமானால், பொறுக்குக் கமிட்டியின் ரிப்போர்ட்டை இங்கே 31-ம் தேதிக்கு முன்பு சமர்ப்பிக்க வேண்டுமென்றால், அதற்குரிய நிபந்தனையுடன் இம் மசோதாவைப் பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பலாம். எனவே இதை பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்ப வேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

*THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : கனம் சபாநாயகர் அவர்களே, முனிசிபாலிடிகளைப் பொறுத்த வரையில், 1920-ம் வருஷத்திய சென்னைச் சட்டம் இங்கே அமுலில் இருக்கிறது. சென்னையி லுள்ள மற்றப் பகுதிகளுக்கு அமுலாகும் இந்தச் சட்டத்தையே கன்னியா குமரி, செங்கோட்டை பகுதிகளுக்கும் விஸ்தரித்தால் காரியாதிகளைக் கவ னிப்பது இலகுவாக இருக்கும். இப்போது கன்னியாகுமரி பகுதியில் வேறு சட்டங்கள் அமுலில் இருப்பதால் அங்குள்ள காரியங்களைக் கவனிப்பதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. எனவே எல்லாப் பகுதிகளிலும் ஒரே சட்டம் அமு லில் இருக்க வேண்டுமென்ற நோக்கத்துடன்தான் இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. கன்னியாகுமரியில் எப்போதுமே ஒரு தனிப் பட்ட சட்டம் இருக்க வேண்டுமென்று அரசாங்கம் விரும்பவில்லை. அங்கே பல விவகாரங்களில், திருவிதாங்கூர், சட்டப்படி நடக்க வேண்டுமா அல் லது சென்னைச் சட்டப்படி நடக்க வேண்டுமா என்ற சந்தேகம் ஏற்பட்டு வரு கிறது. இச் சிக்கல்களை நீக்குவதற்காகவே இந்த மசோதா கொண்டுவரப் பட்டிருக்கின்றது.

கழிந்த சட்ட சபையில் இதைக் கொண்டுவந்தபோது இதைப் பின்னால் எடுக்க வேண்டுமென்று இப்பொழுது பேசிய அங்கத்தினரே பேசினார். காலதாமதம் ஏற்படுவதால் இந்தச் சட்டங்களை அங்கு அமுலுக்குக் கொண்டு வர முடியாமல் பல கஷ்டங்கள் நேரிடுகிறது. ஆகவே, இந்த இணைப்புச் சட்டத்தை உடனடியாகக் கொண்டுவர வேண்டியிருப்பதால், இதற்கு எதிரா கக் கொடுத்திருக்கும் பிரேரணையை நான் ஏற்றுக்கொள்வதற்கில்லை.

MR. SPEAKER : Is the hon. Member Ramaswamy Pillai withdrawing his amendment?

SRI T. S. RAMASWAMY PILLAI : I am not pressing my amendment, Sir.

The amendment was, by leave, withdrawn.

MR. SPEAKER : The question is—

That the Madras District Municipalities (Extension to the Transferred Territory) Bill, 1959 (L.A. Bill No. 1 of 1959) be taken into consideration.

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clause 2 was put and carried.

*Clause 3.*

MR. SPEAKER : The motion is—

That clause 3 do stand part of the Bill.

SRI S. LAZAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மூன்ருவது பிரிவில் இருக்கக்கூடிய ஒரு சில விவரங்களை மட்டும் இச் சபையின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். இரண்டாவது உப பிரிவில்,

'Any reference in the principal Act to a law which is not in force in the transferred territory on the said date shall, in relation to the transferred territory, be construed as a reference to the corresponding law if any, in force in the transferred territory on the said date'.

என்று அமைந்திருக்கிறது. இப்பொழுது இருக்கக் கூடிய பிரின்ஸிபல் ஆக்ட்டில், அதாவது மெட்ருஸ் டிஸ்ட்ரிக்ட் முனிஸிபாலிடீஸ் ஆக்ட்டைப் பூராவையும் பரிசீலனை செய்து பார்த்தால், இந்தச் சட்டத்தில் வேறு எந்தெந்தச் சட்டங்களைப் பற்றி "ரெபர்" செய்யப்பட்டிருக்கிறது என்று பூராவையும் படித்துப் பார்த்தால் தெரிந்துகொள்ள முடியும். அதில் இருக்கக் கூடிய அத்தனை சட்டங்களுக்கும் "கரஸ்பாண்டிங்" சட்டம் என்னவென்றும், அதன் லிஸ்ட் இப்பொழுது இல்லை. இந்தத் திருத்த மசோதாவிலேயே எற்கனவே முன் இருக்கிற ஆக்ட்களுக்கு கரெஸ்பாண்டிங் சட்டங்கள் என்னவென்று ஒரு ஷெடியூலை இதில் சேர்த்திருந்தால் சந்தேகத்திற்கு இடமில்லாமல் அமைந்திருக்கும் என்பதே எனது தாழ்மையான கருத்து. அடுத்தபடியாக, மூன்ருவது உப பிரிவிலே

'Any reference to the Travancore District Municipalities Act, 1116 (Travancore Act XXIII of 1116), in any existing law which continues to be in force in the transferred territory after the said date shall, in relation to that territory, be construed as a reference to the principal Act'.

என்று இருக்கிறது. இந்த உப பிரிவைப் பற்றி எனக்கு ஒரு சந்தேகம் எற்படுகிறது. "எக்ஸிஸ்டிங் லா" என்னவென்று வரையறுக்கப்படும் போது இரண்டாவது பிரிவின் "பி" உப பிரிவில் எந்தச் சட்டமன்றமோ, வேறு ஒரு அதிகாரியோ, ஒரு சட்டம், ஆர்டினன்ஸ், அல்லது ப்ராக்ளமேஷன் விடுத்திருந்த போதிலும் இந்த டெபனிஷனில் இப்பொழுது எக்ஸிஸ்டிங் லா என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதைப் பார்க்கும்போது வேறு எந்தெந்தச் சட்டங்கள் அந்தப் பகுதியில் இன்று அமுலில் இருக்கிறதோ அந்தச் சட்டங்களில் எல்லாம் திருவாங்கூர் ஆக்டைப் பற்றிக் குறிப்பு இருந்தால் அந்த இடங்களில் எல்லாம் மதருஸ் டிஸ்ட்ரிக்ட் முனிஸிபாலிடீஸ் ஆக்ட் என்ற சட்டத்தைக் குறிப்பதாக இருக்கும் என்ற முறையில் மூன்ருவது உப பிரிவு அமைந்திருக்கிறது. அப்படிப் பார்க்கிறபோது வளைய சட்டங்களில் என்று சொல்கிறபோது ஒரு வேளை மத்திய அரசாங்கம்

இயற்றக் கூடிய சட்டங்களைக் கூட அது குறிக்குமோ என்ற ஐயம் ஏற்படுகிறது. அப்படிப் பார்க்கும்போது இன்றையதினம் அமுலில் உள்ள ஏனைய சட்டங்களில் எந்தெந்த இடத்தில் திருவாங்கூர் டிஸ்ட்ரிக்ட் முனிஸிபாலிடீஸ் ஆக்ட் என்றிருக்கிறதோ அந்த இடத்தில் மதராஸ் டிஸ்ட்ரிக்ட் முனிஸிபாலிட்டீஸ் ஆக்ட் என்று வாசிக்க வேண்டுமென்று அமைக்கும்போது அந்தச் சட்டங்கள் ஒவ்வொன்றையும் திருத்துவதற்குப் பதில் இந்தச் சட்டத்திலேயே திருத்துவது என்பது நல்ல முறையில் இருக்குமா என்பதைப் பரிசீலனை செய்ய வேண்டும். அவசியம் ஏற்படுகிறபோது ஒவ்வொரு சட்டத்தையும் தனித் தனியாக மாற்றி அமைப்பது சரியாக இருக்குமே தவிர, எல்லாச் சட்டங்களுக்கும் சேர்த்து ஒரே திருத்தமாக இந்தச் சட்டத்தில் ஒரு திருத்தம் கொண்டுவருவது எந்த அளவு சரியாக இருக்கும் என்பதைப் பற்றி எனக்கு ஒரு சந்தேகம் ஏற்படுகிறது. அடுத்தபடியாக நாலாவது பிரிவில்,

**'Any reference by whatever form of words on any existing law to any authority competent at the date of the passing of that law . . .** என்று இருப்பதை அர்த்தம் செய்து பார்க்கிறபோது இப்பொழுது இருக்கக் கூடிய எந்தச் சட்டத்தைப் பற்றியும் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால் இதில் நாம் திருத்தம் கொண்டுவருவதற்கு முக்கிய நோக்கம் ஏற்கனவே இருக்கிற மதராஸ் டிஸ்ட்ரிக்ட் முனிஸிபாலிடீஸ் ஆக்ட் என்ற சட்டத்தின் கீழ் எந்தெந்த அதிகாரி என்று குறிப்பிட்டிருக்கிறோமோ அந்த அதிகாரியைப் பற்றிய விளக்கம் இந்த உப பிரிவில் அமைகிறது. எந்த சட்டத்தைத் திருத்த இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறதோ அந்த சட்டத்தின் கீழ் அமைக்கப்படுகிற அதாரிட்டி என்றிருந்தால் அது பொருத்தமாக இருக்குமே தவிர, **'Any authority competnnt at the date of the passing of that law'** என்று எல்லாச் சட்டத்தையும்குறிப்பிடத் தக்க முறையில் இது அமைந்திருக்கிறது. ஆகவே **'Any reference by whatever form of words in any existing law to any authority wlth respect to the Travancore Act . . .** என்றிருந்தால் அது மிகவும் பொருத்தமாயிருக்கும். **'any authority competent at the date of the passing of that law'** என்று இருப்பதற்குப் பதிலாக, **'any authority appointed under the Travancore District Municpalities Act'** என்றால் சரியாக இருக்கும். **'any authority competent at the date of the passing of that law'** என்று சொல்கிறபோது "தட் லா" என்றால் "எக்ஸ்ஸிடிங் லா" ஆகிறது. ஆக எல்லாச் சட்டங்களின் கீழும் அமைக்கும் அதிகாரத்தைப் பொறுத்த வரையில் இந்தச் சட்டத்தில் இருக்கக் கூடிய ஒரு அதிகாரம் என்ன என்று பார்க்கும்போது அது சரியாக இல்லை என்றுதான் நினைக்கிறேன்.

அடுத்தபடியாக, ஏழாவது உப பிரிவில்,

**'For the purpose of facilitating the application of the principal Act in the transferred territory, any court or other authority may construe the principal Act with such alterations . . .**

என்று அந்த அதிகாரத்தை மாற்றி அர்த்தம் செய்யக் கூடிய அதிகாரத்தை கோர்ட்டிற்கு விட்டிருக்கிறார்கள். அது அவ்வளவு பொருத்தமாக இராது. புதிதாக ஒரு சட்டம் கொண்டுவரும்போது, இந்தச் சட்டத்திலுள்ள சட்ட திட்டங்களுக்கு எல்லாம் ஒரு லீகல் கன்ஸ்ட்ரக்ஷன் கொடுக்க வேண்டும். அதன்படி அர்த்தம் செய்து காரியங்களை நடத்துவதுதான் சரியாக இருக்குமே தவிர, அவசியமானால் கோர்ட்டே மாறுதல் செய்து அந்தக் காரியங்களைப் பரிசீலனை செய்யலாம் என்ற முறையில் அந்த அதிகாரத்தை கோர்ட்டிற்கு வழங்குவது அவ்வளவு பொருத்தமாக இராது. ஏற்கனவே இருக்கக் கூடிய சட்டத்தை எடுத்துவிட்டுப் புதிய சட்டத்தை இங்கு கொண்டு வருகிறோம் என்று சொல்லும் நேரத்தில் புதிய சட்டத்தில் இருக்கக் கூடிய நுணுக்கங்கள்தான் அங்கு அமுல் செய்யப்பட வேண்டுமே

தவிர, அதற்குப் பதிலாக இடத்திற்குத் தக்கவாறு அவசியத்திற்குத் தக்க வாறு மாற்றி முடிவு செய்யக் கூடிய உரிமையை கோர்ட்டிற்குக் கொடுக்கிற போது, கோர்ட்டுகள் சாதாரணமாக "இன்டர்ப்ரெட்டேஷன்" செய்வது, இருக்கிற சட்டத்தை அர்த்தப்படுத்துவதற்குப் பதிலாக "லெஜிஸ்லேட்டிவ் authority" சட்டம் இயற்றும் அதிகாரத்தை கோர்ட்டிற்குக் கொடுப்பது போல் ஆகும். ஆகவே, இதை அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பரிசீலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதையெல்லாம் பரிசீலனை செய்து பார்த்துத்தான் இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. மிக முக்கியமாகக் கவனிக்க வேண்டியது, ஒரு சட்டத்தை மாற்றி இன்னொரு சட்டத்தை அதனிடத்தில் வைக்க வேண்டுமென்று விரும்புகிறோம். அப் படி மாற்றும்போது இடைக்காலத்தில் சில கஷ்டங்கள் ஏற்பட இருக்கின்றன. அப்பேர்ப்பட்ட கஷ்டங்களுக்குப் போதுமான சட்டங்கள் வகுக்க வேண்டு மென்பதைப் பற்றித்தான் யோசிக்க வேண்டியிருக்கிறது. அப்படிப் பார்க் கும்போது, 2, 3, 4, 7 இவைகள் எல்லாம் எந்த முறையில் அமைக்கப்பட் டால் இடைக்காலத்தில் ஏற்படும் தகராறுகளைத் தீர்த்து வைக்க முடியும் என்று கருதி இப்படி ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இப்பொழுது சில திருவாங்கூர் சட்டங்கள் இன்னும் கன்னியாகுமரியில் அமுலில் இருக்கின் றன. மற்றச் சட்டங்களில் திருவாங்கூர் முனிசிபல் சட்டத்தைப் பற்றிக் கண்டிருக்கலாம். அப்படி இருக்கும்பொழுது திருவாங்கூர் சட்டத்தை இப் பொழுது மாற்றுகின்ற காரணத்தினால், அந்தச் சட்டத்தை அங்கு குறிப் பிட்டிருப்பதற்கு எப்படி அர்த்தம் செய்வது என்று இந்தச் சட்டத்தில் இடம் கொடுக்க வேண்டியிருக்கிறது. அப்படிப் பார்க்கும்பொழுது, திரு வாங்கூர் முனிசிபல் சட்டம் என்று குறிப்பிட்டிருக்கிற இடங்களில் எல்லாம் 'பிரின்ஸிபல் ஆக்ட்' என்று கொள்ள வேண்டும் என்று சொல்லப்பட்டிருக் கிறது. கமிஷனர், ஹெல்த் ஆபீஸர், வேறு அதாரிடி பற்றி வேறு சட்டங் களில் வேறு மாதிரி குறிப்பிட்டிருக்கலாம். இப்பொழுது இருக்கக் கூடிய இன்னொரு சட்டத்தில் அப்படி குறிப்பிட்டிருக்கும்பொழுது, எந்த அதா ரிடியை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று சொன்னால், பிரின்ஸிபல் ஆக்ட் பிரகாரம் அதற்கு நிகரான புதிய அதாரிடி ஏற்படுத்தப்பட்டிருந்தால் அந்த அதாரிடி என்று எடுத்துக்கொள்ள வேண்டும். ஏழாவது உப பிரிவும், அதே மாதிரிதான். இப்பொழுது இந்தச் சட்டத்தை மாற்றிவிட் டோம். இப்பொழுது இங்கே இருக்கக் கூடிய சட்டத்தை அங்கே கொண்டு போகிறோம். இடைக்காலத்தில் ஏதாவது கோர்ட்டு விவகாரங்கள் வரும் பொழுது, இந்தச் சட்டத்தை எடுத்துக்கொள்ள அதற்கேற்ற சிறிய மாறு தல்களைச் செய்துகொள்ளலாம், but not affecting the substance என்று இதிலே சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே, இடைக்காலத்தில் ஏற் பட்டிருக்கிற சில தகராறுகளைத் தீர்த்து வைப்பது அவசியம் என்பதற்காகத் தான் 7-வது உப பிரிவிலே இம்மாதிரி சொல்லப்பட்டிருக்கிறது. இம் மாதிரி ஒரு சட்டத்தை மாற்றும்பொழுது என்னென்ன செய்ய வேண்டி இருக்கிறதோ அதை அனுசரித்துத்தான் இங்கேயும் செய்யப்பட்டிருக்கிறதே தவிர, புதியதாக ஒன்றும் சேர்க்கப்படவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

SRI S. LAZAR : Just an elucidation from the Hon. Minister, Sir.

MR. SPEAKER : I do not think the hon. Member is entitled to speak again.

SRI M. JAGANNATHAN : The hon. Member wants only an elucidation.

MR. SPEAKER : The hon. Member thinks that I should allow Sri S. Lazar to speak again. But under the rules in force, he cannot be allowed.

The clause was put and carried.

*Clause 4.*

MR. SPEAKER : The motion is—

That clause 4 do stand part of the Bill.

SRI T. S. RAMASWAMY PILLAI : நான் இந்தப் பிரிவை வன்மையாக எதிர்க்கிறேன். இங்குள்ள சட்டத்தை அங்கு அமுல் செய்வதுதான் இந்த மசோதாவின் நோக்கம். சென்னை ஜில்லா முனிசிபல் சட்டத்தை கன்னியாகுமரி ஜில்லாவுக்கு விஸ்தரிப்பதை நாங்கள் வரவேற்கிறோம். அம்மாதிரி மாறுதல் செய்யும்பொழுது பல சிக்கல்கள் ஏற்படலாம். அந்தச் சிக்கல்களை நீக்குவதற்கு நீங்கள் வழி வகை செய்யுங்கள். அதையும் நாங்கள் ஒத்துக்கொள்கிறோம். இங்கு இருக்கும் சட்டத்தை அங்கு மாற்றினாலும்கூட, அதே நேரத்தில் அங்குள்ள வரி விதிப்புக்கு இடம் கொடுக்கிறோம் என்று சொல்கிறீர்கள். அப்படி இல்லாமல் அங்கு ஏற்கனவே உள்ள வரிகளை ரத்து செய்ய வேண்டும். இங்குள்ள சட்டத்தை அங்கு கொண்டு போவதற்கு எதிர்ப்பு இருக்காது. ஒரு வேளை அந்தக் காரியத்தை செய்வதில் ஏதாவது சிக்கல் இருந்தாலும்கூட, அது நாளடைவில் சரியாகிவிடும். இப்பொழுது அங்கே ஏற்கனவே இருக்கும் விளம்பர வரி அப்படியே இருக்கும் என்று சொல்வது சரியல்ல. நான்காவது பிரிவில்,

"(1) Notwithstanding the repeal of the Travancore District Municipalities Act 1116 (Travancore Act XXIII of 1116), by section X 3, the advertisement tax which immediately before the commencement of this Act was being lawfully levied, assessed and collected by any municipality in the transferred territory for the purposes of the municipality may continue to be levied, assessed and collected by the municipality concerned in the transferred territory, . . . .

என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஏன் இந்த வரியை அங்கு மட்டும் வைக்க வேண்டும். இந்த ஷரத்தை நீங்கள் நீக்கிவிட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இந்த ராஜ்யத்தில் ஒரே மாதிரியான சட்டம் இருக்க வேண்டும், ஒரே மாதிரியான வரி விதிப்புக் கொள்கை இருக்கவேண்டும் என்று காரியங்களைச் செய்கிறோம். அப்படி இருக்கும்பொழுது இந்த பாரபட்சம் எதற்காக என்று நான் கேட்க ஆசைப்படுகிறேன். இது அரசியல் சட்டத்திற்கு விரோதமானது என்று நிச்சயமாக அமைச்சர் அவர்கள் ஒத்துக்கொள்வார்கள் என்று கருதுகிறேன். இங்கு அம்மாதிரி வரி போடுகின்ற நேரத்தில் வேண்டுமானால் அங்கும் போட்டுக்கொள்ளலாம். "காணத்துக்கு என்றால் வாய் திறக்கும், கடிவாளத்துக்கு என்றால் வாய் திறக்காது'' என்று சொல்லுவது போல வரி விதிப்பு இருந்தால் அதை அப்படியே வைத்துக்கொள்வது, இங்கேயுள்ள சௌகரியத்தை அங்கே செய்து கொடுப்பதில்லை என்ற முறையில் இதைச் செய்யக் கூடாது. இங்கே இருக்கும் சௌகரியத்தை அங்கேயும் ஏன் அமுல் செய்யக் கூடாது என்று கேட்க ஆசைப்படுகிறேன். ஆகவே, அமைச்சர் அவர்கள் 4-வது ஷரத்தை வாபஸ் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI M. P. SUBRAMANIAM : அவைத் தலைவர் அவர்களே, இந்த நான்காவது பிரிவை நண்பர் டி. எஸ். ராமசாமி பிள்ளை எதிர்த்தது போல் நானும் எதிர்க்கிறேன். கன்னியாகுமரி மாவட்டத்தை நான் சேர்ந்தவனல்ல, கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள சட்ட நிலைமையைப் பற்றி விரிவாகத் தெரிந்துகொள்வதற்கு எனக்கு வாய்ப்பு இல்லை என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். இருந்தாலும், நான்காவது பிரிவுப்படி, இந்தச் சட்டத்திலுள்ள நன்மைகளை அங்குள்ள மக்களுக்கும் தருவதற்கு வழி வகையில்லை. இதை விடக் கூடுதலான வரியை அந்த மாவட்டத்திலுள்ள மக்கள் சுமக்க வேண்டும் என்ற நியதி நான்காவது பிரிவுப்படி ஏற்படுகிறது. மற்றொரு ஷரத்துப்படி திருவாங்கூர் சட்டத்தை

முழுவதும் ரத்து செய்தாலும், அந்தச் சட்டத்திலுள்ள விளம்பர வரியை வசூல் செய்வதற்கு மட்டும் இந்த நான்காவது ஷரத்துப் பிரகாரம் விதி விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. அம்மாதிரி நம்முடைய ராஜ்யத்தில் மற்ற முனிஸிபாலிடிகள், பஞ்சாயத்துக்கள் எப்படி விளம்பர வரி விதிக்கவேண்டு மென்ற சட்டத்தை அமுல் நடத்தும்பொழுது, அங்கும் அந்தச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவரலாம். இங்கு அம்மாதிரி வரி இல்லாத நேரத் தில் அங்குள்ள மக்களுக்கு மட்டும் இம்மாதிரி வரி விதிக்க வேண்டுமென்ற நியதி இருப்பது தவறு என்பதைச் சுட்டிக் காட்டி, இந்த நான்காவது பிரிவை விட்டுவிட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: திரு ராம சாமிப் பிள்ளை அவர்கள் கன்னியாகுமரியிலிருந்து வந்தாலும், சில சமயத் தில் அவர் தன்னையும் மறந்து பேசும் ஒரு பழக்கம் ஏற்பட்டிருக்கிறது. கன்னியாகுமரியிலுள்ள முனிஸிபாலிடிகளுக்கு வருமானம் குறைவாக இருக்கிறது. சென்னை ராஜ்யத்திலுள்ள மற்ற இடங்களில் இருக்கும் நிலைமை அங்கு இல்லை. அதனால் இந்த விளம்பர வரியை அங்கு தொடர்ந்து வசூலிக்க வேண்டும் என்று கருதி இம்மாதிரி ஒரு ஷரத்து சேர்க்கப்பட்டிருக்கிறது. அதே மாதிரி இந்த விளம்பர வரியை இந்த ராஜ்யத்தில் மற்ற இடங்களிலும் வசூலிக்க வேண்டுமென்ற ஒரு நோக்கம் இருக்கிறது. அது பற்றி பரிசீலனை செய்ய வேண்டும். அநேக இடங்களில் இம்மாதிரி விளம்பர வரி வசூலிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டிருக் கிறார்கள். இது அதிகமாக ஏழைகளை பாதிக்கும் வரி அல்ல. ஏனென் றால், இது விளம்பரம் செய்பவர்கள் கொடுக்கும் வரிதான். இந்த வரி அந்தப் பகுதியில் விதிக்கப்பட்டால்தான் இப்பொழுது இருக்கும் செல வினங்களை ஒருவிதத்தில் சௌகர்யமாகச் சமாளிக்கலாம் என்ற ஒரு நல்ல கருத்தோடு தான் இந்த வரியை வசூலிப்பது என்று தீர்மானிக்கப்பட்டிருக் கிறது. இந்த வரியை வசூலித்தால் அங்குள்ள மக்களுக்கு வசதியாக இருக் கும் என்ற ஒரு நல்லெண்ணத்தோடு இது செய்யப்பட்டிருக்கிறது. அவர் களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுப்பதற்கு வாய்ப்பு ஏற்படும் என்ற ஒரு நல்ல கருத்தோடுதான் இந்த நான்காவது ஷரத்து சேர்க்கப் பட்டிருக்கிறது. ஆகவே, இதை ரத்து செய்வது ஏற்றுக்கொள்வதற்கில்லை. என்று சொல்லிக் கொள்ளுகிறேன்.

The clause was put and carried.

Clauses 5 to 7 were put and carried.

*Clause 8.*

MR. SPEAKER: The motion is—

That clause 8 do stand part of the Bill.

SRI S. LAZAR: இந்த பிரிவை பொருத்த வரைக்கும் 'Unless the context otherwise requires, the Madras General Clauses Act, 1891 (Madras Act I of 1891), shall apply for the interpretation of the principal Act as extended to, and in force in, the transferred territory.'

என்று கூறப்பட்டிருக்கிறது. 'மதருஸ் ஜெனரல் கிளாஸஸ் ஆக்டை' பார்க்கும்பொழுது, அதிலே மூன்று சாப்டர்கள் இருக்கின்றன. மூன்று சாப்டர்களில் முதல் சாப்டரில் மூன்ருவது பிரிவில்

'In this Act and in every Madras Act made after the commencement of this Act unless there be something repuugnant in the subject or context . . .'

என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதுபோல இரண்டாவது சாப்டரில் நான் காவது பிரிவில்

'This Chapter shall apply to all Madras Acts made after the commencement of this Act, unless a contrary intention appears in such Acts'.

என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதே போல் மூன்ருவது சாப்டரில் 12-வது பிரிவில் .

This Chapter shall apply to all Madras Acts unless a contrary intention appears in any such Act, but it shall not affect anything done or commenced prior to the commencement of this Act under any enactment now in force'.

என்று கூறப்பட்டிருக்கிறது.

3-30 p.m.

அப்படியிருக்கின்றபொழுது, சாதாரணமாக மற்றச் சட்டங்களில் எல்லாம் இருக்கின்ற நிலையைப் பார்த்தால் இந்த எட்டாவது கிளாஸை ஏற்றுக் கொள்வதற்கில்லை. இப்போது நிறைவேற்றப்படப்போகும் இந்தக் கிளாஸினுடைய நோக்கம் "ஜெனரல் கிளாஸ் ஆக்ட்"ல் இருக்கிறது. அந்த முறையில் பார்க்கும்போது இந்தப் பிரிவு அவசியம் இல்லை என்றே தோன்றுகிறது. ஆகவே, இதைப் பற்றி அமைச்சர் அவர்கள் சற்று விளக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI S. PAKKIRISAMI PILLAI : இந்தப் பகுதியில் பேசும் போது, சில முனிஸிபாலிடிகளில் வேலை செய்யும் சிப்பந்திகளுக்குக் கொடுக்கப்படும் சம்பள விகிதத்தைப் பார்த்தால்.......

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, This is only about the General Clauses Act, Sir.

MR. SPEAKER : The hon. Member should have raised the point earlier. He can speak at third reading stage of the Bill.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, to be on the safe side, this clause is put in. No doubt the General Clauses Act aslo provides for this. But to be on the safe side, this clause is there. I do not think there can be any real objection.

The clause was put and carried.

The schedule was put and carried.

Clause 1 and the preamble were put and carried.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Sir, I move—

That the Madras District Municipalities (Extension to the Transferred Territory) Bill, 1959 (L.A. Bill No. 1 of 1959) be passed.

MR. SPEAKER : Motion moved—

That the Madras District Municipalities (Extension to the Transferred Territory) Bill, 1959 (L.A. Bill No. 1 of 1959) be passed.

SRI S. PAKKIRISAMI PILLAI : தலைவர் அவர்களே, கடைசியாக இந்தச் சட்டத்தை நிறைவேற்றுவதற்கு முன்னல் சில சந்தேகங்கள் எழுகின்றன. அதாவது இதில் கண்டிருக்கும் சில முனிஸிபாலிட்டிகளின் கீழ் வேலை செய்யும் சிப்பந்திகளுக்கு மாறுபட்ட விகிதத்தில் சம்பளம் கொடுக்கப்பட்டு வருகின்றது. பொதுவாக எல்லா முனிஸிபாலிட்டி

களின்கீழ் இருக்கும் சிப்பந்திகள் சம்பளங்களும் ஒரே மாதிரியாக இல்லை. இந்தக் குறிப்பிட்ட முனிஸிபாலிட்டிகளில அதிகமாக இருக்கலாம். சில இடங்களில் குறைவாக இருக்கலாம். இம்மாதிரி இருந்துவருவதில் எல்லா இடங்களுக்கும் ஒரே மாதிரியாகச் சம்பள விகிதத்தை கொண்டு வரப்போகிறார்களா அல்லது, குறைந்த சம்பளம் கொடுக்கப்படும் இடங்களுக்கு எல்லாம் கூடுதலாக இருக்கும் சம்பள விகிதத்தை கொண்டு வரப்போகிறார்களா அல்லது குறைவாகச் சம்பளம் இருக்கும் பிரதேசங்களில் அலவன்ஸ் முறையில் ஏதாவது கொடுக்கப் போகிறார்களா, அல்லது எந்த முறையில் செய்யப் போகிறார்கள் என்பதற்கு விளக்கம் தருமாறு கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: இவ்விதம் இப்போது இருக்கின்ற சம்பளங்களை திடீரென்று மாற்றுவதற்கு முடியாது. பின்னால் புதிதாக ஆட்களை நியமிக்கும்போது இந்த விஷயத்தைப் பற்றி கவனிக்கலாம் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER: The question is—

That the Madras District Municipalities (Extension to the Transferred Territory) Bill, 1959 (L.A. Bill No. 1 of 1959) be passed.

The motion was put and carried and the Bill was passed.

MR. SPEAKER: The House will now adjourn and meet again at 8-30 a.m. to-morrow.

The House then adjourned.

